E-mail : omsakthieditorial@gmail.com
https://archive.org/search.php?query=omsakthi

# ஓம் சக்தி

ஆகஸ்ட் 2018
விலை ரூ.15

நிறுவனர் :
நா. மகாலிங்கம்



## நல்லூர் கந்தசாமி திருக்கோவில்

### யாழ்ப்பாணம்

# குமரகுரு

பொறியியற் கல்லூரி | வணிக மேலாண்மைப் பள்ளி | வேளாண்மைக் கல்லூரி
பன்முகக் கலை அறிவியல் கல்லூரி | சக்தி மேம்பாட்டுக் கல்வி மையம்

**ஒழுக்கமே வாழ்வு**



*"கல்வியைப் போலவே தொழில்களும் கடவுளுக்குச் சமமானவை. படிக்கும் காலத்திலேயே தொழிலுக்கான பயிற்சியை மாணவர்கள் பெறவேண்டும்."*

**அருட்செல்வர் டாக்டர்.நா.மகாலிங்கம்**





## குமரகுரு பன்முக கலை அறிவியல் கல்லூரி

அடிப்படை அறிவியலிலிருந்து சமூக அறிவியல் வரையும், இலக்கியத்திலிருந்து நுண்கலைவரையும் அனைத்தையும் வழங்கி, சமூக முன்னேற்றத்திற்கான ஆய்வுகளை முன்னெடுத்து, வாழ்நாள் முழுதும் கற்றலில் ஆர்வம் கொண்டு, உலகியலின் போக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் தனியாத ஆர்வம் கொண்ட இளைஞர்களை உருவாக்கும் கல்வி நிறுவனம்.



## குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி

150 ஏக்கர் வளாகத்தில் 6000 மாணவர்களுடனும் 400 பேராசிரியர்களுடனும் 34 ஆண்டுகளாக 'ஒழுக்கமே வாழ்வு' எனும் உயர் குறிக்கோளுடன், ஆராய்ச்சியையும் தொழில் இணைவையும் அடிப்டையாகக் கொண்டு தேசிய தர வரிசையில் முதல் நூறு நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.



## கே.சி.டி. வணிக மேலாண்மைப் பள்ளி

தொழிலகங்கள் மற்றும் சமூகத்தின் முன்னேற்றத்தில் முனைப்புடன் செயல்படும் இளைய தலைமுறைக்கான தலைவர்களை உருவாக்கும் இந்தியாவின் முதல் 100 நிறுவனங்களில் ஒன்றாகும் கல்வி, மனித வளம், மாணவர்கள் சேவை, ஐ.டி. தொழில்நுட்பம், தொழிலிணைவு, சமூக பங்களிப்பு போன்றவைகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படும் இணையற்ற நிறுவனம்.



## குமரகுரு வேளாண்மைக் கல்லூரி

தொழில்நுட்பம் மூலமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி, வேளாண்மையைத் தற்சார்புத் தொழிலாக மாற்றுவதற்குரிய வேளாண்மைக் கல்வியை, கிராமப்புற மாணவர்களுக்கு வழங்குவதை நோக்கமாகக் கொண்ட நிறுவனம்.

## ஆராய்ச்சி அமைப்புக்கள்

**மாணவர் ஆராய்ச்சிகள்**



GARAGE

re KCT'S PLATFORM FOR RESEARCH & EXPLORATION

**தொழிலக ஆராய்ச்சிகள்**







## போர்ஜ்

கே.சி.டி.யின் ஒர் அங்கமான 'போர்ஜ்' வளர்ந்து வரும் நவீனத் தொழில்நுட்பத்தையும், கணினி அறிவியலையும் இணைத்து ரோபோட் தானியங்கிஇயந்திரங்களையும் செயற்கை அறிவூட்டல் கருவிகளையும், டிஜிட்டல் வணிகத்தையும் வளர்த்தெடுத்துப் பல்வேறு தொழில் துறைகளிலும் இந்த நுண்ணறிவுப் பயன்பாட்டைக் கொண்டுசெல்லும் நோக்கில் செயல்படுகிறது.

குமரகுரு கல்வி வளாகம்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்
**0422 2661100**
**kct.ac.in**
**kctbs.ac.in**
**kclas.ac.in**
**kia.ac.in**





டாக்டர் நா. மகாலிங்கம்

# மீண்டும் காந்தியத்துக்கு...

காந்தியத்தைக் கைவிட்ட இந்தியத் தலைவர்களுக்கு இடித்து அறிவுரை சொல்பவர்கள் செல்வாக்கு இல்லாமல் போனதால், இத்தலைவர்கள் இந்தியாவின் மூலதனமான காந்தியத்தையே மறந்துவிட்டார்கள். அதன் விளைவு, இன்றைக்கு ஏற்பட்டிருக்கிற லஞ்சம், ஊழல், அதிகார துஷ்பிரயோகம் முதலியவைதான்.

காந்தியத்திற்குத் திரும்பினால் எளிய வாழ்க்கை. அதற்குத் தேவை சத்தியம், தியாகம். இதற்கு இந்தியத் தலைவர்கள் இன்றுவரை தயாராக இல்லை. 17 ஆண்டுகளுக்கு முன்பு அருட்செல்வர் வழங்கிய இந்தத் தூரத்து இடிமுழக்கங்களை இம்மாத 'சுரங்கம்' பகுதியில் கேட்கலாம்.

– இ.ஆர்.

நாம் சுதந்திரம் அடைந்த இந்த 54 ஆண்டுகளில் பாரதத்தில் முழுமையாக என்ன அழிந்து போயிருக்கிறது என்றால், அது வேறொன்றும் இல்லை – காந்தியம்தான். காந்தியம் அழிந்து போனதற்குக் காரணம், மத்தியிலும், மாநிலத்திலும் ஆட்சிக்கு வந்தவர்கள் காந்தியத்தைக் கடைப்பிடிக்க மறந்துவிட்டார்கள். அதனால்தான் காந்தியம் நமது அனைத்து வாழ்க்கைப் பரிமாணங்களிலும் பிரகாசிக்கவில்லை.

சர்வோதயம் முதலிய காந்திய நிறுவனங்களுக்கு மிகக் குறைந்த வட்டியில் அரசாங்கம் மூலதன உதவி செய்தது. மானியங்கள் வழங்கியது. காந்தியவாதிகள் இந்தியா முழுவதும் செல்ல ரயிலிலும், விமானத்திலும் இலவச டிக்கெட்டுகள் வழங்கப்பட்டன. இந்த இலவசச் சலுகைகள் காரணமாகத்தான் காந்தியவாதிகளே ஏமாந்து போனார்கள்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து ஒத்துழையாமை இயக்கம், வரிகொடா இயக்கம், சட்ட மறுப்பு இயக்கம், உப்புச் சத்தியாக்கிரகம், வெள்ளையனே வெளியேறு இயக்கம் ஆகிய அனைத்தையும் காந்திஜியின் தலைமையில் காந்தியவாதிகள் தீவிரமாக மேற்கொண்டு போராடினார்கள்.

இவ்வாறு, தீவிரமாக 30 ஆண்டுக் காலமாகப் போராடிய காந்தியவாதிகள், இந்த 54 ஆண்டுக் காலமாக ஆதிக்கப் போக்கை எதிர்த்துப் போராடுவதை ஏனோ விட்டுவிட்டார்கள். தொடர்ந்து காந்தியவாதிகள் போராடியிருந்தால், இந்திய தேசம் காந்தியப் பாதையிலிருந்து விலகியே இருக்காது.

நேருஜி 1962–இல் சீன



மகாத்மா காந்தி

ஆக்கிரமிப்பு நடந்தபோது ஓர் அறிவிப்பைச் செய்தார். ''காந்தியப் பாதையிலிருந்து விலகி நாம் வெகுதூரம் சென்றுவிட்டோம். இனி நமது முதல் வேலை மீண்டும் காந்தியப் பாதைக்குத் திரும்புவதுதான்'' என்றார்.

1947–லிருந்து 1962 வரை உள்ள 15 ஆண்டுக் காலத்திலேயே காந்தியப் பாதையிலிருந்து விலகிவிட்டோம் என்பதற்காக வருந்தினார். ஆனால் நாம் இன்று 2001–இல் நின்று கொண்டிருக்கிறோம். காந்தியப் பாதையிலிருந்து விலகி 15 ஆண்டுகள் அல்ல, 54 ஆண்டுகள் ஆகிவிட்டன.

காந்தியப் பாதையைவிட்டு விலகிச் சென்றுவிட்டதாக மனசாட்சிக்குள் உறுத்தல் ஏற்பட்டதால்தான் நேருஜி அவ்வாறு குறிப்பிட்டார். இன்று மனசாட்சியே இல்லாத தலைவர்கள் மலிந்துவிட்டார்கள். காந்திஜியைப் பற்றி யாரும் கவனத்தில் கொள்வதாகத் தெரியவில்லை.

அதன் விளைவாக, இன்று நாம் எதனை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம் என்றால், நமது விவசாயம் வீழ்ச்சி அடைந்துவிட்டது. நமது நூற்பாலைகள் நலிந்துவிட்டன. நமது ஏற்றுமதி குறைந்துவிட்டது. தொழில் துறையில் மந்தநிலை ஏற்பட்டுள்ளது.

ஆண்டுக்கு 8 சதவிகித மொத்த உள்நாட்டு உற்பத்தி வளர்ச்சி (ஜி.டி.பி.) என்று நிர்ணயித்தோம். ஆனால், 6 சதவிகித வளர்ச்சிதான் சாத்தியமாகியுள்ளது. ஆந்திர விவசாயிகள் பலர் கடன் சுமை தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொண்டார்கள். உபரி சர்க்கரை உற்பத்தியினால் விலை வீழ்ச்சி அடைந்து, சர்க்கரைத் தொழிலும் நலிவடைந்துவிட்டது.

நேருஜிக்குப் பிறகு பிரதமரான லால்பகதூர் சாஸ்திரி அகால மரணமடையாமல் இருந்திருந்தால், காந்தியப் பாதையில் நமது நாடு பயணம் செய்திருக்கக்கூடும். லால்பகதூர் சாஸதிரியை நாம் இழந்த பிறகு, இந்திராஜியின் ஆட்சி 11 ஆண்டுகள் நமது நாட்டில் நடந்தது.

இந்திராஜி பிரதமராக இருந்தபோது அவரது சரித்திரச் சாதனையாக அமைந்தது கிழக்கு வங்காளத்தை மீட்டுப் பங்களாதேசமாக உருவாக்குவதற்குச் செய்த நமது ராணுவ உதவிதான். இந்திராஜிக்குப் பிறகு தேசத்தின் பொருளாதார வளர்ச்சி விகிதம் மேலும் மேலும் குறைந்ததே தவிர, அதிகரிக்கவில்லை. இந்திரா பிரதமராக இருந்தபோது 1980–இல் நமது கடன் ரூ 50,000 கோடிதான். அதனையே பெரிய கடனாக நினைத்து வேதனைப்பட்டோம்.

திருமதி இந்திராவுக்குப் பிறகு திரு. ராஜீவ் காந்தி, மொரார்ஜி தேசாய், சரண்சிங், வி.பி.சிங், சந்திரசேகர், பி.வி. நரசிம்மராவ், தேவேகவுடா, ஐ.கே. குஜ்ரால், வாஜ்பாய் ஆகிய இத்தனை பிரதமர்களுடைய ஆட்சியிலும் வெளிநாட்டுக் கடன் என்பது படிப்படியாக வளர்ந்து இன்றைக்கு ரூ. 12 லட்சம் கோடி என்கிற அளவில் நிற்கிறது.

இக்கடனுக்காக நமது அரசு ஆண்டுதோறும் செலுத்துகிற வட்டி மட்டும் ரூ 1 லட்சம் கோடி.

ஆண்டுக்கு ரூ. 1 லட்சம் கோடி கடன் வாங்கித்தான் நமது அரசாங்கம் நடைபெற்று வருகிறது. இனி வட்டித்தொகை செலுத்துவதற்கும் கடன் வாங்கியாக வேண்டிய நிலையில் உள்ளோம்.

காந்தியத்தினுடைய முதல் அம்சமே இந்தியாவில் கிராமங்களை அபிவிருத்தி செய்வதுதான். நாம் இதற்கு நேர்மாறாக நகரங்களைத்தான் அபிவிருத்தி செய்துள்ளோம். அதற்காக, உற்பத்தியாகும் மின்சாரத்தை நகரங்களுக்கே வழங்கினோம். அதனால் தொழிற்சாலைகள் நகரங்களில் பெருகின. மருத்துவமனைகள், கல்விக்கூடங்கள், அலுவலகங்கள் இதுபோன்ற பெரிய பெரிய நிறுவனங்கள் நகரங்களில் வளர்ந்தன.

குறிப்பாக, இந்தியாவில் 8 பெரிய நகரங்கள். இந்த 50 ஆண்டுகளில் ராட்சத வளர்ச்சி பெற்றுள்ளன. டெல்லி, மும்பை, கொல்கத்தா, சென்னை, ஹைதராபாத், பெங்களூர், கான்பூர் மற்றும் கொச்சி ஆகிய 8 நகரங்கள்தான் அதிக வளர்ச்சி பெற்றுள்ளன. இவற்றைச் சார்ந்து மேலும் 400 நகரங்கள் வளர்ந்துள்ளன.

உண்மையில், காந்தியத்தை உலகில் முதன்முதலாக அமல்படுத்திய தலைவர் ஒருவர் உண்டென்றால், அவர் வேறு யாருமல்ல, மறைந்த

சீனத் தலைவர் மா.சே.துங் அவர்கள்தான். சீன தேசத்தில் 60 லட்சம் பேரிடம்தான் விவசாயப் பூமிகள் முழுவதுமாக இருந்து வந்தன. அவர்களையெல்லாம் வெளியேற்றினார். விவசாயப் பூமிகளைச் சமூக மயமாக்கினார். சீன கிராமங்கள் முழுவதையும் தன்னிறைவு உடையதாக மாற்றினார்.

கல்லூரிகளுக்கும், உயர்நிலைப் பள்ளிகளுக்கும்கூட விடுமுறை அளித்து, மாணவர்கள் கிராமங்களுக்குச் சென்று விவசாயத்தில் வேலை செய்யும்படி ஆக்கினார். உணவுப் பஞ்சம் சீன தேசத்தில் உருவாகவில்லை. தொழில் துறையில் நவீனத் தொழில்நுட்பங்கள் உள்ளே வர அனுமதித்தார். இதன் விளைவாக, இன்று சீன தேசம் மின்னணுப் பொருள்கள் பலவற்றை மலிவாக உற்பத்தி செய்து உலகச் சந்தையில் போட்டி போடுகிறது. இந்தியச் சந்தையில் நமக்கு மிகப்பெரிய சவாலாகச் சீனப் பொருள்கள் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன.

காந்திஜி அன்றைக்கு ஒவ்வொரு கிராமமும் ஒரு கிராமக் குடியரசாக வேண்டும் என்று கருதினார். அதில் ஒரு சிறிய திருத்தம் செய்யலாம். கிராமங்கள் என்பதைப் பஞ்சாயத்து ஒன்றியம் (பஞ்சாயத்து யூனியன்) என்று மாற்றிக் கொள்ளலாம்.

பஞ்சாயத்து ஒன்றியத்தையும் இதேபோல மாநகராட்சி, நகராட்சிகளையும் நிதி அதிகாரங்களோடும், நிர்வாக அதிகாரங்களோடும் உருவாக்கிவிட்டால், மாநில அளவில் சட்டசபைகளுக்கு வேலை குறையும். ஏன்? முதலமைச்சரின் பணிகூடச் சிந்தித்துத் திட்டமிட வேண்டிய பணியாக மட்டுமே இருக்கும்.

மாநில அரசுகள், பஞ்சாயத்துகளுக்கும் உள்ளாட்சிகளுக்கும் அதிக அதிகாரங்களை வழங்க வேண்டும். மத்திய அரசு அதிகாரங்களைக் கேட்கும் மாநில அரசுகள், தங்கள் மாநிலத்திலுள்ள உள்ளாட்சிகளுக்கு அதிகாரங்களைத் தர மறுக்கின்றன. பஞ்சாயத்து ராஜ் சட்டம் இயற்றி 8 ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்னும் அதிகார மாற்றங்கள் நடக்கவில்லை. ஆரம்பக் கல்வி, சுகாதாரம், பாசனநீர் நிலைகள், சிறு அணைகள், சாலைகள், தெரு விளக்கு, ஆசிரியர் நியமனம்




இவ்வாறு 29 பிரிவுகள் இனம் காணப்பட்டுள்ளன. இவற்றை உள்ளாட்சிகள் பெற்றால்தான் உண்மையான கிராம அபிவிருத்தி ஏற்படும்.

இத்தனை சிக்கல்களும் தீர வேண்டுமென்றால் அரசமைப்புச் சட்டத்தை முழுமையாக மாற்றினால்தான் சாத்தியம். தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளுநர்கள்தான் அமெரிக்காவில் இருக்கிறார்கள். முதலமைச்சர்கள் இல்லை. முழுமையாக மாற்ற வேண்டும் என்றால், அமெரிக்க அரசியலமைப்புச் சட்டத்தைப் போல் மாற்றலாம். இப்போது நாம் பின்பற்றுவது அதிகமாகப் பிரிட்டிஷ் மரபுகளையும் சட்டங்களையும்தான்.

காந்தியத்தை மீண்டும் அமல்படுத்த வேண்டுமென்றால், அத்தகைய ஓர் அரசமைப்புச் சட்டம் இருந்தால்தான் சாத்தியம். விவசாயத்திலும் நெசவிலும் அதிகமாக வேலைவாய்ப்பு உருவாக்கும் வகையில் சிறு இயந்திரங்களை உபயோகப்படுத்தலாம். கிராமத்திற்கு மின்சாரம் வந்தால் கிராமக் கைத்தொழில்களுக்கு உபயோகப்படுத்தலாம் என்றார் காந்திஜி.

காந்தியம் என்பது அதிகாரப் பகிர்வு, அதிகாரக் குவிப்பு அல்ல. கிராம அபிவிருத்தி, நகர அபிவிருத்தி அல்ல. எளிய வாழ்க்கை முறை. ஆடம்பர வாழ்க்கை முறை அல்ல. சமய சமத்துவம், தாய்மொழிக் கல்வி, தொழில் கல்வி.

சுருக்கமாகச் சொன்னால், காந்திஜி கற்றுத் தந்த சுதந்திரம் என்பது, சுய கட்டுப்பாடுகள்தான். உரிமைகளைவிடக் கடமைகளை நினைவூட்டும் கர்ம யோகமே காந்தியம்.

தமிழ் இணைய முதல் மாநாடு, 1997-ஆம் ஆண்டு, மே மாதம் சிங்கப்பூரில் ‘தமிழ் இணையம் 97’ என்ற பெயரில் நடைபெற்றது. இரண்டாவது தமிழ் இணைய மாநாடு,



பேரா. மு. பொன்னவைக்கோ

# கனவு நிறைவேறுமா?

‘தமிழ் இணையம் 99’ என்ற பெயரில் சென்னையில் 1999-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நடைபெற்றது.

இம்மாநாட்டை அடுத்து, ‘தமிழ் இணையம் 2000’ மாநாடு இலங்கையில் நடத்தத் திட்டமிடப்பட்டு இருந்தது. அந்த மாநாட்டின் முன்னேற்பாட்டுக் கூட்டம் 2000-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இலங்கையில் நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் சுவிட்சர்லாந்து நாட்டிலுள்ள முனைவர் கு. கல்யாணசுந்தரம் அவர்கள், உலக அளவில் ஓர் இணையத் தமிழ் ஆய்வுக்குழு அமைக்க வேண்டுமென வரைந்து அனுப்பியிருந்த திட்டத்தை திரு. அருண்மகிழ்நன் முன்மொழிந்தார். அந்தக் கலந்துரையாடலில் பிறந்ததுதான் ‘உத்தமம்’ என்னும் உலகத் தமிழ்த் தகவல் தொழில்நுட்ப மன்றம்.

இம்மன்றத்திற்குப் பெயரிடும் பெருமை எனக்குக் கிட்டியது, நான் பெற்ற பேறு. அந்த மாநாட்டை அடுத்து சிங்கப்பூரில் 2000-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 22-24-ஆம் நாட்களில் நடைபெற்ற தமிழ் இணைய மாநாட்டில் ‘உத்தமம்’ (INFITT) தொடங்கி வைக்கப்பட்டது.

இணையத் தமிழின் ஆய்விற்காக உத்தமத்தில் தமிழ்க் கலைச்சொல் ஆக்கல், யூனிகோடு தமிழ் (UNICODE Tamil) ஆய்வு, இணையதளத் தமிழ் முகவரி வடிவமைத்தல், தமிழ் வரிவடிவக் குறியீட்டுத் தரப்பாடு, ஆங்கில வரிவடிவத் தமிழ் எழுத்துத் தரப்பாடு, தமிழ் எழுத்துரு அறிதல் (Tamil OCR) லினக்ஸில் தமிழ் (Tamil in Linux), தமிழ் அனைத்து எழுத்துருத் தரம் அமைத்தல் ஆகிய பணிகளுக்காக எட்டு ஆய்வுப் பணிக் குழுக்கள் (Working Groups) நிறுவப்பட்டன.

பணிக்குழுக்களின் செயல்பாடுகள் பற்றியும் கணித்தமிழ் மற்றும் இணையத் தமிழ் வளர்ச்சி பற்றியும் ஒவ்வோராண்டும் உத்தமம் நடத்திய தமிழ் இணைய மாநாடுகளில் கலந்தாய்வு செய்யப்பட்டுள்ளன. இதுவரை (1997-லிருந்து 2017 வரை) சிங்கப்பூர், தமிழ்நாடு, மலேசியா, அமெரிக்கா, ஜெர்மனி, புதுச்சேரி, கனடா ஆகிய நாடுகளில் நடைபெற்றுள்ளன.

எனவே 20 ஆண்டுகளில் 20 மாநாடுகளுக்குப் பதிலாக 16 மாநாடுகள் மட்டுமே நடைபெற்றுள்ளன. இப்போது 17-ஆவது மாநாடு தமிழ் நாட்டில், கோவையில் தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது.

இந்த 20 ஆண்டுகளில் நாம் சாதித்தவை என்ன என்று எண்ணிப் பார்க்க வேண்டிய நேரம் இது. ஏராளமான தமிழ் இணைய தளங்கள் பிறந்துள்ளன. பல்வேறு எழுத்துருத் தரப்பாடுகளிலிருந்து இரண்டு எழுத்துருத் தரப்பாடுகள் – ஒருங்குறித் தமிழ் (Unicode Tamil) அனைத்து எழுத்துருத் தரப்பாடு (TACE - 16) ஆகிய இரண்டு தரப்பாடுகள் தமிழக அரசால் அரசின் தரப்பாடுகளாக ஏற்கப் பெற்றுள்ளோம். சொற்செயலிகள், தமிழ் எழுத்துரு அறி மென்மம் (Tamil OCR), பேச்சுத் தமிழை எழுத்துத் தமிழாக்கும் மென்மம், எழுத்துத் தமிழைப் பேச்சுத் தமிழாக்கும் மென்மம், தமிழ் இயல்மொழிச் சொல்லாக்கம் முதலிய பல்வேறு மென்பொருள்கள் உருவாக்கப் பெற்றுள்ளோம்.

உலகு தழுவி வாழும் தமிழ் மக்களும், தமிழில் ஈடுபாடு உள்ள மற்றையோரும், தமிழ் மொழியைக் கற்கவும், தமிழர் வரலாறு, கலை, இலக்கியம், பண்பாடு பற்றி அறிந்து கொள்ளவும், மழலைக் கல்வி முதல் பட்டப் படிப்பிற்கான பாடப் பொருள்களையும், மிகப்பெரிய தமிழ் மின் நூலகத்தையும் தன்னுட் கொண்டு தமிழ்ப்பணி


சர்வதேச தமிழ் இணைய மாநாட்டில் கலந்துகொண்ட கணினி வல்லுநர்கள்

ஆற்றி வரும் சிறந்ததொரு தமிழ் இணையக் கல்விக் கழகம் கிடைக்கப் பெற்றுள்ளோம்.

ஆனால், இப்படைப்புகளெல்லாம் மக்களைப் போய்ச் சேர்ந்துள்ளனவா? தமிழை ஆட்சி மொழியாகவும் வழக்கு மொழியாகவும் கொண்டுள்ள நாடுகளின் அரசுகள் ஏற்றுச் செயல்படுத்துகின்றனவா? இல்லையெனில் அதற்கு 'உத்தமம்' என்ன செய்ய வேண்டும்? எப்படிச் செயல்பட வேண்டும்? என்பவற்றை இம்மாநாட்டில் கலந்தாய்வு முடிவு செய்ய வேண்டிய நிலையில் உள்ளோம். மேலும் இணையதளத் தமிழ் முகவரி வடிவமைக்கும் பணி இன்னும் நிறைவு பெறாமல் உள்ளது. இப்பணி நிறைவுபெறச் செய்ய வேண்டியவை பற்றி முடிவெடுக்க வேண்டிய நிலையில் உள்ளோம்.

இணையப் பயன்பாட்டிற்கு ஒருங்குறி தமிழ் எழுத்துரு (Unicode Tamil) தரப்பாடு என்றும், பிற பயன்பாடுகளுக்கு அனைத்து எழுத்துருத் தரப்பாடு (TACE - 16) என்றும் தமிழக அரசு அறிவித்துள்ளது. எல்லாப் பயன்பாடுகளுக்கும் அனைத்து எழுத்துருத்தரப்பாட்டின் (TACE - 16) பயன்பாடு கூடினால், ஒருங்குறி சேர்த்தியம் (Unicode Consortium) ஒருங்குறித் தளத்தில் 32– பிட்டு அமைப்பில் இந்த அனைத்து எழுத்துருத் தரப்பாட்டினைச் (TACE - 16) சேர்க்க இசைவளித்துள்ளது. எனவே, அனைத்து எழுத்துருத் தரப்பாட்டினைப் (TACE - 16) பல்வேறு பயன்பாடுகளில் செயல்படுத்தி அதன் பயன்பாட்டினைப் பெருக்குமாறு கணித்தமிழ் அன்பர்கள் அனைவரையும் அன்புடன் கேட்டுக் கொள்கின்றேன்.

இன்று ஜப்பான், கொரியா முதலிய நாடுகளில் செயல்படும் கணிப்பொறிகளுக்கு ஆங்கிலம் தெரியாது. ஜப்பான், கொரியா மொழிகளில் கொடுக்கப்படும் கட்டளைகளை மட்டுமே புரிந்து கொண்டு செயல்படுகின்றன. உலக மொழிகளின் தாய்மொழியாகிய தமிழ்மொழிக் கட்டளைகளால் இயங்கும் கணிப்பொறியை வடிவமைக்க இயலாதா என்ன? அனைத்து எழுத்துருத் தரப்பாடு (TACE - 16) உருவாகும்வரை இயலா நிலை இருந்தது. இப்பொழுது அத்தடை இல்லை. இனி அப்படியொரு கணிப்பொறியைக் காண்பது எப்போழ்து?

Assembler போன்ற அமைப்புச் செயல்மொழி (System Software), Windows போன்ற இயக்க மென்பொருள் (Operating System) ஆகியவற்றை அனைத்து எழுத்துருத் தரப்பாட்டில் (TACE - 16) வடிவமைத்து ஒரு முழுமையான தமிழ்க் கணினியைப் படைத்து வழங்குபவருக்கு உரூபா ஒரு இலக்கம் பரிசாக வழங்கப்படும் என்று மலேசியாவில் நடைபெற்ற 12–ஆவது தமிழ் இணைய மாநாட்டின் போழ்தே அறிவித்திருந்தேன். ஆனால் இன்றுவரை அது நிகழவில்லை. விரைவில் அப்படியொரு முழுமையான தமிழ்க் கணினி பயன்பாட்டிற்கு வரவேண்டும் என்பது எனது பேரவா. என் கனவு நிறைவேறுமா?

**– பேரா. மு. பொன்னவைக்கோ**




17-வது உலகத் தமிழ் இணைய மாநாட்டு மலர் வெளியீடு

# புத்தம் புதிய கலைகள் சேர்ப்பீர்!

உலகத் தமிழ் தகவல் தொழில்நுட்ப மன்றம் (உத்தமம்) பதினேழாவது உலகத் தமிழ் இணைய மாநாட்டினைக் கொங்கு மண்டலமாம் கோவையில் நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்துள்ள தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்தினரோடு குமரகுரு தொழில் நுட்பக் கல்லூரியும் இணைந்து கொள்வதிலே பெருமை கொள்கிறோம்.

உலக அரங்கில் எல்லாத் துறைகளிலும் நவீனத் தொழில்நுட்பம் மிக வேகமாக வளர்ந்து வரும் இக்கணினி யுகத்தில், இணைய தள இயக்கத்தில் தமிழ் மொழியானது முன்னணியில் உள்ள போதிலும், கணினியின் 'ஆபரேடிங் சிஸ்டத்தில்' இன்னும் தமிழ் இடம்பிடிக்கவில்லையாதலால், தமிழ் சார்ந்த செயலி, இணையம் ஆகியவற்றைப் பலருக்கும் பயன்படும் வகையில் பரவலாக்க இயலாமையே நீடிக்கிறது.

மேலும் தமிழில் பல்துறைப் படைப்புகளையும், இணைய வழியில் கொண்டு செல்லத் தடையாக உள்ளவற்றைப் பற்றியும், அவற்றைத் தீர்வு செய்ய வேண்டியது பற்றியும் விரிவான ஆராய்ச்சிகளும் வினையாற்றலுமே விரைவான தேவையாகும்.

தமிழ்மொழி, இலக்கியம், கலாச்சாரம் ஆகியவற்றிற்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்த அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள், "தேசத்தை இழந்தாலும்கூட மீண்டும் பெறலாம். ஆனால், மொழியை இழப்பது விதையை இழப்பது போன்று – நாம் விருத்தியடையவே முடியாது. எனவே, அறிவியல் தமிழை வளர்ப்பதோடு இணைய வழியில் தமிழை எடுத்துச் செல்வதும் உடனடித் தேவையாகும்" என்ற கருத்தை அவர் வலியுறுத்தி வந்ததும் இம்மாநாட்டின் நோக்கத்திற்கு வலுவாக அமைந்துள்ளது.

இவற்றைக் கருத்தில் கொண்டுதான் தமிழ் அறிஞர்களும் தொழில்நுட்ப வல்லுநர்களும் ஒருங்கிணைந்து 'உத்தமம்' அமைப்பின் மூலமாக உலகின் பல்வேறு நாடுகளிலும் புலம் பெயர்ந்த தமிழ் மக்களோடிணைந்து பத்து மாநாடுகளை நடத்திப் பயனுள்ள பல செயல்களைச் செய்துள்ளனர். இவ்வகையில் இந்தியத் திருநாட்டில் பதினேழாவது மாநாடு நடைபெற்றுள்ளது. இம்மாநாட்டில் அறுபதுக்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகள் விவாதிக்கப்பட்டுள்ளன.

"புத்தம் புதிய கலைகள் – பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்...
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்!"

எனும் பாரதியின் கட்டளையை நிறைவேற்றும் வகையில் கணினி யுகத்தில் தமிழ்ப் பயன்பாட்டின் கனவை மெய்ப்பட வைக்கும் 17–ஆவது உலகத் தமிழ் இணைய மாநாட்டின் முயற்சிகள் அனைத்தும் செயல்வடிவில் வெற்றிபெற வேண்டும்.

**– சங்கர் வாணவராயர்**

# அருள்மிகு தங்கநாயகி அம்மன் திருக்கோவில் சண்டியாகம்

அருள்மிகு தங்கநாயகி அம்மன் விழாவில் வாழ்த்துரை வழங்கும் இந்துசமய மகளிர் மன்றத்தின் தலைவி திருமதி சாந்தா வீரராகவன். அருகில் தலைவர் சின்னியகவுண்டர்.

கோவை மாவட்டம் சூலூர்ப் பகுதியில் அரசூரிலுள்ள அருள்மிகு தங்கநாயகி அம்மன் திருக்கோவிலின் மகாசண்டியாகமும் 58–வது ஆண்டு விழாவும், சண்டியாக மண்டபத் திறப்பு விழாவும் என முப்பெரும் விழாவாக 9, 10–7–2018 ஆகிய இரண்டு நாட்கள் நடந்தது.

இவ்விழாவில் சண்டியாகத்தைத் தொடங்கிவைத்துச் சிறப்பிக்க சக்தி சுகர்ஸ் செயல் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் இசைவு தந்திருந் தார். ஆனால், தில்லியில் சர்க்கரை ஆலைகள் சம்பந்தப்பட்ட மத்திய அரசு ஆலோசனைக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக தில்லிக்குப் புறப் பட்டுச் சென்றதால், அவரால் இவ் விழாவில் கலந்து கொள்ள இயலாமல் போய்விட்டது.

58 ஆண்டுகளுக்கு முன்பு அருட் செல்வரின் திருக்கரங்களால்



மகா சண்டியாகத் தொடக்க விழாக் காட்சி




மகா சண்டியாக விழாவில் சிறப்புச் செய்யப்பட்ட திரு. ம. மாணிக்கம் அவர்களுக்கு வழங்கப்பட்ட நினைவுப் பரிசு

தொடங்கி வைக்கப்பட்டு இத் திருக்கோவில் உருவானது. அவர் இல்லாத இக்குறையை நீக்கும் வகையிலும், டாக்டர் ம. மாணிக்கம் அவர்களின் சிறப்பான நிர்வாகத் திறனால் கவரப்பட்ட காரணத்தாலும் கோவை மாவட்ட மேனாள் காங் கிரஸ் கட்சித் தலைவரும், விஜய லட்சுமி டெக்ஸ்டைல்ஸ் அதிபருமான திரு. ஆர். சின்னியகவுண்டர் அவர் கள், டாக்டர் ம. மாணிக்கம் அவர் களை மகாசண்டி யாகத்தைத் தொடங்கி வைக்க அழைத் திருந்தார். அது இயலாமல் போனது திரு. சின்னிய கவுண்டர் அவர்களுக்கு ஒரு வகையில் ஏமாற்றமாக இருந்தாலும், இன்னொரு வகையில் அதை நிறைவு செய்வதற்கு அடுத்த விழா விற்கு விரைவில் அவரை அழைக்கப் போவதாக சண்டியாக விழாவின் தலைமை உரையில் குறிப் பிட்டார்.

விழாக் குழுவினர் திரு. கே. சண்முகக்கவுண்டர், திரு.எம். கணேஷ் குமார், திரு. கே. சுப்பிரமணிய கவுண்டர், திரு. வி. குப்புசாமிக் கவுண்டர், திரு. எஸ். சண்முகக் கவுண்டர், செயலாளர் திரு. ஆர். சுப்பிர மணியம், திரு. ஆர். சிவசாமி, திரு. இரா. பழனிச்சாமி ஆகி யோர் முன்னிலை வகித்துச் சிறப்பித்தனர்.

விழாவிற்கான வரவேற்


மகா சண்டியாகத்தில் உள்ள மகா ஹோம யாகம்

புரையை அரசூர் உள்ளாட்சி அமைப் பின் மேனாள் உறுப்பினரும், கவிதை அரசருமான திரு. ஆர்.என். லோக



அருள்மிகு தங்கநாயகி அம்மன் மகா சண்டியாக விழாவில் ‘ஓம் சக்தி’ இணையாசிரியருக்குத் திருக்கோவில் தலைவர் திரு. சின்னியகவுண்டர் நினைவுப் பரிசு வழங்கிய காட்சி.

நாதன் அவர்கள் மிகச் சிறப்பாகப் பேசி வரவேற்றார்.

இந்து சமய மகளிர் மன்றத்தின் தலைவி திருமதி. சாந்தா வீரராகவன் அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்.

வாழ்த்துரை வழங்கிய 'ஓம் சக்தி' மாத இதழின் இணையாசிரியர் திரு. பெ. சிதம்பரநாதன் அவர்கள் பேசுகையில், அருட்செல்வரின் ஆன்மீகப் பணிகளில் அம்மன் வழிபாடு முக்கிய இடம்பெற்றுள்ளதைக் குறிப்பிட்டார். சக்தி, பகவதி, சாமுண்டீஸ்வரி, அருள்மாரியம்மன் ஆகிய தாய்த் தெய்வங்களை அருட்செல்வர் போற்றிய பாங்கினையும், தனது நிறுவனங்களுக்கு அருள்மிகு தாய்த் தெய்வங்களின் பெயர்களைச் சூட்டியுள்ளதையும் எடுத்துரைத்தார்.

மேலும் பேசுகையில், டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் தொடங்கியுள்ள 'வெல்னஸ்' மருத்துவமனையைப் பற்றியும், வைட்டமின் 'சி' உள்ள 'மிராக்கிள்' பானத்தை டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் உருவாக்கிய ஆராய்ச்சியையும் விரிவாகக் குறிப்பிட்டார். அதன்பின்னர் சண்டியாகம் சரியாக 9 மணியளவில் தொடங்கி, 1 மணியளவில் நிறைவு பெற்றது.

சண்டி யாகத்திற்கான யாக குண்டம் சுமார் 10 அடி அளவில் இருந்தது. இரண்டு டன் அளவிற்கு சந்தன மரம், புளிய மரம் முதலிய புகை அதிகம் வராத மரத்துண்டுகள்யாக குண்டத்தில் இடப்பட்டன. அருள்மிகு தங்கநாயகி அம்மனுக்கு அர்ச்சனைகள் நடந்தன.

ஏராளமான பனங்காடை குல வேளாளர் சமூக மக்கள் திரண்டு வந்திருந்தனர். குறிப்பாக, தாய்க் குலத்தார் யாக குண்டத்தில் இடுவதற்காகப் பட்டு வஸ்திரங்களை வரிசையாக ஏந்தி நின்றார்கள். அன்னதானம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.


தங்கநாயகி அம்மன் மகா சண்டியாக விழாவில் கலந்துகொண்ட அரசூரைச் சுற்றியுள்ள பக்தர்கள்.

இக்கோவிலில் நடைபெறும் திருமணங்களுக்கு ஏற்ற பல வசதிகள் சிறப்பாக உள்ளன. அரசூர் வட்டார மக்கள் இந்த ஆலயத்தைப் போற்றிப் பாதுகாப்பதில் மிகவும் ஆர்வத்தோடு உள்ளனர்.

பனங்காடைத் தாய்த் தெய்வம் தங்கநாயகி அம்மனுக்கான சண்டியாகம் நமது 13 பிழைகளையும் 12 தடைகளையும் நீக்கி நம் வாழ்வை வளப்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. ஏழேழு தலைமுறைப் பாவம் தீரும் என்பது இவ்வட்டார மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும். வம்சம் வாழையாகும். தினமொரு வளர்ச்சி வரும் என்பது இவர்களுக்குக் கிடைத்த வரமாகும்.

இந்தச் சண்டி யாகத்தை மிகச் சிறப்பாக நடத்திய சிவஸ்ரீ ஐ.ஆர். நாகேஸ்வரசிவம் குழுவினர் மிக அழகாகப் பாடல்களையும், அருமையான பக்திப்பூர்வமான அர்ச்சனைகளையும் செய்தது மெய்யன்பர்களுக்கு மகிழ்ச்சி தந்தது.

– ந.நி.

கட்டுரை

# உலகத் தமிழ் இணைய மாநாடு

கன்னித் தமிழ் வரலாறு கல்வெட்டில் தொடங்கிச் செப்பேடு, ஓலைச் சுவடி, அச்சு என வளர்ந்து, இன்று கணினித் தமிழாக மலரும் காலகட்டத்தில் நாம் வாழ்ந்து வருகிறோம். இந்த வரலாற்றுப் பாதையில் 2000–ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட உலகத் தமிழ் தகவல் தொழில்நுட்ப மன்றம் (உத்தமம்) தமது 17–வது உலகத் தமிழ் இணைய மாநாட்டினை 2018–ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6 முதல் 8 வரை மூன்று நாட்கள் நடத்தியது. இதுவரை உறுதுணையாய் இருந்தன. தமது ஒவ்வொரு மாநாட்டினையும் அதற்குரிய கருப்பொருளுடன் நடத்தும் உத்தமம் அமைப்பினர் இந்த மாநாட்டினை "அறிவுசார் தமிழ்த்தேடு பொறிகள்" எனும் கருப்பொருளுடன் நடத்தினர்.

உத்தமம் நிறுவனத்தைச் சேர்ந்த பிரான்சு நாட்டில் வாழும் முனைவர் அப்பாசாமி முருகையன், சுவிட்சர் லாந்து நாட்டில் வாழும் பேராசிரியர் கல்யாணசுந்தரம், அமெரிக்காவில் வாழும் முனைவர் வாசு அரங்கநாதன், சிங்கப்பூர் வாழ் திரு.மணியம், இலங்கையில் வாழும் திரு.தவரூபன் ஆகியோர் மாநாட்டினை நடத்தும் பொறுப்புக்களை மேற்கொண்டனர்.



இவ்வமைப்பினர் பத்து மாநாடுகளை புலம் பெயர்ந்த தமிழர்கள் வாழும் வெளிநாடுகளில் நடத்தியுள்ளனர். தற்போதைய மாநாடு இந்தியாவில் நடத்தப்படும் ஏழாவது மாநாடாகும்.

கோவை தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற இம் மாநாட்டின் பொறுப்புக்களை இப் பல்கலைக் கழகத்தினர் ஏற்றிருந்தனர். இவர்களோடு குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி, தமிழ்நாடு அரசின் திட்டக் குழு, மத்திய அரசின் இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம் ஆகியன

முதல் நாள் தொடக்கவிழா நிகழ்ச்சியில் உத்தமம் நிறுவனத்தின் தலைவர் முனைவர் அப்பாசாமி முருகையன் வரவேற்புரையாற்ற, தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் முனைவர் கு.இராமசாமி முதன்மை உரையாற்றினார்.

ஆராய்ச்சிக் கட்டுரைகளடங்கிய

மாநாட்டுப் புத்தகத்தினை கான்பூர் ஐ.ஐ.டி.–யின் மேனாள் தலைவர் முனைவர் மு. ஆனந்தகிருஷ்ணன் வெளியிட்டார். கோவை குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரியின் இணைத் தாளாளர் திரு.சங்கர் வாணவராயர் மற்றும் மாநாட்டு நிகழ்ச்சிகளின் குழுத் தலைவர் முனைவர் கு.கல்யாணசுந்தரம் ஆகியோரும் தொடக்க விழா நிகழ்ச்சி யில் கலந்து கொண்டனர்.

மூன்று நாட்களும் மாநாட்டின் நிகழ்ச்சிகள் அனைத்தும் ஆய்வரங்கம், பயிலரங்கம், மக்கள் அரங்கம் என மூன்று பிரிவுகளாக ஒரே சமயத்தில் வெவ்வேறு அரங்குகளில் நடத்தப் பட்டன. ஆய்வரங்கத்தில் மூன்று நாட் களும் பத்து அமர்வுகள் நடத்தப்பட்டு 43 ஆய்வுக் கட்டுரைகள் விவாதிக்கப் பட்டன.

இக்கட்டுரைகள் யாவும் கணித் தமிழின் இயல்மொழிச் செயல்பாடு, தமிழ் கணினித் தொழில்நுட்பத்திற்கான கருவிகளும் செயலிகளும், தமிழ்வழிக் கணினி கற்றலும் கற்பித்தலும், தமிழ் இணையத் தரவுகளும் மின்தொகுப்பும் ஆகிய பெருந்தலைப்புக்களில் தொகுக் கப்பட்டு அதற்கேற்ப ஆய்வரங்கங்களும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

பயிலரங்கில் தமிழ் விக்கிபீடியா, தமிழ்பிளாக், மெய்நிகர் தொழில்நுட்பம், தமிழில் மின் புத்தகம், மொபைல் செயலி உருவாக்கம் முதலியவற்றில் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. பத்துக் கும் மேற்பட்ட இவ்வகைப் பயிலரங்கு கள் மூலமாகப் பலர் பயனடைந்தனர்.

மக்கள் அரங்கத்தின் பதினாறு அமர்வுகளில் அச்சு ஊடகங்களில் கணிப்பொறி, மின்னணு வணிகம், தமிழ் சார் புத்தாக்கக் கணினி, மின்னணுப் பரிமாற்றம் முதலிய தலைப்புக்களில் பல வல்லுநர்கள் கலந்து கொண்டு கருத் துக்களை வழங்கினர். ‘புதிய தலை முறை’யின் எடிட்டர் திரு.மாலன் மற் றும் படைப்பாளரும் பதிப்பாளருமான முனைவர் பத்ரி சேஷாத்ரி ஆகியோர் மக்கள் அரங்கில் கருத்துரை வழங்கி யோரில் முக்கியமானவர்கள்.

மக்கள் அரங்கத்தில் ஏற்பாடு செய் யப்பட்டிருந்த கண்காட்சியில் பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள், ஊடகங்கள், தனியார் நிறுவனங்கள் தமது அரங்குகளில் கணித்தமிழ் தொடர்பான பல தகவல்களைக் காட்சிப்படுத்தியிருந்தன.

மூன்றாம் நாளின் நிறைவு விழாவில் முனைவர் வாசு அரங்கநாதன் வரவேற் புரையாற்ற, தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் முனைவர் கு. இராமசாமி தலைமை யுரையாற்றினார். உத்தமம் நிறுவனத் தின் தலைவர் முனைவர் அப்பாசாமி முருகையன் மாநாட்டின் நிகழ்வுகளின் மீது தொகுப்புரையாற்றினார்.

விநாயகா நிறுவனத்தின் ஆலோ சகர் முனைவர் மு. பொன்னவைக்கோ தமிழ்க் கணினி நேற்று இன்று நாளை எனும் தலைப்பில் சிறப்புரையாற்றி னார். இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தின் முனைவர் இல.இராம மூர்த்தி வாழ்த்துரை வழங்க, உத்தமம் நிறுவனத்தின் செயல் இயக்குனர் தவரூபன் தங்கராஜா நன்றியுரை யுடன் மாநாடு இனிதே நிறைவு பெற்றது. உத்தமம் அமைப்பின் அடுத்த உலகத் தமிழ் இணைய மாநாடு 2019 ஆம் ஆண்டில் இலங்கையில் நடத்தப்படவுள்ளது.




– **கு.பிச்சைமுத்து,** கே.சி.டி.,
கோவை.

# கவிஞர் சிற்பி கட்டுரை பற்றி...

'மெல்லத் தமிழினிச் சாகும் என்று ஒரு பேதை உரைத்தனன்' என எவனோ பேசியதைக் கேட்டு பாரதி அன்று கொதித்தெழுந்ததைப் போல, இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு கவிஞர் சிற்பி அவர்களும் ஒரு கருத்துக்காகக் கொதித்தெழுந்தார்.

அது என்ன கருத்து?

பாரதிதாசன் என்ற ஒரு மகாநதியைப் பற்றி மறைந்த கவிஞர் ஞானக்கூத்தன் அவர்கள், ஒரு பத்திரிகையில் 'பாரதிதாசன் ஒரு வகுப்புவாதி' என்று குறிப்பிட்டதைப் படித்துத்தான் கவிஞர் சிற்பி அவர்கள் கனன்று எழுந்தார்.

கவிஞர் சிற்பியைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு உரையாடிய போது, அக்கருத்து அவரது நெஞ்சில் ஒரு முள்ளாய்க் குத்துகிறது என்று வேதனைப்பட்டார். 'இந்த உரையாடல் நம் இருவருக்கு மட்டுமே உரியதாகிவிட்டது. பரவலாக உள்ள நமது வாசகர்களுக்கும் இது சென்று சேரவேண்டுமானால், பாவேந்தர் பற்றி ஒரு தொடரைத் தாங்கள் எழுதலாமே' என்று குறிப்பிட்டேன்.

அவரும் சம்மதித்து ''பாரதிதாசன் கவிதைப் பெருவெளி'' என்று 25 மாதங்களாகப் பாவேந்தர் பற்றிய கட்டுரைகளை எழுதி இந்த இதழில் நிறைவு செய்திருக்கிறார். அவற்றை ஒட்டுமொத்தமாக நூலாகப் படிப்பதற்கு வெகுநாள் ஆகாது என்று கருதுகிறேன். இதுபோல 'ஓம் சக்தி'யில் வெளி வந்த ஜெயகாந்தன், பிரபஞ்சன், பாலகுமாரன் முதலிய பலரின் தொடர்கள் நூல்களாகியுள்ளன.

எப்படியோ, ராமனால் கூனிக்கு ஏற்பட்ட கோபத்தில் உருவான கூனியின் சதித்திட்டம் ராமாயணத்தை எழுதிய வாய்ப்பைக் கம்பருக்குக் கொடுத்ததுபோல, 'பாரதிதாசன் ஒரு வகுப்புவாதி' என்று விஷம் கக்கிய ஞானக்கூத்தனின் வாசகம், கவிஞர் சிற்பியைப் பாரதிதாசனைப் பற்றி எழுத வைத்துவிட்டது. இக்கட்டுரைகளைத் தமிழ் இலக்கியத் துறைமுகத்திற்கு வந்து சேர்ந்துள்ள சரக்குக் கப்பல்கள் எனலாம்.

மகாகவி பாரதி இன்னொரு மகாகவியைப் பிரசவித்ததற்கு எடுத்துக்காட்டாக பாரதிதாசன் உருவானார். அமரகவி பாரதிதாசன் கவிஞர் சிற்பியின் முதல் கவிதைத் தொகுதியான 'நிலவுப் பூ' தொகுதிக்கு வாழ்த்துச் செய்தி தந்தபோது,

**"வெற்றி இலக்கியத்தை அன்றளித்த பாரதி போல்**

**பாட்டை திறக்க வந்த பாலசுப் பிரமணியப்**

**பைந்தமிழ்ப் பாவாணர் புகழ் பெற்று வாழியவே"** என்று அவரே சிற்பியைப் பாராட்டியுள்ளார்.

பாவேந்தரை பாரதியின் சீடர் என்பதா? தொண்டர் என்பதா? தொழுதேத்திய பக்தர் என்பதா? பாரதியை அட்லாண்டிக் மகா சமுத்திரம் என்றால், பாரதிதாசனை பசிபிக் சமுத்திரமாகத்தான் பார்க்க வேண்டும். அந்த இரு சமுத்திரங்களிலும் கப்பல் பயணம் சென்றவர் கவிஞர் சிற்பி அவர்கள். ஞானக்கூத்தன் போன்ற சராசரிகளின் பேதைமைகளால் 'பாரதிதாசனின் கவிதைப் பெருவெளி' என்பது பெரு வெடிப்பாகியுள்ளது.

இந்த இதழோடு ''பாரதிதாசன் கவிதைப் பெருவெளி'' நிறைவு பெறுகிறது என்கிறபோது மனம் ஏனோ துணுக்குறுகிறது.

**– இணையாசிரியர்**


பாரதிதாசன்

# பாரதிதாசன் கவிதைப் பெருவெளி 25

கட்டுரை

## போர்க்கவசமும் பூச்செண்டும்

இருபதாம் நூற்றாண்டு, புரட்சி களின் களஞ்சியமான நூற்றாண்டு. இந்தியா விடுதலை இயக்கத்தின் உக் கிரத்தையும் அனுபவித்தது. சமூக விடு தலைப் போரின் தீவிரத்தையும் கண் டது. இரண்டு உலகப் போர்களால் பூமிப் பரப்பு சின்னா பின்னமாக்கப் பட்டதைப் பார்த்தது. உலகு கண்டிராத கொடிய அணுகுண்டின் பிரளயத்தை யும் சந்தித்தது. புதிய நாடுகள் உருவா யின; புதிய கருவிகள் கண்டு பிடிக்கப் பட்டன; புதிய போர் முறைகள் (பய ணியர் விமானம் ஆயுதமானது போல்) உருவாக்கப்பட்டன.

இந்தியச் சமூகம் விடுதலைக் காற் றைச் சுவாசித்த அதே தருணத்தில் உலக முதலாளித்துவக் கொடுங்கரங்களால் அடிமைத்தனத்திற்குள் மீண்டும் தள்ளப் பட்டது. தாய்மொழி அடையாளத்தைக் காக்கத் தமிழகத்தில் உயிர்த் தியாகங் கள் நேர்ந்தன. அதேசமயம் பிறமொழி ஆதிக்கங்கள் (இந்தியின் பரவலாக்கமும் ஆங்கில மொழி விரிவாக்க மும்) கொடிகட்டிப் பறந்தன. பஞ்சம் தவிர்க்கப்பட்டது. எனினும் பஞ்சை பராரிகளின் எண்ணிக்கை குறைந்து விடவில்லை. சொந்த நாடு புறக்கணிக் கப்பட்டு அந்நிய நாட்டில் குடியுரிமை, வாழ்க்கை என்பது இந்நாட்டுக் கல்வி யின் ஏக லட்சியமானது.

பாரதியும் பாரதிதாசனும் கனவு கண்ட சாதியற்ற சமுதாயம் கானல் நீரானது. இரும்புக் கவசமும் எஃகுக் கிரீடமும் சூடி சாதி அசைக்க முடியாத சக்தியாக வலம் வருகிறது. சமூக நீதிக் கடலைக் கடைந்தபோது சாதி எனும் பூதமே அதிலிருந்து வெளிப்பட்டது. ‘பதந்தரற் குரியவாய பன்ம தங்கள் நாட் டினள்’ என்று பாரதி கொண்டாடிய பன்மைச் சமுதாயத்தில் ஆன்மா சம்பந் தப்பட்ட மதம் ஆருயிரைக் கீறும் ஆயுத மாகி விட்டது.

ஒற்றை மதம், ஒற்றைப் பண்பாடு, ஒற்றை மொழி என்ற வலைப்பின்னலுக் குள் சிக்கிப் பன்மைத் துவம் குலையும் ஆபத்து நம்மையும் நம் மொழியையும் பண்பாடு, பழக்க வழக்கங்களையும் சூழ்ந்து வரும் காலத்தில் பாரதி



சிற்பி பாலசுப்பிரமணியம்

தாசனை எப்படிக் காண்பது என்கிற ஒரு பார்வையையும் இன்று வளர்த்துக் கொண்டாக வேண்டும். அந்த நோக்கத்தை வைத்தே இந்தக் கட்டுரைத் தொடர் எழுதப்பட்டது என்பதையும் வாசகர்களுக்கு நினைப்பூட்ட விரும்புகிறேன்.

இன்று எல்லா வகை இலக்கியங்களையும்விடக் கவிதை குறைந்த வாசகர்களையே பெற்றிருக்கிறது. 'நாகரிகம் முன்னேறும்போது கவிதை அந்த அளவு பின்தங்கி விடுகிறது' (As civilization advances, Poetry necessarily declines) என்று மெக்காலே சொன்னது மெய்யாகி வருகிறது. இதற்குக் காரணங்கள் பல என்றாலும், மிக முக்கியமாக நம் நாட்டுச் சூழலில் தாய்மொழி பற்றிய மதிப்பீடுகள் தரம் தாழ்ந்து போனது ஒரு காரணம். ஆனாலும், மனித மனதைத் தட்டி யெழுப்ப ஆயிரம் பேச்சுக்களையும், பல்லாயிரம் உரைநடை வரிகளையும்விட ஒருவரிக் கவிதையே வல்லமை மிக்கது.

அதனால் பாரதிதாசனின் உயிர்ப்பு மிக்க வரிகளை முன்நிறுத்தி நம் இளைய தலைமுறையை நம் மொழியையும் பண்பாட்டையும் நோக்கி வசீகரிக்க வேண்டிய அவசியம் நமக்கு நேர்ந்திருக்கிறது.

எங்கெங்கே சாத்தியமோ, அங்கங்கெல்லாம் அழகியலை உணர்த்த, இயற்கை நேயத்தை வலுப்படுத்த, மொழி அடையாளத்தை நினைப் பூட்ட, நம் பண்பாட்டு விழுமியங்களைக் காப்புறுதி செய்ய, நம் உறவுகளை உறுதியுடன் கட்டமைக்க, பழமை பேணுவதற்காகவன்றிப் பாரம்பரியத்தின் தனித்துவத்தைக் கோடிட்டுக் காட்ட, இன்னும் ஒருபடி மேலே சென்று சொல்வதானால், நம் வேர்களை அறிந்து அவற்றில் நாம் ஊன்றி நிற்க நமக்குப் பாரதியும், பாரதிதாசனும், வள்ளுவரும் மிக மிக இன்றியமையாதவர்கள்.

தமிழகத்தில் பள்ளி வகுப்புகளில் பாடநூல்களில் பாரதிதாசனின் வைர வரிகள் இடம்பெற வேண்டும். தமிழ்ப் பாடநூல் அல்லாத பாட நூல்களிலும் கூட, பாடங்களுக்கு இடையேயான இடைவெளிகளில்,

"தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்கு நீர்"

"தமிழ் எங்கள் உரிமைச்செம் பயிருக்கு வேர்"

"தமிழ் எங்கள் அறிவுக்குத் தோள்"

முதலிய கம்பீரமான வரிகள் மந்திரங்களைப் போல் இடம்பெற வேண்டும். மனதிலும் வாக்கிலும் தமிழுணர்வு மணக்கும்படி செய்ய இதனை ஓர் உத்தியாகக் கையாளலாம்.

இன்றைய தலைமுறையைத் தாய்மொழிக் களத்திலிருந்து அப்புறப்படுத்தி விடுவோமானால், தமிழுக்கும் தமிழனுக்கும் தமிழ்நாட்டுக்கும் ஒரு போதும் மீட்சி இல்லை.

தண்ணீர்ப் பஞ்சத்தின்போது சிறு துளிக் குழாய்கள் மூலம் செடி கொடி மரங்களின் வேர்களை ஈரப்படுத்திக் கொண்டிருப்பது போலப் பாரதிதாசனின் செறிவு மிக்க எண் ணங்கள் புதிய தலைமுறைகளை மீண்டும் மீண்டும் பதப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும்.

அறிவியல் பாரதிதாசன் போற்றிய ஒரு களம். தமிழில் அறிவியல் பல்கிப் பெருக வேண்டும் என்பது முற்போக்குச் சிந்தனைகளின் முளைப்பாரியான பாரதிதாசன் பெரு விருப்பம்.

"நிதி நூல் விளை! உயிர் நூல் உரை
நிச நூல் மிக வரைவாய்
அலைமா கடல் நிலம் வானிலுன்
அணி மாளிகை ரதமே
அவை ஏறிடும் விதமே யுன
ததிகாரம் நிறுவுவாய்"

இவ்வாறு நானிலம் முற்றிலும் அறிவுத் தமிழின் ஆட்சியும் அறிவியல் தமிழனின் வெற்றியும் பாரதிதாசனின் கவிதைச் சாரமாக இருந்தன. அந்தத் தமிழ் அறிவியலை அல்லது அறிவியல் தமிழை மீண்டும் மீண்டும் மாணவ வீதிகள் அதிரும்படி சொல்லும் கடமை

நமக்கு இருக்கிறது. புதியதோர் உலகம் செய்வோம் என்பது கவிஞரின் கவிதை உற்சாகம் (Poetic euphoria) அல்ல. சிந்தை அணுக்களில் தேக்கிய மின்சாரம்.

நம்மைக் காக்கும் இயற்கையை நாம் காக்க வேண்டுமெனும் பண்பாட்டைக் கற்றுக் கொடுக்கும் பாடசாலை பாரதி தாசன் பாட்டு. அழகியலோடு பதமுறப் பின்னிக் கவிஞர் கொடுக்கும் இயற்கை யின் நிழலில் மாந்தரினத்திற்கு 'இன்ப வருக்கமெல்லாம் நிறைவாகும்' பெருங் காட்சி புலனாகிறது.

"கோட்டுப் பூ நல்ல கொடிப் பூ நில நீர்ப் பூ
நாட்டத்து வண்டெல்லாம் நல்ல இசை பாய்ச்சக்
கொத்தும் மரங்கொத்தி தாளம் குறித்துவரத்
தத்துபுனல் தாவிக் கரையில் முழா முழக்க
மின்னும் பசுமை விரிதழைப் பூம் பந்தலிலே
பன்னும் படம் விரித்துப் பச்சை மயிலாடுவதும்
பிள்ளைக் கருங்குயிலோ பின்பாட்டுப் பாடுவதும்"

ஒரு கானகத்து நற்காட்சியைக் காவி யமாய்த் தருகிறதென்றால், சின்ன வரி களுக்குள் இயற்கை அழகைக் காட்டிச் சிலிர்க்க வைக்கும் நவீனப் பொலிவும் பாரதிதாசனிடம் உண்டு.

"நீல வான் மறைக்கும் ஆல் தான்
ஒற்றைக் கால் நெடிய பந்தல்"

என்று ஆல மரத்தையும்,

"தங்கத்தை உருக்கி விட்ட
வானோடை தன்னிலே ஓர்
செங்கதிர் மாணிக்கத்துச்
செழும் பழம்"

என்று சூரியனையும் இதுபோன்றே இயற்கையின் எழிற் கோலங்களையும் அழகில் தோய்த்தெடுத்துத் தருவார் பாரதிதாசன். இந்த இயற்கைப் புனைவு களை எல்லாம் நம் இளைஞர் களுக்குத் தாய்ப்பால் போல் நாம் புகட்ட வேண்டும்.

தமிழிசையின் நறுஞ்சுவை பாரதி தாசன் திகட்டத் திகட்ட நமக்குத் தந்திருக்கும் பேரின்பம். அவருடைய இசையமுது பாடல்களும் பிற்காலத் தில் அவர் வரைந்த இசைப்பாடல் களும் பாடியும் ஆடியும் கற்றுக் கொடுக்கப் பட வேண்டியவை.

"தலை வாரிப் பூச்சூட்டி உன்னை"
"காலுக்குப் புன்னை இலை"
"பசி என்று வந்தால் ஒருபிடி சோறு"
"காக்கை இடத்திலுள்ள ஒற்றுமை கண்டு"
"வாழ்வினில் செம்மையை"

முதலான பல பாடல்களில் கல்வி, கருணை, ஒற்றுமை, மொழிப்பற்று என இன்றியமையாத செய்திகளை இசைத் தேனில் குழைத்துக் குழைத்துப் பாரதி தாசன் தருகின்றார்.

தமிழிசைப் பாடல்களும் அருகிப் போன ஒரு சூழலில் பாரதிதாசன் ஒரு புத்துயிர்ப்பின் பேரெழுச்சியாக விளங் குதல் கூடும்.

பாரதிதாசன் தமிழின்பக் கேணி; சமூக விடுதலை முரசொலி; இயற்கை நேசிப்பின் தோழமை; நல்லிசைப் புல்லாங்குழல்.

அவருடைய அரசியல், ஆன்மிக எதிர்ப்பு ஆகியவற்றைவிட அவரை மையப்படுத்தத் தக்க களங்கள் இவை.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவி தைக்குப் பாரதியும் பாரதி தாசனுமே வைரத் தூண்கள். புதுக் கவிதையின் சலனம் இந்த நூற் றாண்டின் பாதியில் மெல்லிய சல சலப்பைத் தொடங்கி


பாரதியார்

விட்டது. இருபதாம் நூற்றாண்டின் கடைசி முப்பதாண்டுகளில் புதுக் கவிதை சிறகுகளை விரித்துவிட்டது. ஆனாலும் பாரதி தாக்கமும் பாரதிதாச னின் ஆக்கமும் இன்னமும் செல்வாக் குடன் தான் இருக்கின்றன.

என்னதான் வடிவத்திலும் பொருண் மையிலும் புதுக்கவிதையின் துப்பாக்கித் துரைத்தனம் மிரட்டுகிறதென்றாலும், கருத்துக் களங்களில் அதன் போதாமை உணரப்பட்டுக் கொண்டே இருக்கிறது. அதனால் பாரதி, பாரதிதாசனை அலட்சி யமாய்த் தாண்டிப் போவது எளிதல்ல.

நம்மை உலகமயமாக்கச் சந்தைகள் அடிமைகளாகக் கூவிக் கூவி விற்கத் தலைப்பட்டிருக்கின்றன. அடிமைச் சங்கிலிகளை நம் கைகளுக்குப் பூட்டிய வீரக் கங்கணங்களாகவே நாம் கருதிக் கொண்டிருக்கிறோம். மாடு கட்டிப் போடித்தால் மாளாது செந்நெல் என்று ஆனைகட்டிப் போரடித்த வயல் களங் கள் உங்கள் கண்களுக்குத் தெரிகிறதா? ‘அந்நியர் வந்து புகல் என்ன நீதி?’ என்று அதட்டிக் கேட்க முடியாதபடி பன்னாட்டுப் பெருந்தொழில் மேலாண் மைகளின் பண்ணையாக இந்தியக் கிராமங்கள் மண்டியிட்டுக் கிடக் கின்றன.

என் குழந்தை மண்ணைத் தின்றா லும் பரவாயில்லை; பர்கரையும் பிஸ்ஸாவையும் தின்று பாழாகிக் கொண்டிருக்கிறது. எமது இளைஞர் மாற்றுப் பண்பாடுகளின் கொத்தடிமை களாகிவிட்டனர். ‘உண்ணும் சோறும் பருகும் நீரும்’ இல்லவே இல்லை. குப்பை உணவில் குதூகலித்து மினரல் வாட்டரில் முக்குளிக்கின்றனர். இதுவா சுதந்திரம்? இதற்காகவா வெந்தணலைச் சந்தனமாய்ப் பூசி விடுதலைப் போரில் ஈடுபட்டனர் என் முன்னோர்?

“தண்ணீர் விட்டோ வளர்த்தோம்
சர்வேசா இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம்
கருகத் திருவுளமோ?”

என்ற கதறலின் ஓசை அடிவானம் வரை பட்டுத் தெறிக்கிறது. ஆனால், காது களில் குமிழ்கள் பொருத்திய இளைஞர் பட்டாளத்தின் காதுகளில் அது விழவே இல்லை. அது தமிழ் மண்ணை வெறும் பழமைப் புழுதியாய் ஒதுக்கிவிட்டு அயல் நாடுகளுக்கு விமானச் சீட்டும் கையுமாக அணிவகுத்து நிற்கிறது.

சொந்த நாட்டுக்கும் பண்பாட்டுக் கும் அந்நியமாகிப் போன தலைமுறை களின் மத்தியில் நின்று கொண்டு இதற்கு ஒரு முடிவில்லையா? விடிவில் லையா? என்று தவிக்கிறோம். நம்மு டைய கைலாயங்களும் கன்னியாகுமரி களும் முன்னெப்போதையும்விட மெய்யன்பர்களின் பெருங்கூட்டத்தில் திளைக்கின்றன. அங்கெல்லாம் வர மாகக் கேட்கப்படுவது வீடுபேறல்ல, தம் பிள்ளைகளுக்கு அந்நிய நாடுபேறு வேண்டும் என்பதுதான்.

இந்த வேதனை வளையத்தில் ஒரே ஒரு வெளிச்சம் தெரிகிறது. அது பக்திப் பனுவல்கள் அல்ல; தேவார திருவாசக மல்ல; திவ்யப் பிரபந்தமும் அல்ல.

பாரதி – பாரதிதாசன் பாடல்களே அந்த வெளிச்சம். பனித் திவலைகள் போல் பசுந்தமிழ் கொஞ்சும் அந்தப் பாடல்களின் ஒளியை நோக்கி நாம் திரும்புவோமா? மனம் திருந்துவோமா?

பகை தடுக்கப் போர்க் கவசம் பூண்டு, வாழ்வு செழிக்கத் தமிழ் என் னும் பூச்செண்டு ஏந்தி நம் பயணம் தொடருமா?

“நீயோ
கருமான் செய் படையின் வீடு
நான் அங்கோர் மறவன்! கன்னல்
பொருள் தரும் தமிழே நீ ஓர்
பூக்காடு நானோர் தும்பி”

என எமதிளைஞர் குலம் எண்ணுமா? எண்ண வேண்டும் என்ற நம் எண்ணம் வெல்லுமா?

**(நிறைவுற்றது)**

# உலகிலேயே மிகப்பெரிய நந்தி ஆலயம்

என்.ஆர். ஜெயசந்திரன்


அலங்காரம் செய்யப்பட்ட நந்தி சிலை

சிவாலயங்களில் நந்தி வழிபாடு மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. பிரதோஷ காலங்களில் நந்தியை வணங்குவது சிறப்பாகக் கருதப்படுகிறது. தஞ்சைப் பெரிய கோவிலில் உள்ள நந்தியும், ஆந்திர மாநிலம் லெப்பாட்சியில் உள்ள நந்தியும், மைசூர் சாமுண்டீஸ்வரி மலையில் உள்ள நந்தியும் உருவத்தில் பெரியவையாகக் காணப்படுகின்றன. ஆயினும் பாறைகளோ, மலைகளோ இல்லாத பகுதியான தஞ்சையில் மிகப் பெரிய அளவில் நந்தியை உருவாக்கிய சோழ மன்னர் ராஜராஜனைப் பாராட்ட வேண்டும். ஆனால், இவை அனைத்தையும் விட பெங்களூருவில் 'பசவனகுடி' என்ற இடத்தில் அமைந்துள்ள நந்தியின் சிலை உலகிலேயே மிகப்பெரியதாக அறியப்படுகிறது.

**பெங்களூரு – பெயர்க் காரணம் :** பெங்களூருப் பகுதியை கி.பி. 1291 முதல் 1342 ஆண்டு வரை 51 ஆண்டுகள் வரை அரசாண்ட போசள மன்னரான மூன்றாம் வீரவல்லாளன் வேட்டைக்குச் சென்ற இடத்தில் – வேட்டையில் எந்த விலங்கும் கிடைக்காமல் ஏமாந்து பசித்துக் களைத்து மாளிகை திரும்பும் வழியில் ஒரு மூதாட்டி அவரின் பசி தீர வேக வைத்த கடலைகளைக் கொடுத்துப் பசியாற்றினாள்.

அதனை உண்டு மகிழ்ந்த மன்னர், தாம் இதுபோல் ஒரு சுவையான உணவைத் தன் வாழ்நாளில் உண்டதில்லை என்று மூதாட்டியிடம் கூறி, அவளுக்குப் பரிசளித்து நன்றி உணர்வுடன் "பெங்கல் விரு" என்று கூறினாராம். அக்கன்னடச் சொல்லிற்கு "வேக வைத்த கடலை" என்று பொருள். அன்றிலிருந்து அவர் கடலை உண்ட இடம் 'பெங்கல் விரு' என்று அழைக்கப்பட்டுப் பின்னர் 'பெங்களூரு' என்று மாறிவிட்டது என்று கூறுகிறார்கள்.



**ஆலய அமைவிடம் :** பெங்களூரு நகரின் டவுன்ஹாலுக்குத் தெற்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் "பசவன குடி" என்ற பகுதி உள்ளது. அங்குச் செல்ல நகரின் எல்லா இடங்களி லிருந்தும் பேருந்து வசதிகள் பெரும் அளவில் உள்ளன. அப்பகுதியில் சிறுசிறு பாறைகளும், மரங்களும், வண்ண மலர்ச்செடிகளுடன் இயற் கைப் பேரழகுடன் உள்ள "பகுல் பாறைப் பூங்கா" உள்ளது.

அந்தப் பூங்காவைச் சுற்றிப் பல ஆண்டுகளுக்குமுன் நெல், வாழை மற்றும் கடலைக்காய் விளையும் நிலங் கள் பெரும் அளவிலிருந்தன. அந்தப் பூங்காவின் உயரமான இடத்திலிருந்து ஆபத்தான காலங்களில் மக்களுக்குத் தகவல் தெரிவிக்க எச்சரிக்கை ஒலி எழுப்புவார்கள். அந்த ஒலியைப் 'பகுல்' என்று அழைப்பார்கள். அந்தப் பகுல் என்ற பெயரே அந்தப் பூங்கா வின் பெயராக மாறிவிட்டது.

அங்குள்ள பயன்படுத்தப்படாமல் இருக்கும் மிகப்பெரிய தண்ணீர்த் தொட்டியை அகற்றாமல் அதன் சுவற் றில் கன்னட மொழிச் சான்றோர்கள், சாதனையாளர்களின் உருவங்களை மிக அழகாகப் புடைச்சிற்பங்களாக வடிவமைத்துள்ளனர். அந்தத் தண் ணீர்த் தொட்டியின் கீழே சிறந்த கன்னட எழுத்தாளரும், சாகித்திய அகாதமி விருதும், பத்ம விபூஷண் விருதும் பெற்ற சாதனையாளர் தேவனஹள்ளி வெங்கட்டரமணப்பா குண்டப்பா அவர்களின் வெண்கலச் சிலை உள்ளது. அவர் பெங்களூருவில் கோகலே நுண்கலைகள் பயிற்று விக்கும் நிறுவனத்தைத் தொடங்கி யவர். அவருடைய "மாங்கு திம்மன காகா" என்ற கவிதைத் தொகுப்பு கன்னட மொழியில் மிகவும் புகழ் பெற்றது.

அப்பூங்காவிற்கு நடைபயிற்சி, உடற்பயிற்சி, யோகாப் பயிற்சி செய் பவர்கள் அதிகளவில் வருகின்றனர். அவர்களின் பயனுக்காக அங்கு அமைக்கப்பட்ட சாதனங்கள் சேத மடையாமல் புதுப்பொலிவுடன் இருப்பதைக் கண்டதும் நமக்கு ஆச்சரியமாக இருந்தது. அங்குள்ள சிறுசிறு பாறைகளை அழகாக அடுக்கி வைத்து, அங்கு அமர்ந்து கலை நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழும் வகை யில் ஏற்பாடுகளைச் செய்துள்ளனர். அந்தப் பூங்காவில் ஏற்கெனவே இயற் கையாகவே அமைந்த பெரிய பாறை யையே சிற்பிகள் கலை நுணுக்கங் களைக் கொண்ட அழகு நந்தியாக வடிவமைத்துள்ளனர்.


புகல் பாறைப் பூங்காவின் நுழைவுவாயில்

**மன்னர் முதலாம் கெம்பகவுடா :** விஜயநகரப் பேரரசின் அரசரான அச்சுத தேவராயரின் ஒப்புதலுடன் அப்பகுதியை முதலாம் கெம்பகவுடா 1513–இல் பட்டத்துக்கு வந்து 1559 வரை 46 ஆண்டுகள் சிறப்பாக ஆட்சி செய்தார். அவர் கட்டடக் கலையில் பேரார்வம் கொண்டவர். அவர் எதைக் கட்டினாலும் சரி கோவி லாகவோ, கோபுரமாகவோ,

கோட்டையாகவோ, சிலையாகவோ இருந்தாலும் அழகுற அமைத்துப் பலரும் வியக்கும் வகையில் மற்றவர்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தார். அவருடைய ஆட்சியில்தான் 1537 ஆம் ஆண்டில் நந்தி ஆலய ஐந்து நிலைக் கோபுரம் கட்டப்பட்டது. அந்த ஆலயத்திற்கு அருகில் அவர் கட்டிய காவல் கோபுரமும் உள்ளது.

***நந்தி சிலை அமையக் காரணமானவை :*** அந்த அழகிய மிகப் பெரிய நந்தி சிலை அங்கு அமைவதற்கு இரண்டு காரணங்கள் கூறப்படுகின்றன.

சிலாதர் என்ற பெயருள்ள சிவனடியார் தனக்குத் திருமணமாகிப் பல ஆண்டுகள் கடந்தும் பிள்ளைப் பேறு இல்லையே என்று வருந்திச் சிவனை நோக்கித் தவமிருந்தார். அப்பொழுது அவர்முன் தோன்றிய சிவன், அவருடைய தவம் உடனே பலிக்கும் என்று கூறிவிட்டு மறைந்தார்.



பூங்காவிலுள்ள மிகப்பெரிய நீர்த்தொட்டியின் எழில்மிகு தோற்றம்

அடுத்த நாள் காலை சிலாதர் கடலைக்காய் விளையும் நிலத்தில் ஓர் அழகிய ஆண் குழந்தை இருப்பதைக் கண்டு அதை எடுத்து வந்து "நந்தி" என்று பெயர் சூட்டினார்.

தந்தையைப் போலவே மகனான நந்தியும் சிவபக்தனாக விளங்கினான். சிறு வயதிலேயே சிவ தோத்திரங்களை அழகாகப் பாடிச் சிவனை வணங்கினான். அவனிடம் உள்ள அந்த ஞானத்தைக் கண்ட அனைவரும் வியந்து போற்றினர். அவனது ஆற்றலை அறிந்த சில முனிவர்கள் அவனைக் காண வந்து அவனுடைய அசாத்திய ஞானத்தைக் கண்டு வியந்தனர்.

அவனுடைய தந்தை சிலாதரிடம் அவர்கள் "நந்திக்கு ஆயுள் குறைவு" என்று கூறினர். கலக்கமடைந்த சிலாதர் நந்தியைக் கண்டு கண்ணீர் விட்டார். சிவனருள் பெற்ற தன் மகன் தன்னுடன் நீண்ட காலம் வாழமாட்டான் என்று கதறினார். தந்தையின் தயக்கத்தைக் கண்ட நந்தி "அப்பா! கவலைப்படாதீர்கள். எனக்குச் சிவனருள் உண்டு. எந்த அச்சமும் வேண்டாம்" என்று கூறி அவரைச் சமாதானப்படுத்தினான்.

சில காலம் கடந்த பின்பு நந்தியின் முன் சிவன் தோன்றி "தன்னுடைய வாகனமாக நீ இருப்பாய்" என்று கூறியதும் நந்தியின் தலை காளையின் தலையாக மாறி, அவன் நந்தி உருவமாக மாறினான். சிவனால் தடுத்தாட்கொண்ட சிலாதரின் மகன் அங்குள்ள நந்தி என்று பலரும் நம்புகின்றனர்.



நந்தி சிலையின் பின்புற அழகிய தோற்றம்

அங்குள்ளவர்கள் மற்றொரு காரணத்

தையும் கூறி நம்மை ஆச்சரியப்பட வைக்கின்றனர். அப்பகுதியில் உள்ள விளை நிலங்களில் நெல், வாழை மற்றும் கடலைக்காய் அதிக அளவில் பயிரிடப்பட்டன. விளைச்சல் அதிக அளவில் இருந்ததால், விவசாயிகள் மகிழ்ச்சியில் திளைத்தனர். அத்தகைய சூழ்நிலையில், நள்ளிரவு வேளைகளில் பெரிய காளை அங்கு வந்து விளைந்த வற்றை அதிக அளவில் சேதாரம் செய் ததுடன், கடலைக்காய்ப் பயிர்களை அழித்துக் கடலைக்காய்களைத் தின்று விட்டுச் சென்றது. அதுபோல் ஒவ்வொரு நாள் நள்ளிரவிலும் நடந்ததால், விவசாயிகள் இரவு முழுவதும் காவல் காத்திருந்தனர்.



நந்தியின் முன்பு கட்டுரையாசிரியர்

ஒருநாள் நள்ளிரவு, அந்தக் காளை அங்கிருந்த கடலைக்காய்ப் பயிர்களைச் சேதம் செய்து கடலைக்காய்களைத் தின்று கொண்டிருந்தது. அதனைக் கண்ட ஒரு விவசாயி துணிச்சலுடன் அதனருகில் சென்று தன் கையில் இருந்த பெரிய கம்பால் அந்தக் காளையின் தலையில் கொம்புகளுக்கு மத்தியில் ஓங்கி அடித்தான். அடிபட்ட அந்தக் காளை அங்கேயே அமர்ந்து சிலையாக மாறி விட்டது. அந்தக் காளையே அங்குள்ள நந்தி என்றும் கூறுகிறார்கள்.

அந்த ஆலயத்தில் நந்தியே மூலக் கடவுளாக வணங்கப்படுகிறது. கிழக்கு நோக்கிக் காட்சியளிக்கும் அந்த நந்தி சிற்பக் கலையின் சிகரமாக விளங்குகிறது.

உலகிலேயே மிகப்பெரிய நந்தியாக விளங்கும் அதன் உயரம் 15 அடி, நீளம் 20 அடி. அதன் ஒவ்வொரு பாகத்திலும் அதனுடைய அழகு மிளிர்கிறது. நாள்தோறும் காலை 6 மணி முதல் இரவு 8 மணி வரை இவ்வாலயம் திறந்திருக்கும். அந்த ஆலயத்திற்கு வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் அதிக அளவில் வருகிறார்கள்.

***கடலைக்காய்ப் பண்டிகை :*** ஒவ்வொரு ஆண்டும் கார்த்திகை மாதம் கடைசி திங்கட்கிழமையும் அதற்கு அடுத்த நாள் செவ்வாய்க் கிழமையும் அந்த ஆலயத்திலிருந்து ராமகிருஷ்ணா ஆசிரமம் அமைந்துள்ள சாலைகளில் இருபுறமும் 'கடலைக்காய் விழா'விற்காக மிகப்பெரும் அளவில் வணிகர்களும், பொதுமக்களும் அங்கு வருகிறார்கள். விவசாயிகள் தாங்கள் முதலில் அறுவடை செய்த கடலைக்காய்களை நந்திக்குப் படைத்து வணங்கிச் செல்கிறார்கள்.

கர்நாடக மாநிலம், தமிழ்நாட்டு வடமாவட்டங்களில் உள்ளவர்கள், ஆந்திராவில் குப்பம் பகுதியில் உள்ளவர்கள் திரளாகக் கலந்துகொண்டு நந்தியை வணங்கிச் செல்கின்றனர். அந்த இரண்டு நாட்களிலும் பெங்களூரு நகரமே பரபரப்பாகக் காணப்படும்.

***மிகப்பெரிய கணேசர் :*** அப்பூங்காவில் ஏற்கனவே அங்கிருந்த மிகப் பெரிய பாறையைச் சிற்பிகள் மிகப் பெரிய கணபதியாக வடிவமைத்துள்ளனர். கன்னடத்தில் "தொட்ட கணேசா" என்று அழைக்கிறார்கள். தமிழில் பெரிய கணேசர் என்று பொருள். நந்தி ஆலயத்திற்குச் செல்பவர்கள், அந்த மிகப்பெரிய கணேசரையும் தரிசிக்கலாம். ●

சிறுகதை

# “இப்தார் விருந்து”



ஒவ்வொரு வருடமும் ரமலான் மாதத்தில் இப்தார் விருந்து நடத்துவது அப்துல் காதர் ஹாஜியாருக்கு வழக்கமாக இருந்தது. அவர் அதை ஒரு மத நல்லிணக்க விழாவாகவே நடத்தி வந்தார். விருந்துக்கு எல்லா மதத்தையும் சார்ந்த தனது நெருங்கிய நண்பர்களையும், அப்பகுதியில் உள்ள முக்கியப் பிரமுகர்களையும், சில அரசியல் தலைவர்களையும், தனது உறவினர்களையும் அழைப்பது வழக்கம்.

விருந்தென்றால் அது சாதாரண விருந்தாக இருக்காது. பலவகை உயர்ந்த உணவுகளைக் கொண்ட சிறந்த விருந்தாக இருக்கும். உயர்ரக பாசுமதி அரிசியில் செய்யப்பட்ட மட்டன் பிரியாணி, புரோட்டா, இடியாப்பம், சூடாகச் சுட்டெடுக்கும் ஆப்பம், இதனுடன் ஆட்டுக்கறி, கோழி வறுவல், போத்து (எருமை) இறைச்சி, டைகர் எறால், மட்டன் சூப்பு என அசைவ உணவு வகைகளின் அணி வகுப்பாகவே இருக்கும்.

அத்தோடு ஆப்பிள், ஆரஞ்சு, மா, பலா, பேரீச்சம் பழம் முதலிய பழ வகைகளும், அல்வா, லட்டு, ஜாங்கிரி, கிண்ணத்தப்பம், முந்திரிக்கொத்து முதலிய இனிப்பு வகைகளும், உளுந்துவடை, மசால்வடை, மிக்சர், சிப்ஸ் எனக் கார வகைகளுடனும் விருந்து அமர்க்களப்படும்.

“அப்துல்காதர் ஹாஜியாரின் இப்தார் விருந்தைச் சாப்பிடுவதற்கு இரண்டு வயிறு வேண்டுமப்பா” என்று எல்லோரும் கிண்டலாகப் பேசுவார்கள். அந்த அளவுக்கு ஏராளமான உணவு வகைகள் அந்த விருந்தில் இடம்பெறும்.

> “முஸ்லீம்கள், பக்கத்தில் அமைக்கப் பட்டிருந்த சிறிய பந்தலில் மாலை நேரத் தொழுகையை முடித்துவிட்டு வந்தவுடன் இப்தார் விருந்து ஆரம்பமானது.”

அப்துல் காதர் ஹாஜியார் தமிழ் நாட்டில் காயல்பட்டணத்தைச் சார்ந்தவர். தற்போது திருவனந்தபுரம் சாலை பஜாரில் நகைக்கடை நடத்தி வருகிறார். அவருடைய அப்பா காலத்தில் சிறியதாகத் தொடங்கிய நகைக்கடை இவருடைய கடின உழைப்பாலும், நேர்மையாலும், பெரிய நகைக் கடையாக மாறி, இன்று நகரத்திலே நகை வியாபாரத்தில் முதலிடத்தைப் பிடிக்கும் அளவுக்கு வாழ்வில் முன்னேறியவர்.

அப்துல்காதர் ஹாஜியாரைத் தெரியாதவர் நகரத்தில் யாரும் இருக்க முடியாது. அவர் பல சமூக அமைப்புகளிலும், பள்ளி வாசல்களிலும் தலைவராகச் செயல்பட்டு வருகிறார். சாதி, மத பேதமின்றி எல்லோருக்கும் உதவி செய்பவர். தான, தர்மங்களில் முன்னில் நிற்பவர். எல்லோரிடமும் அன்பாகவும் பாசமாகவும் பழகுபவர்.

எல்லா வருடமும் போல, இந்த வருடமும் ரமலான் மாதம் இப்தார் விருந்து வைக்கத் தயாரானார் அப்துல்காதர் ஹாஜியார். வழக்கம் போல நோன்பு 20–ஆம் நாள் விருந்துக்கு நாள் குறித்தார். உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும், முக்கியப் பிரமுகர்களுக்கும் அழைப்பு விடுத்தார். சிறப்பு விருந்தினர்களாக



எஸ். ஹாஜா

ஹிந்து மதத்தைச் சார்ந்த சச்சிதானந்த சுவாமியையும், கிறிஸ்தவ மதத்தைச் சார்ந்த பாதிரியார் சூசை மாணிக்கத்தையும், இஸ்லாமிய மதகுரு அப்துல் சுக்கூர் மௌல்வியையும் வரவழைத்தார்.

குறிப்பிட்ட நாளில் மாலை ஐந்து மணிக்கு அழைக்கப்பட்ட அனைவரும் ஹாஜியாரின் வீட்டில் ஒன்று கூடினர். வீட்டு முற்றத்தில் அமைக்கப்பட்ட பெரிய பந்தலில் அனைவரும் அமர்ந்தனர். விழா ஆரம்பமானது. முதலில் சச்சிதானந்த சுவாமியை இரண்டு வார்த்தைகள் பேசுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டது.

சச்சிதானந்த சுவாமி பேச்சைத் தொடங்கினார். நோன்பின் மகத்துவத்தையும், சிறப்பையும் பற்றி எடுத்துரைத்தார். ‘‘எல்லா மதத்திலும் நோன்பு இருக்கிறது. ஆனால் இஸ்லாம் மத நோன்பு சிறப்பு வாய்ந்தது. இம்மாதிரி இப்தார் விருந்துகள் மத நல்லிணக்கத்தை உருவாக்கக் கூடியதாக இருக்கின்றன. நம் நாட்டில் இந்துவும், முஸ்லீமும், கிறிஸ்துவர்களும் ஒரு தாய் மக்கள். நாம் அனைவரும் சகோதரர்கள். நாம் ஒற்றுமையுடன் வாழவேண்டும்...’’ என்று பேசி முடித்தார்.

அடுத்து பாதிரியார் சூசை மாணிக்கம் எழுந்தார். அவரும் நோன்பின் பெருமையைப் பற்றி அருமையாகப் பேசிவிட்டு, ‘‘இன்று நாட்டில் மாட்டுக் கறி விஷயம் பெரிய பிரச்சனையை உண்டு பண்ணியிருக்கிறது. இறைச்சிக்காக மாட்டை வெட்டக் கூடாது. போத்தை வெட்டக் கூடாது, ஒட்டகத்தை வெட்டக் கூடாது என்றெல்லாம் சட்டம் போடுகிறார்கள். எதைச் சாப்பிட வேண்டும், எதைச் சாப்பிடக்கூடாது என்று சொல்வதற்கு இவர்கள் யார்? தனிமனித உரிமையில் தலையிட அவர்களுக்கு என்ன உரிமையிருக்கிறது. நமது நாட்டில் 75 சதவீதம் பேர் மாமிசம் சாப்பிடுகிறவர்கள், பல மதச் சடங்குகளுக்கும், திருமண வைபவங்களுக்கும் மாமிசம் தேவைப்படுகிறது. ஏன் இன்றைய இப்தார் விருந்திலும் மாமிச உணவுதான் அதிகமாக இடம் பெற்றிருக்கும். (இதைக் கூறிவிட்டு ஹாஜியாரைப் பார்த்துச் சிரித்தார். பதிலுக்கு ஹாஜியாரும் சிரித்தார்.) எனவே மாமிச விஷயத்தில் நாம் ஒன்றுபட்டு நிற்க வேண்டும்’’ என்று பேசி முடித்தார்.

அடுத்து அப்துல் சுக்கூர் மௌல்வி பேச அழைக்கப்பட்டார். அவரும் நோன்புடைய மகத்துவத்தைப் பற்றி, குர்ஆனிலிருந்தும், முகம்மது நபியின் வாழ்க்கை வரலாற்றிலிருந்தும் உதாரணங்களை எடுத்துக்காட்டிச் சிறப்பான முறையில் பேசினார். அத்தோடு மாட்டுக்கறி விஷயத்தையும் கையிலெடுக்க ஆரம்பித்தார்.

‘‘யார் என்ன உணவு சாப்பிட வேண்டும், யார் என்ன உடை உடுக்க வேண்டுமென்பது அவரவர் விருப்பம். அந்த உரிமையை யாராலும் தடுக்க முடியாது. நான் சாப்பிடாத உணவை நீயும் சாப்பிடக் கூடாது என்று சொல்வது ஜனநாயகத்திற்கு எதிரானது. எங்களுக்குப் பன்றிக் கறி சாப்பிட அனுமதி இல்லை. அதனால் பன்றிக் கறி சாப்பிடுபவர்களை நீயும் சாப்பிடக் கூடாது என்று தடுக்க முடியுமா? இஸ்லாமிய நாடான துபாயில் பன்றிக் கறி விற்பனை செய்யும் கடைகள் உண்டு. அங்குப் பன்றிக்கறி சாப்பிடும் பிற மதத்தவர்கள் அதிகமாக இருப்பதால், அந்த அரசு அதற்கு அனுமதி அளித்துள்ளது. ஆனால் இங்கே ஆடு, மாடு, ஒட்டகத்தை இறைச்சிக்காக கொல்லக் கூடாது என்று உத்தரவு போடுகிறார்கள். இது எவ்வளவு பெரிய கொடுமை. எனவே அரசும், சில அமைப்புகளும் இதைத் திரும்ப பெற வேண்டும். இந்த இப்தார் விருந்தில் ஒட்டகக் கறியும் இருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். ஒருவேளை பாய் அதற்கும் ஏற்பாடு செய்திருப்பார் என்று நினைக்கிறேன்’’ என்று கூறிவிட்டு, அப்துல் காதர் ஹாஜியாரைப் பார்த்துச் சிரித்தார் அவரும் பதிலுக்குச் சிரித்தார்.

ஒட்டகக்கறி பற்றிய பேச்சு எழுந்ததும் எல்லோர் மனதிலும் மகிழ்ச்சி தாண்டவமாடியது. இந்த விருந்தில் ஒட்டகக்கறியும் இருக்கும் என்று பலரும் நினைத்தனர்.

‘‘நீ ஒட்டகக் கறி சாப்பிட்டிருக்கியா...?’’

‘‘நான் இதுவரை சாப்பிட்டதே இல்லை.’’

‘‘நீங்க சாப்பிட்டிருக்கிறீங்களா...?’’

‘‘ஆமா! நான் சாப்பிட்டிருக்கிறேன். நான் சவுதி அரேபியாவில வேலைப் பார்த்தப்போ அங்க வச்சி பல தடவை சாப்பிட்டிருக்கேன்.’’



“எப்படி இருக்கும்?”

“சூப்பரா இருக்கும்.”

பந்தல் முழுவதும் ஒட்டகக் கறியைப் பற்றிய பேச்சுத்தான். எல்லோரும் ஒட்டகக் கறியின் சுவையை அறிய ஆவலாய் இருந்தனர். சரியாக 6.30 மணிக்கு பக்கத்துப் பள்ளிவாசலில் பாங்குச் சப்தம் கேட்க, முஸ்லீம்கள் அனைவரும் நோன்பு

திறக்கத் தயாரானார்கள். அனைவரின் முன்னிலும் பேரீச்சம்பழம் உட்பட ஏராளமான பழவகைகள் வைக்கப்பட்டுத் தண்ணீரும் வைக்கப்பட்டது. வந்திருந்த அனைவரும் பழங்களைத் தின்று தண்ணீரும் குடித்து மகிழ்ந்தனர். அடுத்த சில நிமிடங்களில் சிறிய பீங்கான் கோப்பையில் நோன்புக் கஞ்சி வந்தது. அதையும் பருகி மகிழ்ந்தனர்.

முஸ்லீம்கள், பக்கத்தில் அமைக்கப்பட்டிருந்த சிறிய பந்தலில் மாலை நேரத் தொழுகையை முடித்துவிட்டு வந்தவுடன் இப்தார் விருந்து ஆரம்பமானது.

ஒரு மேசையைச் சுற்றி நான்கு பேர் அமர்ந்தனர். ஒவ்வொருவரின் முன்னிலும் ஒரு பீங்கான் தட்டு வைக்கப்பட்டது. தண்ணீர் பாட்டிலும் தரப்பட்டது. சிறிது நேரத்தில் சப்ளையர், ஒவ்வொரு மேசையின் நடுவிலும் ஒரு பெரிய பாத்திரத்தில் பிரியாணியைக் கொண்டு வந்து வைத்தார்.

எல்லோரும் ஆசை ஆசையாகப் பிரியாணியை எடுத்துத் தங்கள் முன் உள்ள தட்டில் வைத்தனர். பிரியாணியைச் சாப்பிட ஆரம்பித்தபோது அவர்கள் அதிர்ச்சியடைந்தனர். பிரியாணி வெஜிடபிள் பிரியாணியாக இருந்தது. சந்தேகத்தில் கையைப் பிரியாணிக்குள் நுழைத்து கறி ஏதாவது இருக்கிறதா என்று தேடிப் பார்த்தனர். காய்கள்தான் கையில் கிடைத்தன. சிறிது நேரத்தில் புரோட்டா, இடியாப்பம் முதலிய உணவு வகைகளும், கூடவே வெஜிடபுள் கறி, வெஜிடபுள் குருமா, கடலைக் கறி, காய்கறிச் சூப்பு என எல்லாம் சைவ உணவாகவே வந்து கொண்டிருந்தன.

இதைப் பார்த்த அனைவரும் அதிர்ச்சியடைந்தனர். "என்ன? எல்லாமே சைவ சாப்பாடா இருக்கு. ஒருவேளை அசைவத்திற்கு வேறு பந்தல் ஏதாவது உண்டா...? நாம தெரியாம சைவப் பந்தலுக்கு வந்துவிட்டோமா...! என்று குழம்பினர்.

"ஏம்பா, அசைவ சாப்பாடு எங்கே போடுறாங்க...?" சப்ளையரைப் பார்த்துக் கேட்டனர் சிலர்.

"இல்லீங்க. எல்லாம் சைவச் சாப்பாடுதான்" என்று சிரித்தபடியே நடையைக் கட்டினான் சப்ளையர்.

"என்ன? எல்லா வருஷமும் மட்டன் பிரியாணி, சிக்கன் பிரை என்று அசைவச் சாப்பாடாகத்தானே போடுவாரு பாய். அதுவும் இந்த வருஷம் ஒட்டகக் கறி வேறு போடுவாருன்னு ஆசையைக் கிளப்பிவிட்டாங்களே! ஆனா எல்லாம் சைவ உணவாக அல்லவா இருக்கு. முஸ்லீம்கள் யாரும் இப்படி இப்தார் விருந்தில சைவ உணவு போட மாட்டாங்களே. பாயிக்கு இந்த வருஷம் என்ன ஆச்சி...?" எல்லோரும் முணுமுணுக்கத் தொடங்கினர்.

அப்போது அப்துல்காதர் ஹாஜியார் மைக்கைக் கையிலெடுத்தார்.

"என்ன...? இந்த வருஷம் சாப்பாடு எல்லாம் வெஜிடேரியன் சாப்பாடா இருக்குதுன்னு ஆச்சரியமா இருக்கா...? ஆமாம்! இந்த வருஷம் சைவச் சாப்பாடு போடனும்னுதான் முடிவு பண்ணினேன். ஏன்னா, இப்ப நம்ம நாட்டில மாமிசத்தைப் பத்திதான் விவாதமே நடந்திட்டு இருக்கு. அதவச்சி நம்முடைய சகோதரர்களிடையே மறைமுக யுத்தமே நடந்திட்டிருக்கு. ஏன் மாட்டுக் கறியை வச்சி நாடே பத்திக்கிட்டு எரியுது. இந்த நேரத்தில நான் ஆட்டையும், மாட்டையும், ஒட்டகத்தையும் அறுத்து விருந்து வைக்கிறது சரியா...? அது எரிகிற தீயில எண்ணெயை ஊத்துறது போல ஆயிடுமே! அதனாலத்தான் இந்த வருஷம் சைவ உணவுக்கு ஏற்பாடு செய்தேன். மனிதனுக்குச் சாப்பாடு முக்கியமல்ல. மனித நேயம்தான் முக்கியம். ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து வாழணும். அப்பத்தான் வாழ்க்கையில அமைதியும், சந்தோஷமும் கிடைக்கும். தப்பா நினைக்காதீங்க. எல்லோரும் சந்தோஷமா சாப்பிடுங்க. எல்லா வருஷமும் அசைவ உணவைத்தானே சாப்பிட்டீங்க. இந்த வருஷம் சைவ உணவை சாப்பிட்டு பாருங்க. உடம்பும் மனசும் நிறைவாக இருக்கும்... சரியா..." சிரித்தபடியே பேசினார்.

அப்துல்காதர் ஹாஜியாரின் நல்ல எண்ணம் சைவச் சாப்பாட்டில் கலந்திருந்ததால், அது அசைவச் சாப்பாட்டைவிட நன்றாகவும் சுவையாகவும் இருந்தது.

●

ஆன்மிகம்

# பின்னலூர் இராமலிங்கேஸ்வரர் ஆலயம்

**கோ**யில் பிரகாரத்தை வலம் வந்து ஈஸ்வரன் சந்நிதி முன்பு நின்றார்.

குருக்கள் திருநீறு பிரசாதத்தைத் தந்துவிட்டுக் கரிசனத்தோடு கேட்டார்.

"என்ன வழக்கமான உற்சாகம் இல்லை. ஏதோ கவலைபோல் தெரிகிறதே!"

"ஆமாம்... மனைவிக்குப் பிரசவ நேரம் நெருங்குகிறது. என்ன ஆகுமோ என்று அச்சமாக இருக்கிறது."

"எல்லாவற்றையும் அந்த மகாதேவன் தலையிலே போட்டு விட்டு நிம்மதியாகச் செல்லுங்கள்... எல்லாம் நல்லபடியாக நடக்கும். நான் சந்நிதியில் நின்று சொல்கிறேன். உங்கள் நல்ல மனதிற்கு ஒரு குறையும் வராது. இப்போது பிறக்கப் போகும் பிள்ளை இந்த ஈஸ்வரனின் அருளால் பேரும் புகழும் பெற்றுத் திகழ்வான்... கவலைப் படாமல் சென்று வாருங்கள்..."

குருக்களின் இந்த ஆறுதலான பதில் அந்த ஆண்டவனே கருணையோடு மனதை வருடிவிட்டது போல் தோன்றியது.



பேரா. எஸ்.கோகுலாச்சாரி

குருக்களின் வாக்குப் பொய்யாக வில்லை. ஒரு சில தினங்களில் சுகப் பிரசவம் ஆகியது.

ஓடோடி கோயிலுக்கு வந்தார். குருக்களிடம் மகிழ்ச்சியோடு சொன்னார்.

"சுவாமி! என் மனைவிக்கு சுகப் பிரசவமாகிவிட்டது."

"ரொம்ப சந்தோஷம். என்ன குழந்தை?"

"ஆண் பிள்ளை!"

"அப்படியா! என்ன பெயர் வைக்கப் போகிறீர்கள்?"

"நீங்களே சொல்லுங்களேன்..."

"நான் அன்றாடம் பூஜை செய்யும் இந்த ஈஸ்வரனின் திருநாமத்தைத் தவிர, வேறு என்ன பெயர் எனக்குத் தெரியும்..."

"ரொம்ப நல்லது. சுவாமி பெயரையே வைத்து விடுவோம்..."

குழந்தைக்கு என்ன பெயர் வைத்தார்கள் தெரியுமா?

இராமலிங்கம்! ஆம்... வள்ளலார் இராமலிங்க சுவாமி என்று சமரச சன்மார்க்கத்தையும், உலக ஜீவ காருண்ய ஒழுக்கத்தையும் நிறுவிய வடலூர் வள்ளலார் பெருமான்தான் அந்தக் குழந்தை!

குழந்தைக்காக வரம் வேண்டி நின்றவர் அவருடைய திருத் தந்தையார் மருதூர் இராமையாப் பிள்ளை!

அந்தத் திருக்கோயில் பின்னலூர் அருள்மிகு இராமலிங்க சுவாமி ஆலயம்!

**சுற்றிலும் அருமையான சந்நிதிகள்:** கிழக்கு நோக்கிய வாசல்! கிட்டத் தட்ட குட்டி மலைக்கோயில் போன்ற தோற்றம்! சுத்தமாகப் பராமரிக்கப் பட்டு வருகிறது!

படியேறினால் முகப்பிலே பார்வதி பரமேச்வரரின் திருவுருவம்! இடது பக்கம் பிள்ளையார் சந்நிதி! கீழே வலதுபுறம் தேவாரப் பாட சாலை!

சிறிய பிரகாரம். உள்ளே கரு வறையில் எழில் கொஞ்சும் தோற்றத் தோடு இராமலிங்கேஸ்வரர் அருள் தருகிறார்.

வாஸ்து அமைப்புப்படி ஈசான்யத்தை ஒட்டி கிணறு. கன்னி மூலையில் கணபதி. வள்ளி தெய் வானையுடன் சுப்ரமணியர். பெரு மாள். மகாலட்சுமித் தாயார் சந்நிதி கள். மகா மண்டபத்திலேயே தெற்கு பார்த்தபடி காலைத் தூக்கி நின்றாடும்

## பேருந்தில் அமைச்சர்!



1956 நவம்பர் மாதம் அரியலூரில் இரயில் விபத்து ஏற்பட்டது. 150 பேர் இறந்தனர். உடனே இரயில்வே அமைச்சர் பதவியை அவர் ராஜினாமா செய்தார். அத்துடன் ஒரு வேண்டுகோளையும் விடுத்தார்.

"தயவுசெய்து யாரும் என்னை 'ராஜினாமா வாபஸ் பெறுங்கள்' என்று வற்புறுத்தாதீர்கள்... என் மனசாட்சி அதற்கு இடம் தராது!" என்றார். மேலும் அரசு வாகனத்தில் ஏற மறுத்து, பேருந்தில் வீடு வந்து சேர்ந்தார் அந்த அமைச்சர்.

அவர் யார்...? லால்பகதூர் சாஸ்திரி!

– த.சீ. பாலு

ஸ்ரீ சிவகாமசுந்தரி சமேத நடராஜ மூர்த்தியின் எழில் தோற்றம்! அதனை ஒட்டி வடமேற்கு மூலையில் நவக்கிரக சந்நிதிகள்.

**வீதி வலம் இல்லை :** 300 வருஷங் களுக்கு மேலான சந்நிதி! செங்கல் தனியாகச் சிதிலமடையக் கூடிய நிலையில் இருந்ததை சிதம்பரம் கார் காத்த வேளாளர்கள் ஒன்று சேர்ந்து குறிப்பாக அப்போது சிதம்பரம் பாராளுமன்ற உறுப்பினரான கணபதி பிள்ளை தலைமையில் கற்றளியாக அமைத்தனர்.

**குருக்கள் சொன்னார் :** ஓர் உற் சவம் பாக்கி கிடையாது. கந்த சஷ்டி, விநாயக சதுர்த்தி, கார்த்திகை சோம வார விரதம், ஆனி, மார்கழி, திருவா திரைத் திருநாட்கள், தனுர்மாத திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி, மகாசிவராத்திரி, பிரதோஷ கால பூஜைகள்... ஒன்றும் பாக்கியில்லை. என்ன ஒன்று... சுவாமி வீதிவலம் வருவது கிடையாது. எல்லாமே கோயி லுக்கு உள்ளேதான்.

**ஏன் இராமலிங்கர் திருக்கோயில்?**

தமிழகத்தில் இராமேஸ்வரம் திருத்தலம் புகழ்பெற்றது.

மதுரை சொக்கநாதர் பெயரிலும், இராமேஸ்வரம் ஸ்ரீ இராமலிங்க சுவாமி பெயரிலும், காசி விஸ்வநாதர் பெயரிலும் பல்வேறு ஊர்களில் ஆலயங்கள் இருக்கின்றன.

அந்தக் காலத்தில் எல்லோராலும் நீண்ட பிரயாணங்கள் மேற்கொண்டு காசிக்கும், இராமேஸ்வரத்திற்கும், மதுரைக்கும் சென்று தரிசனம் செய்து விட்டு வரமுடியாது. வசதி படைத்த வர்களில் ஒரு சிலர் போய் தரிசனம் செய்துவிட்டு வந்தாலும், ஊரிலுள்ள எல்லோராலும் போய் தரிசனம் செய்துவிட்டு வரமுடியாது.

அதனால் ஊரிலுள்ளோர் எல் லோரும் தினசரி வந்து வழிபடும்படி, வசதி படைத்தவர்கள் காசி விஸ்வ நாதரைப் போலவும், இராமேஸ்வரம் இராமலிங்கரைப் போலவும், மதுரை சொக்கநாதரைப் போலவும் உள்ள ஆலயங்களை அமைத்து வைத்திருக் கிறார்கள்.

**பெயர்க் காரணம் :** அப்படி 300 வருஷங்களுக்கு மேலாக அமைத்து வழிபட்டு வரும் ஒரு திருக்கோயில் தான் பின்னலூர் ஸ்ரீ இராமலிங்க சுவாமி திருக்கோயில்.

தலைமைக் குருக்களும், வருபவர் களிடம் கனிவாகப் பேசி வரலாறு களை எடுத்துரைக்கிறார்கள்.

விடைபெறுவதற்கு முன் குருக்களிடம் கேட்டேன். "அது என்ன ஊருக்குப் பின்னலூர் என்று பெயர்?"

"இந்த ஊருக்குப் பெயர் புன்னை நல்லூர்... (தஞ்சாவூருக்குப் பக்கத் திலே புன்னைநல்லூர் என்று பிரசித்தி பெற்ற ஊர் இருக்கிறது. புன்னை மரங் கள் எங்குப் பார்த்தாலும் வளர்ந்து அழகிய காடாக இருப்பதால் அந்தப் பெயர். புன்னை நல்லூர்தான் மருவி பின்னலூர் ஆயிற்று."

நல்ல வளமையான ஊர். நெல் லும், கரும்பும், வாழையும் விளை கின்றன. காரணம் பக்கத்திலேயே இருக்கும் நெய்வேலித் தண்ணீர் மற்றும் வாலாஜா ஏரி!

கும்பகோணம் – தஞ்சாவூர் நெடுஞ்சாலையில் சேத்தியாதோப்பு என்ற ஊருக்கும் வடலூருக்கும் இடை யில் நெடுஞ்சாலையை ஒட்டியே அமைந்துள்ள ஊர் பின்னலூர். பேருந்து வசதிகள் உண்டு.

வடலூர் இராமலிங்க சுவாமியைத் தந்த பின்னலூர் இராமலிங்க சுவாமி யைத் தரிசனம் செய்துவிட்டு வர லாமே!

●



பாரதப் பிரதமர்
நரேந்திர மோடி

# இனி வரும் ஆட்சி 'கிச்சடி' ஆட்சியா?

இந்திய ஜனநாயகத்தில் தேர்தல் மூலம் ஐந்தாண்டு ஆட்சி அமைக்கப்பட்டு நடைபெறுகிறது. இதுதான் மக்களாட்சி. ஜவஹர்லால் நேரு பிரதமராக 1947 முதல் 1964 வரை 17 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். அவரைத் தொடர்ந்து லால்பகதூர் சாஸ்திரியின் ஆட்சி இரண்டாண்டுக்கால குறுகிய ஆட்சியாக இருந்தாலும், குறிப்பிடத்தக்க ஆட்சியாக அமைந்தது.

அவரைத் தொடர்ந்து திருமதி இந்திராகாந்தியின் ஆட்சி 1966 – 1977 வரை 11 ஆண்டுகள் நடைபெற்றது. இந்த மூன்று ஆட்சிகளும்தான் இந்தியாவில் திருப்புமுனைகளை உருவாக்கிய ஆட்சிகள். காங்கிரஸ் ஆட்சி ஏறக்குறைய 30 ஆண்டுக் காலத்திற்குத் தொடர்ச்சியாக நடைபெற்றது.

அதற்குப் பிறகு மொரார்ஜி தேசாய், சரண்சிங், ராஜீவ்காந்தி, வி.பி.சிங். சந்திரசேகர், நரசிம்மராவ், தேவகவுடா, குஜ்ரால் ஆகியோருடைய ஆட்சிகள் ஜனநாயகத்தின்படி பிரதமரைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தனவே தவிர, சாதனை புரிந்த ஆட்சிகளாக இல்லை.

மொரார்ஜி தேசாய் ஆட்சி, அவருடைய கட்சிக்காரர்களாலேயே கவிழ்க்கப்பட்ட ஆட்சி. சரண் சிங் ஆட்சி, காங்கிரஸ் ஆதரவில் உருவாக்கப்பட்டுக் காங்கிரசே அதைக் கவிழ்த்தது. வி.பி.சிங், சந்திரசேகர், தேவகவுடா, குஜ்ரால் ஆகியோரின் ஆட்சி குட்டி குட்டி ஆட்சிகளாகவே அமைந்தன.

நரசிம்மராவின் ஆட்சி மைனாரிட்டி ஆட்சியாக எதிர்க்கட்சித் தலைவர் வாஜ்பாயின் தயவால் 5 ஆண்டுகளை நிறைவு செய்தது. ஆகவே நேரு, சாஸ்திரி, இந்திராகாந்தி ஆகியோரின் மூன்று ஆட்சிகளோடு வாஜ்பாய் ஆட்சியைச் சேர்த்து மதிப்பீடு செய்தால் குறிப்பிடத்தக்க சாதனைகளை நாம் காண முடியும்.

தற்போது நான்கு ஆண்டுகளைப் பூர்த்தி செய்துள்ள நரேந்திர மோடியின் ஆட்சி இந்திய அரசியல் வரலாற்றில் பரபரப்பூட்டக்கூடிய நடவடிக்கைகளால் பிரபலமடைந்துள்ளது. பண மதிப்பு இழப்பு நடவடிக்கை, சரக்கு மற்றும் சேவை வரி நடவடிக்கை, மேக் இன் இந்தியா, டிஜிட்டல் இந்தியா, ஸ்டார்ட் அப் இந்தியா முதலியவற்றால் மோடி ஆட்சி எப்போதுமே பேசப்படுகிற ஆட்சியாக நிகழ்ந்து வருகிறது.

ஆனால் உற்றுப் பார்த்தால், இந்த ஆட்சியின் சாதனைகள் குறிப்பிடத்தக்கவாறு இல்லை என்பதே உண்மை என்கிறார்கள் விமர்சகர்கள்.

1977 முதல் 98 வரை ஏறக்குறைய 21 ஆண்டுக்காலம் இந்தியாவில் நடந்த மத்திய ஆட்சி மொரார்ஜி தேசாய், சரண்சிங், வி.பி.சிங், சந்திரசேகர், தேவகவுடா, குஜ்ரால் ஆகியோரைப் பிரதமராகக் கொண்டு நிர்வாகம் நடைபெற்றதே தவிர, நினைத்துப் பார்க்கிற சாதனைகள் எதுவும் நிகழவில்லை.

இதே காலகட்டத்தில் பக்கத்தில் இருக்கிற சீன தேசத்தை ஒப்பிட்டுப் பார்த்தால், அங்கே ஏறக்குறைய சர்வாதிகார ஒற்றைக்கட்சியே ஆட்சி செய்தாலும், சீன அரசின் சாதனைகள் வரலாற்றுச் சிறப்புமிக்கதாக அமைந்தன.

ஷாங்காய் தொழில் நகரம் பாய்ச்சல் வேகத்தில் முன்னேறியது. வெளிநாட்டு மூலதனம் – குறிப்பாக அமெரிக்க மூலதனம் சீன மண்ணில் எந்தத் தடையும் இல்லாமல் அனுமதிக்கப்பட்டது. அதுமட்டுமல்ல, அந்தத் தொழிற்சாலைகள் சீனாவில் வளர்வதற்கு அவசியமான இடவசதி, சாலை



வசதி, மின்சார வசதி, தண்ணீர் வசதி, ஏற்றுமதிக்கான துறைமுக வசதி ஆகிய அனைத்தும் அரசாங்கத்தின் அதிகார வர்க்கத்தின் மூலம் வழக்கமாகச் செய்யப்படுகிற தாமதமில்லாமல் சீனாவில் உடனடியாக நிறைவேற்றப்பட்டன.

அதனால், தொழிற்சாலைகள் தொடங்கப்பட்டு உற்பத்தியில் தாமதமில்லாமல் அவை ஈடுபட்டன. வெளிநாட்டு மூலதனம் தொழிற்சாலையை உருவாக்க உதவியதால், அந்த மூலதனத்திற்குரிய லாபம் அமெரிக்க, ஜப்பான் முதலாளிகளுக்கும் சீனாவில் படித்த இளைஞர்களுக்கு வேலைவாய்ப்புத் தருவதற்கும் சீனாவுக்கும் பயன் பட்டன.




1977 – 1998 வரை 21 ஆண்டுகளில் இந்தியா சாதாரணமானவர்களுக்கும் குறைவான பிரதமர்களையே பெற்றதால், தொடர்ந்து முன்னேறாமல் தேங்கிவிட்டது. இதனை இன்னொரு தேசத்தின் வேகத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால்தான் நாம் நகரவில்லை என்பது நமக்குப் புரியும்.







பக்கத்தில் உள்ள சீன தேசத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம். சீன தேசத்தின் ஆட்சி, கம்யூனிச ஆட்சி. ஒரு கட்சி ஆட்சி, சர்வாதிகார ஆட்சி. இந்தியாவின் ஆட்சி, ஜனநாயக ஆட்சி, முதலாளித்துவ ஆட்சி. பல கட்சி ஆட்சி. இந்த இருவேறு விதமான ஆட்சி முறைகளால் சீனத்தின் முன்னேற்றம் பாய்ச்சல் வேகத்தில் இருந்தது. இந்தியாவின் முன்னேற்றமோ, நத்தை வேகத்தில் அமைந்தது. அதைக் கீழே வருகிற புள்ளி விவரங்கள் நமக்குத் தெளிவாக விளக்குகின்றன.

சீன தேசத்தின் மக்கள் தொகை 140 கோடி. இந்தியாவின் மக்கள் தொகையோ 130 கோடி. சீன தேசத்தில் ஓராண்டு உள்நாட்டு உற்பத்தி (ஜி.டி.பி.) 980 லட்சம் கோடி ரூபாய். இந்தியாவின் ஜி.டி.பி.யோ, 175 லட்சம் கோடி ரூபாய். இந்தியாவைப் போல சீன தேசம் 9 மடங்கு முன்னேறியதைத்தான் பாய்ச்சல் வேகம் என்று சொல்கிறோம்.

இதேபோல, சீன தேசத்தில் ஆராய்ச்சியாளர்களின் எண்ணிக்கை 16 லட்சம். ஆராய்ச்சியாளர்கள்தான் ஒரு தேசத்தின் அபிவிருத்திக்கான மூல விதைகளைத் தரக்கூடியவர்கள். இந்தியாவில் ஆராய்ச்சியாளர்களின் எண்ணிக்கை 3 லட்சம் மட்டுமே. சீனத்தில் ஆராய்ச்சியாளர் எண்ணிக்கை ஐந்து மடங்கு அதிகம்.

ஆராய்ச்சிக்குச் சீனா செலவு செய்யும் தொகை 19 லட்சத்து 46 ஆயிரம் கோடி ரூபாய். இந்தியாவோ, ஒரு லட்சத்து 5 ஆயிரம் கோடி ரூபாய் தான் ஆராய்ச்சிக்காகச் செலவு செய்கிறது.

சீன தேசம் கல்விக்குச் செலவழிப்பது 40 லட்சம் கோடி ரூபாய். அதேசமயம் இந்தியா செலவழிப்பதோ, 4 லட்சம் கோடி ரூபாய் மட்டுமே. நம்மைவிட 10 மடங்கு சீனா கல்விக்குச் செலவழிக்கிறது.

உலக நாடுகளின் தர வரிசையில் 100 நாடுகளை வரிசைப்படுத்தியிருக்கிறார்கள். அதில் இந்தியா தரமே இல்லாத பூஜ்யத் தரத்தில் உள்ள நாடு. சீன தேசமோ, அந்த 100 நாடுகளில்


ராகுல் காந்தி

6–ஆவது இடத்தைப் பெற்றுள்ளது.

சீன தேசத்திலுள்ள விஞ்ஞானிகளின் எண்ணிக்கை 4 லட்சத்து 26 ஆயிரம். இந்தியாவிலோ 1 லட்சத்து 2 ஆயிரம் மட்டுமே. என்ன சொல்வது?

சீனா மருத்துவ வசதிக்காக 48 லட்சத்து 80 ஆயிரம் கோடி ரூபாய் செலவு செய்கிறது. இந்தியாவோ 2 லட்சத்து 3 ஆயிரம் கோடி மட்டுமே செலவு செய்கிறது. இதேபோல, சீனாவில் முதன் முதலாகத் தொடங்கப்பட்ட தொழிற்சாலைகளின் (ஸ்டார்ட் அப் கம்பெனி) மூலதனம் 4 லட்சத்து 6 ஆயிரம் கோடி ரூபாய். இந்தியாவிலோ ரூபாய் 1 லட்சம் கோடி கூட இல்லை. வெறும் 91 ஆயிரம் கோடி ரூபாய்தான்.

இந்த லட்சணத்தில், நாம் ஜனநாயக நாடு என்கிறோம். சீனாவைச் சர்வாதிகார நாடு என்கிறோம்.

பிரதமர் நரேந்திரமோடியின் நான்கு ஆண்டு ஆட்சியின் சாதனை அடிப்படையில்தான் இரண்டாம் முறை வெற்றியோ, தோல்வியோ அமையும். தொடர்ந்து வெற்றி பெற்றுக் கொண்டு வந்த பா.ஜ.கட்சி தொடர்ந்து தோல்விகளைத் தழுவிக் கொண்டு வருகிறது. தோல்வி என்பது இப்படியே தொடர்ந்தால், வரும் நாடாளுமன்றத் தேர்தலிலும் தோல்விதான் என்கிறார்கள் விமர்சகர்கள்.

முதலாவதாக, மோடி ஆட்சி ஒரு சில நல்லவற்றையும் சாதித்திருக்கிறது என்பது உண்மை. உதாரணமாக, சுமார் 35 கோடி புதிய வங்கிக் கணக்குகள் திறக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் மூலமாக மக்களுக்குச் சேர வேண்டிய மானியங்கள் போய்ச் சேர்கின்றன.

இரண்டாவது, மறைமுக வரிச் சீர்திருத்தம், ஜி.எஸ்.டி. பரவலாக நன்மை புரிந்திருக்கிறது என்றாலும்கூட, ஜி.எஸ்.டி.யால் பல சிறு குறு தொழிற்சாலைகள் மூடப்பட்டுவிட்டன என்று கூறப்படுகிறது. அதுவும் தொழில்மயமான மாநிலமான தமிழ்நாட்டில், 50 ஆயிரம் தொழிற்சாலைகள் மூடப்பட்டுவிட்டன என்று செய்திகள் சொல்கின்றன.

வியாபாரம் சுலபமாகச் செய்யும் நாடாக இருந்த இந்தியாவை இனி அப்படி நினைக்க முடியவில்லை. காரணம், 140–இல் இருந்த இந்தியா, இப்போது 100 ஆகிவிட்டது. இதை ஏதோ தமக்குச் சம்பந்தம் இல்லாத விஷயம்போல் மக்கள் நினைக்கிறார்கள்.

விலைவாசி அதிகமாக ஏறாமல் பார்த்துக் கொள்வது, பற்றாக்குறை பட்ஜெட்டைக் கட்டுக்குள் வைத்திருப்பது, கணக்கு, வழக்குப் பற்றிய விவகாரங்களை மக்கள் கண்டு கொள்வதே இல்லை.

இந்தியாவை உலகின் முதல் வரிசை நாடாகத் தொழில் வளர்ச்சியில் காட்டிக்கொள்ள 'மேக் இன் இந்தியா' என்ற திட்டம் அறிவிக்கப்பட்டது. ஆனால், 'ரிசல்ட்' ஒன்றும் இல்லை.

லஞ்ச ஊழல் இல்லா ஆட்சி இது என்று கூறுவதைச் சாதனையாக எடுத்துக் கொள்ள முடியாது.

ஒரு வேளை இந்த முறை இடப்பட்ட பலமான அஸ்திவாரத்தால் அடுத்த முறை பெரும் பயன்கள் நாட்டிற்குக் கிட்டும் என்று பரவலாகப் பேசப்படுகிறது. இது ஒரு கண்ணுக்குத் தெரியாத விஷயம். மொத்தத்தில் பெரிய பெரிய எதிர்பார்ப்புகளை ஏற்படுத்திவிட்டு, அவற்றை உண்மையாக்கும் சாதனைகள் எதுவும் இல்லை என்பதுதான் உண்மை.

அடுத்து, எதிர்க்கட்சிகள் ஆட்சிக்கு வந்தால், குழாயடிச் சண்டைதான் நடக்கும். முன்பு 21 ஆண்டுகளைக் கண்டது போலத்தான் இருக்கும். அதனால், இன்னும் பல ஆண்டுகளுக்கு இந்தியா பின்தங்கிய நாடாகத்தான் இருக்கும்.

இந்த எதிர்க்கட்சிகள் தனித்தனியே இந்தியாவின் மாநிலங்களில் முன்பு ஆட்சி செய்தவைதான். அவை லஞ்ச ஊழல் ஆட்சிகள்தான். ஆனால், வேறு வழியில்லாமல் மாற்றுக் கட்சிகளுக்கு மக்கள் வாக்களிப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அப்படி ஆட்சி மாறினால், அது அலங்கோல ஆட்சியாகத்தான் இருக்கும்.

ராகுல்காந்தி, இன்றுவரை காங்கிரஸ் கட்சியின் திட்டம் என்ன? எவ்வாறு அது மக்களுக்குப் பயனளிக்கும் என்று பேசவில்லை. அவர் மோடியைத் தனிப்பட்ட முறையில் சதா கிண்டல் செய்வதும், மோடியின் ஆடை, அணிகள் பற்றியும், அவர் ஏறிச் செல்லும் விமானம் பற்றியும்தான் பேசுகிறார்.

இவர் இன்னும் எல்.கே.ஜி.யிலிருந்து ஒன்றாம் வகுப்புக்குக்கூட வந்த மாதிரித் தெரியவில்லை. இன்னும் 'பச்சா'வாகவே இருக்கிறார். இவரை நம்பி ஒரு பெரிய நாடு இருக்க முடியுமா?

அதனால், எதிர்க்கட்சிகளின் ஆட்சி 'கிச்சடி அல்லது மசாலா' ஆட்சியாகத்தான் இருக்க முடியும். ●

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 36 ஆகஸ்ட் 2018 இதழ் : 7

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **த. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,

E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,

கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும்,
சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ
ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-** (10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD.
A/c OMSAKTHI" என்ற பெயரில்
D.D.–யாகவோ அல்லது மணியார்டர்
மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :
**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் : **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail : omsakthieditorial@gmail.com


**சமையல்**

# சோயா டிலைட்



**தே**வையானவை : சோயா பைட் : 1/4 கிலோ, தக்காளி 2, வெங்காயம் 2, வெள்ளைப் பூண்டு விழுது : 1/2 தேக்கரண்டி, இஞ்சி விழுது : 1/2 தேக்கரண்டி, கரம் மசாலா : 1 தேக்கரண்டி, மஞ்சள் தூள் சிறிது, எண்ணெய் தேவைக்கு, தேங்காய்ப் பால் 1/2 டம்ளர், கடுகு, கறிவேப்பிலை தாளிக்க, உப்பு தேவைக்கு.

**செய்முறை :**

1. சோயா பைட்டை நன்கு கொதித்த நீரில் அரை மணி நேரமிட்டு, பின்னர் நீரை வடித்துக் களைந்து விடவும்.
2. தக்காளி, வெங்காயம் இரண்டையும் நீள வாக்கில் நறுக்கி வைக்கவும்.
3. வாணலியில் சோயா பைட்டை இட்டு, தக்காளி, வெங்காயம் சேர்த்துத் தேவையான நீர் ஊற்றி வேக வைக்கவும்.
4. பாதி பதம் வெந்ததும், மஞ்சள் தூள், பூண்டு, இஞ்சி விழுது, தேங்காய்ப் பால், கரம் மசாலா, உப்பு கலந்து, நன்குக் கிளறிக் கொடுத்துத் தொடர்ந்து வேக விடவும்.
5. கலவையில் நீர் சுண்டி வெந்து, கமகமவென மசாலா வாசனை வரும்வரை வேக வைக்கவும்.
6. சோயா பைட்டில் மசாலாக் கலவை நன்கு சுருண்டு வந்ததும், கடுகு, கறிவேப்பிலை தாளித்திட்டு இறக்கவும்.

சுவையான 'சோயா டிலைட்' தயார்.

சாம்பார் சாதம், ரசச் சாதம், தயிர்ச்சாதம் என எல்லாச் சாதங்களுடனும் வைத்துச் சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும். சோயா சேருவதால் புரதம், தாதுப் பொருட்கள், வைட்டமின்கள் எனச் சத்துக்கள் நிறைந்த உணவு இது.

– **ராதிகா அழகப்பன்**, விக்கிரமசிங்கபுரம்.

# ஏஆர்சி ரிட்ரெடிங் கம்பெனி (பி) லிமிடெட்

மதிப்பிற்குரிய வாடிக்கையாளர்களின் தொடர்ந்த நல் ஆதரவினால்
பொன்விழா ஆண்டை கடந்து சேவை செய்வதில்
பெருமிதமும் மகிழ்ச்சியும் கொள்கிறோம்

மேலும் தங்களது தொடர்ந்த ஆதரவினை எப்பொழுதும் போல் கொடுத்து
ஆதரிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

உழைப்பு! தரம்! சிக்கனம்! இவற்றின் சின்னம்




டிரக்குகள், இலகுரக வாகனங்கள் மற்றும் கார் ஆகியவற்றின் டயர்களை
MRF ப்ரீக்யூர்ட் முறையில் ரிட்ரெடிங் செய்வதில் நாங்கள் வெற்றிநடை
போட்டு முன்னணியில் திகழ்கின்றோம்.

மேலும் கன்வென்சனல் முறையில் டிரேக்டர் உட்பட எல்ல வகையான டயர்களையும்
ரிட்ரெடிங் செய்வதற்கும், ரேடியல் டயர்களை ரிட்ரெடிங் செய்வதற்கும் தேவையான
அனைத்துச் சிறப்பு திறனையும் எங்களது நிறுவனங்கள் பெற்றுள்ளன.

பதிவு அலுவலகம் :

**ஏஆர்சி ரிட்ரெடிங் கம்பெனி (பி) லிமிடெட்**

(ஏபிடி – சக்தி குரூப்)

64, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயமுத்தூர் – 18

தொலைபேசி : 0422–2234500, 2234600

கிளை அலுவலகம் :

10–ஏ/1, திருவனந்தபுரம் ஹைரோடு, திருநெல்வேலி – 627 002

போன் : 2502403



டாக்டர் பி. சரவணன்

# வைட்டமின் 'சி' 'மிராக்கிள்' பானம்

வைட்டமின் 'சி' என்ற உயிரிய சத்து (Vitamin C) நமது உடலுக்கு மிக முக்கியமான ஒன்றாகும். இந்தச் சத்துக் குறைபாடு ஏற்பட்டால், முதல் அறிகுறிகளாக வாயில் புண், பல் ஈறுகளில் இரத்தக் கசிவு முதலியவை ஏற்படும்.

பண்டைக் காலங்களில் கடல் பயணங்கள் மேற்கொள்வோர் நீண்ட நாள் பயணித்தால், இந்தச் சத்துக் குறைபாடு ஏற்பட்டு மரணமடைந்துள்ளதாக வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. இந்தச் சத்துக் குறைபாட்டை 'ஸ்கர்வி' என்று அழைப்பர்.

வைட்டமின் 'சி' சத்து நமக்குக் கிடைக்கும்போது நாம் நோயின்றி நீண்டநாள் ஆரோக்கியமாக வாழலாம். இதனைச் சித்த மருத்துவர்கள் 'காயகற்ப மருந்துகள்' என்று அழைப்பர். காய கற்பம் என்றும் கூறுவர். 'காயம்' என்றால் உடல். கற்பம் என்றால் நீண்ட நாள் நம் உடல் கல்போல் உறுதியாக நோயின்றி வாழ்வது.

வைட்டமின் சத்துக்களை உயிரியச் சத்துக்கள் என்று சித்த மருத்துவத்தில் அழைப்பர். வைட்டமின் 'சி' அதிகமாக உள்ள நெல்லிக்கனியைச் சங்க காலத்தில், தனக்குக் கிடைத்த மருத்துவக் குணமுடைய நெல்லிக்கனியைக் கடையெழு வள்ளல்களில் ஒருவரான அதியமான் ஔவையாருக்கு வழங்கி, இதைத் தான் உண்டு நீண்டநாள் வாழ்வதை விட, ஔவையார் உண்டு நீண்ட காலம் வாழ்ந்து தமிழை வளப்படுத்த விரும்பியதை அறிவுறுத்தியதை நாம் படித்துள்ளோம்.

இதிலிருந்து வைட்டமின் 'சி' கனிகளான எலுமிச்சை, ஆரஞ்சு, நாரத்தை முதலியவற்றை (சிட்ரஸ் பழங்கள்) உண்டால், நாம் நோய் எதிர்ப்புச் சக்தி பெற்று, கொடிய நோய்களான புற்றுநோய், உடல் பலகீனம், HIV, இருதய நோய் முதலியவற்றிலிருந்து தற்காத்து நீண்ட ஆயுளுடன் வாழலாம்.




இத்தகைய சிறப்புடைய வைட்டமின் 'சி'-யுடன் லெசிதீன், லைசின், புரோலீன், மற்றும் பாஸ்போலிப்பிடுகள், அமினோ அமிலங்கள் கலந்து தரும்போது உடலுக்கு மிகவும் நன்மையளிக்கிறது.

இதனை 'சக்தி' குழும நிறுவனங்கள் மற்றும் என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்

களின் சேர்மன் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள், இந்தச் சமூகத்தில் புற்று நோய், இருதய நோய், HIV முதலிய கொடிய நோய்களிலிருந்து மக்களைக் காக்கவும், இந்நோயால் பாதிப்படைந் தவர்கள் விரைவில் குணமடைந்து நல்ல நிலையை அடையவும் சுமார் 8 ஆண்டு களாக இடைவிடாமல் உன்னதமான முயற்சி செய்து இந்தப் பானத்தினை உருவாக்கியுள்ளார்.

மேலைநாடுகளில் வைட்டமின் 'சி' மருந்தினை ஊசி மூலமாக சுமார் 2 லட்சம் நோயாளிகளுக்கு வழங்கிய புகழ் பெற்ற அமெரிக்க மருத்துவர் டாக்டர் ரான் ஹன்னிங்கே இந்த வைட்டமின் சி–யை நரம்பின் வழியாகச் செலுத்தும் முறையினை இந்திய மருத்துவர் களுக்குக் கற்றுத் தருவதற்காகக் கடந்த ஜூன் 8, 9 ஆகிய நாட்களில் பொள் ளாச்சி எம்.சி.இ.டி. கல்லூரி வளாகத் தில் நடைபெற்ற கருத்தரங்கத்திற்கு அழைக்கப்பட்டிருந்தார். அதில் நானும் கலந்து கொண்டேன்.

உடலில் வைட்டமின் 'சி' மற்றும் மற்றைய அமினோ அமிலங்கள் எவ் வாறு செயல்படுகின்றன, அவற்றின் அடிப்படை அறிவியல் முதலியவற்றை மருத்துவர்கள் மட்டுமல்லாது, மற்றவர் களும் எளிதில் புரிந்துகொள்ளும் வகை யில் அவர் விளக்கிக் கூறினார்.

எனது அனுபவத்தில் கடந்த 2 வருடங்களாக, சித்த மருத்துவச் சிகிச் சைப் பெற்றுவரும் சுமார் 20–க்கும் மேற்பட்ட நோயாளிகளுக்கு இந்த மருந்தினை எடுக்கப் பரிந்துரைத்தேன். இதில் ஒண்டிப்புதூரைச் சேர்ந்தவர் திருமதி ராஜாமணி, (வயது 68). இவ ருக்கு மூளையில் பிட்யூட்டரி சுரப் பிக்குக் கீழ் பட்டாணி அளவில் கட்டி தோன்றியிருந்தது. அதனைக் கோவை மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் மூக்கின் வழியாக ஸ்கோபிக் கருவி மூலம் அறுவைச் சிகிச்சை செய்து சுமார் 5 ஆண்டுகளுக்கு முன் அகற்றி யிருந்தனர்.

மீண்டும் அதே இடத்தில் அந்தக் கட்டியானது வளரத் தொடங்கியிருந் தது. திரும்பவும் அவர் மருத்துவமனைக் குச் சென்றபோது, மருத்துவர்கள் இம் முறை அறுவைச் சிகிச்சை செய்ய முடி யாது என்றும், அவ்வாறு செய்தால் உயி ருக்கு ஆபத்தாக முடியும் என்றும் கூறிவிட்டனர்.

எனவே அந்தக் கட்டிக்கான சிகிச்சை மேற்கொள்ள அவரும், அவ ரது மகனும் கோவை, வரதராஜபுரத்தில் உள்ள கஸ்தூர்பா காந்தி சித்த மருத்துவ மனைக்கு வந்தனர். அவர்களுக்குச் சித்த மருத்துவ முறையில் சிகிச்சையைத் தொடங்கி, கூடவே வைட்டமின் 'சி' பானத்தையும் எடுக்க அறிவுறுத்தி னேன். அவர், மருந்தினையும் உட் கொண்டு வைட்டமின் 'சி'-யையும் சுமார் ஒரு வருடமாக எடுத்து வந்தார். தற்போது கட்டியின் தீவிரமும் குறைந்து உடல்நலமும் பெற்று வேலைக்குச் சென்று வருகிறார்.

இதுபோல வைட்டமின் 'சி' பானத் தினை அருந்தி வரும் அனைத்து நோயாளிகளும் புத்துணர்வாகவும், நோயின் தீவிரத்திலிருந்து விடுபட்ட தாகவும் கூறி வருகின்றனர்.

இந்தப் பானத்தினை நோயில்லா தவர்களும் அருந்தலாம். தினந்தோறும் இதனை அருந்திவர, நோய் வராமல் எதிர்ப்புச் சக்தி பெற்று நலமுடன் வாழலாம்.

இந்தப் பானத்தினை அருந்தி வரும் போது புற்றுநோய் பாதிப்பு, இரத்தக் குழாய் அடைப்பு, இருதய நோய்கள் மற் றும் பிற பாதிப்புகளிலிருந்தும் தற் காத்துக்கொள்ள முடியும்.

இந்த வைட்டமின் 'சி' பானமானது நோய் எதிர்ப்புச் சக்தியை உருவாக்கி, பல கொடிய நோய்களின் பாதிப்பி லிருந்து பாதுகாத்து, மருத்துவ உலகில் புதிய பரிணாமத்தை உருவாக்கும் என்ப தில் எந்த ஓர் ஐயமும் இல்லை என்பதை உறுதியாகக் கூறலாம். தொடர்புக்கு – தொலைபேசி : 0422–2580796, செல் லிடப் பேசி : 9043212789. ●

விவாதம்

# நாடாளுமன்றம் சட்டமன்றங்களுக்கு ஒரே சமயத் தேர்தல்







**நா**டாளுமன்றம் என்பது நமது நாட்டின் மத்திய ஆட்சியை உருவாக்கக்கூடிய அமைப்பு. இதேபோல நமது மாநிலங்களின் ஆட்சிகளை உருவாக்குவதற்கான அமைப்புதான் மாநிலச் சட்டமன்றங்கள். இவை இரண்டையும் Legislative என்பார்கள். அதாவது, சட்டங்களை வகுப்பதற்காக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் சபைகள் இவை.

இந்தச் சபைகள் நிறைவேற்றிய சட்டங்களைத்தான் Executive எனப்படும் அரசு அதிகாரிகள் நடைமுறைப்படுத்துகிறார்கள். அவ்வாறு செய்கிறபொழுது அரசமைப்புச் சட்டத்திற்கு எதிராக அச்சட்டம் இருக்குமானால், அதைக் கண்டுபிடித்துத் திருத்துவதற்காகத் தீர்ப்பின் மூலம் உத்தரவிடுவதுதான் Judiciary எனப்படும் நீதிமன்றத்தின் பணி.

இவ்வாறு, சட்டங்களை உருவாக்கும் மன்றங்கள், அவற்றை அமல்படுத்தும் அரசு அலுவலகங்கள், அவற்றிலுள்ள குறைபாடுகளை நீக்குவதற்கான நீதிமன்றங்கள் இம்மூன்றும் நமது நாட்டில் சிறப்பாகச் செயல்பட்டு வருமாறு நமது அரசியல் சாசனம் வகுத்துள்ளது. அதனால், இவைதான் நமது அரசியல் சாசனத்தின் மூன்று பெரிய அங்கங்கள். இவை மூன்றும் ஒன்றாவது, இரண்டாவது, மூன்றாவது அல்ல. இவை ஒவ்வொன்றுமே சமமானவை.

இந்த அரசியல் சாசனத்தில் இடம்பெற்றுள்ள இன்னோர் அங்கம் தேர்தல் ஆணையம். இதுவும் இந்த மூன்று அங்கங்களுக்கும் சமமானவை. இதேபோல நமது அரசியல் சாசனத்தின் அழகு எங்கே மிளிர்கிறது என்றால், பிரதமருக்கு அல்லது முதலமைச்சருக்கு இணையான மதிப்பில் எதிர்க்கட்சித் தலைவர் இடம்பெறுகிறார்.

இதேபோல, நமது சட்ட அமைப்புகளில் சபாநாயகர்கள் நீதிமன்றங்களுக்குக் கட்டுப்பட்டவர்கள் அல்ல. வானளாவிய அதிகாரத்திற்குச் சொந்தக்காரார்கள். எந்த ஓர் எதிர்க்கட்சி உறுப்பினரும் ஆளுங்கட்சி அமைச்சர் மீது சட்டசபைகளுக்குள்ளோ, நாடாளுமன்றத்திற்குள்ளோ சபாநாயகரின் அனுமதி பெற்று ஊழல் குற்றச்சாட்டுகளைக் கூறலாம். அதே நபர், நாடாளுமன்ற – சட்டமன்றங்களுக்கு வெளியே அப்படிப் பேசினால், அவர்மீது சம்பந்தப்பட்டவர் மான நஷ்ட வழக்குத் தொடுக்கச் சட்டம் இடம் தருகிறது.

இத்தகைய அம்சங்களை உள்ளடக்கிய நமது அரசியல் சாசனம்தான் நமது தேசத்தின் புனித நூலாகும்.

ஓர் ஆட்சி பெரும்பான்மை மக்கள் பிரதிநிதிகளால் உருவாக்கப்பட்டு ஆட்சி செய்கிறபொழுது புதிய சட்டங்களை அது நிறைவேற்றலாம். சில தவறான சட்டங்களை நீக்கலாம். பண மதிப்பைக்கூட நீக்கலாம். புதிய வரிகளை விதிக்கலாம். தவறு செய்யும் தனியார் நிறுவனங்களை அரசுடைமையாக்கலாம். அதேபோல நஷ்டத்தில் இயங்கும் பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளை விற்றுத் தனியார் மயமாக்கலாம். புதிய சாலைகளைப் போடுவதற்கு விவசாய நிலங்களைக் கையகப்படுத்தலாம். கனிமங்களைத் தோண்டுவதற்கு அங்கு வசிக்கும் மக்களை அப்புறப்படுத்தலாம்.

இவை எல்லாமே குறைந்தபட்ச நபர்களுக்கு இழப்பையும், கஷ்டத்தையும், அதிகபட்ச மக்களுக்கு நன்மைகளையும் வசதிகளையும் செய்து தருமானால், அவ்வாறு செய்யலாம். சர்வாதிகார ஆட்சியில் இவற்றைச் செய்வதற்கு யாருடைய அனுமதியும் தேவையில்லை. ஆனால், ஜனநாயக ஆட்சியில் இவற்றைச் செய்வதற்கு நாடாளுமன்றத்தின் பெரும்பான்மை ஆதரவு கட்டாயம் தேவை.

நாடாளுமன்ற, சட்டமன்றங்களில் எதிர்க்கட்சியாகச் செயல்படுகிற கட்சிகள், ஆளுங்கட்சியின் நடவடிக்கைகளை ஆதரித்தால், அவை எதிர்க்கட்சிகளாக இருக்க முடியாது. அதனால், அவர்கள் எதிர்க்க வேண்டிய கட்டாயத்திற்கு உட்படுகிறார்கள். எதிர்க்கட்சிகள் இந்த எதிர்ப்பின் மூலம் ஆளுங்கட்சி மீது அதிருப்தியை உருவாக்கி, மக்கள் ஆதரவைப் பெற்று ஆளும் கட்சியைத் தோற்கடிக்கிறார்கள்.

இவற்றையெல்லாம் மனதில் கொண்டு கணக்குப் பார்த்தால், மத்தியில் அமைகிற ஓர் ஆட்சி ஐந்தாண்டுகளுக்கு முழுமையாக ஆட்சி செய்தால்தான் அதன் சாதனைகளைக் கணக்கிட முடியும். நடைமுறையில் நான்கு ஆண்டுகள்தான் கிடைக்கின்றன. ஐந்தாவது ஆண்டு அடுத்த தேர்தலுக்கான ஆயத்த முயற்சிகளுக்குச் சென்று விடுகிறது.

அதனால், ஆளும்கட்சியின் ஆயுள்காலம் நடைமுறையில் நான்கு ஆண்டுகளாகச் சுருங்கி விடுகிறது. இந்த நான்காண்டுகள் ஓர் ஆட்சிக்குச் சாதனை செய்யப் போதாது. பாத்திரத்தில் சில ஒடுக்குகளை எடுக்கலாமே தவிர, புதிய பாத்திரத்தை உருவாக்க முடியாது.

ஏனெனில், திட்டமிடுவதற்கே இரண்டு ஆண்டுகள் ஆகிவிடும். திட்ட அறிக்கையைத் தயாரித்தபிறகு அதற்கான நிதி வசதியை உருவாக்குவதற்கு மேலும் இரண்டு ஆண்டுகள் ஆகிவிடும். அமல்படுத்துவதற்குள் ஐந்தாவது ஆண்டு வந்துவிடும். அந்த ஆண்டு அந்த ஆட்சி நீடிக்குமா, நிராகரிக்கப்படுமா என்ற சந்தேக ஆண்டாகத்தான் இருக்கும்.

இத்தகைய ஓர் ஆபத்தான பாதையில்தான் மத்தியிலும் மாநிலங்களிலும் ஆட்சிகள் நடைபெற்று வருகின்றன. இலவசங்கள் தரப்படுகிறதென்றால், அவற்றின் உள்நோக்கம் அந்த இலவசங்களைச் சம்பாதிக்க முடியாத விளிம்புநிலை மனிதர்களைக் கவர்வதற்குத்தான். அவர்களுடைய வாக்குகளைப் பெறுவதுதான் அதன் நோக்கம்.

இதேபோல ஓட்டுக்குப் பணம் கொடுத்தாவது வெற்றி பெறுவதும் நடக்கிறது. ஏழைகளை ஏமாற்றித் தங்களுக்கு ஆதரவாக அவர்களை வைத்துக் கொள்வதற்குத்தான்.

இந்தப் பின்னணித் தகவல்களோடுதான் ஒரே நேரம் தேர்தலைப் பற்றி நாம் யோசிக்க வேண்டும். 2001–இல் வாஜ்பாய் பிரதமராக இருந்தபோது துணைப் பிரதமராக எல்.கே. அத்வானி அவர்கள் இருந்தார். அப்போது கூட்டத்தில் அவர் பேசிய நேரத்தில் மத்திய ஆட்சி அமைந்த பிறகு ஏதோ ஒரு மாநிலத்தில் இரண்டு மாதம் அல்லது மூன்று மாதங்களுக்கு ஒருமுறை சட்டமன்றத் தேர்தல்கள் நடந்துகொண்டே இருக்கின்றன. அந்தத் தேர்தல்களில் எதிர்க்கட்சிகள் ஜெயித்து விட்டால், மத்திய ஆட்சிக்கே மரியாதை போய் விடுகிறது. அதனால், மத்திய ஆட்சி தனது வேகத்தைக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கிறது.

ஆட்சியில் அமர்ந்தபிறகு ஆட்சி செய்யாமல் இருப்பதைப்போல ஒரு துரதிருஷ்டம் வேறு எதுவுமில்லை. ஒவ்வொரு எதிர்க்கட்சியின் நோக்கமும் ஆளுங்கட்சியைத் தோற்கடிக்க வேண்டும் என்பதுதான். உண்ணாவிரதம், தர்ணா, மறியல், உள்ளிருப்புப் போராட்டம், ஊர்வலம் எனப் பலவற்றையும் எதிர்க்கட்சியினர் செய்கிறார்கள்.

ஆளும் கட்சிக்கு ஜெயித்த போதிருந்த செல்வாக்கை, அது ஆட்சி செய்கிறபோது பராமரிக்க முடிவதில்லை. ஏதே மண்ணரிப்புப் போலச் செல்வாக்கும் அரித்துப்போகிறது. இதை ஆளும் கட்சியால் தாங்கிக்கொள்ள முடியாத நிலையில், மாநிலத் தேர்தல்களில் ஜெயிக்க வேண்டும் என்று பிரதமரே அந்தந்த மாநிலங்களுக்குச் சென்று இரவு பகலாகப் பிரச்சாரம் செய்ய வேண்டியுள்ளது. அந்த மாநிலத்திற்கே உரிய திட்டங்களை அறிவிக்க வேண்டியுள்ளது.

'நாங்கள் ஆட்சிக்கு வந்தால் இட ஒதுக்கீடு தருவோம் என்று சாதிப் பிரிவினரின் வாக்குக்காகச் சொல்ல நேர்கிறது. மதவெறி தூண்டிவிடப்படுகிறது. ஏனெனில், ஆளுங்கட்சி அங்கு ஜெயிக்க வேண்டிய நிர்ப்பந்தம். எதிர்க்கட்சிக்கோ அதைவிட நிர்ப்பந்தம். படகில் இந்த ஒரே ஓர் ஓட்டையை மட்டும் போட்டுவிட்டால் போதும், படகு கவிழ்ந்துவிடும் என்பதற்குத்தான்.

இத்தகைய சூழ்நிலையில், தற்போது மத்தியிலுள்ள மோடி ஆட்சி நான்காண்டுகளை நிறைவு செய்துவிட்டது. ஐந்தாவது ஆண்டில் பாதி தூரம் வந்துவிட்டது. 2019 மே மாதம் பிரதமர் குண்டம் இறங்க வேண்டியுள்ளார். அதற்கு ஆறு மாதங்கள் தான் கைவசம் இருக்கின்றன.

இந்தச் சூழ்நிலையில் ராஜஸ்தான், சத்தீஸ்கர், மத்தியப்பிரதேசம் ஆகிய 3 மாநிலங்களுக்கு டிசம்பர் மாதம் சட்டப்பேரவைத் தேர்தல் வருகிறது. இவற்றில் எதிர்க்கட்சி ஜெயித்தால், மத்திய ஆட்சியையும் கைப்பற்றலாம் என்ற கனவை அது நிறைவேற்ற முயற்சி செய்யும். மத்தியில் ஆளும் கட்சி மாநிலத்தில் தோற்றாலோ, மத்திய ஆட்சியின் தோல்விக்கு 'யானை வரும் பின்னே, மணி ஓசை வரும் முன்னே' என்ற பழமொழிபோல் ஆகிவிடும்.

இவ்வாறு, மத்திய ஆட்சி நடைபெறுகிற ஐந்தாண்டுக் காலத்திற்கு எந்தக் குறுக்கீடும் இல்லாமல், தேசம் முழுவதையுமே முழுமையாக ஆட்சி செய்ய வாய்ப்புக் கிடைக்க வேண்டுமானால், மாநிலங்களுக்கும் இணைத்தே இந்தத் தேர்தலை நடத்தி விடுவதுதான் சரியாக இருக்கும் என்பது ஒரு கருத்தோட்டம்.

1952–இல் தேர்தல் நடந்தபோது மாநிலங்களுக்கும், நாடாளுமன்றத்திற்கும் இணைந்தே தான் நடந்தது. 1957–இலும் அப்படித்தான். ஏன்? 1962–இலும் அப்படித்தான். 1967 தேர்தலின் போதுதான் இந்தியாவில் அரசியல் கூட்டணி என்ற புதிய கோட்பாடு உள்ளே புகுந்தது. ஆளும் கட்சியை எதிர்க்கிற கட்சிகளெல்லாம் ஒரே கூட்டணியாகச் சேர்ந்து, ஆளும் கட்சியைத் தனிமைப்படுத்தித் தோற்கடிக்கிற திட்டம் அது.

அப்படித்தான் ராஜாஜியும் அண்ணாவும் கூட்டணி சேர்ந்தார்கள். கம்யூனிஸ்டுகளும், பிரஜா சோஷலிஸ்டுகளும் இணைந்தார்கள். இங்கே தனிமைப்படுத்தப்பட்டது காங்கிரஸ் கட்சி மட்டும்தான். அதுவும் நேருஜி இல்லாத காங்கிரஸ். அடுத்து இந்திராஜியின் காங்கிரஸ். இந்திராஜி ஜெயிப்பதற்கே படாதபாடு பட்டார். அவரை எதிர்த்துக் காமராஜ், மொரார்ஜி ஆகியோர் வரிசையாக நின்றார்கள்.

அப்போது இந்திராஜி, கலைஞரோடு கூட்டணி வைத்தார். 1971 வரை தேர்ந்தெடுக்கப்பட்ட தி.மு.க.வின் அண்ணா ஆட்சி 1969–இல் அவர் மறைவுக்குப்பிறகு கலைஞர் முதலமைச்சர் ஆனார். தனது ஆட்சியை அதனுடைய ஆயுள் காலத்திற்கு முன்பே கலைத்து விட்டு, இந்திராஜியோடு கூட்டணி வைத்துக் கலைஞர் மீண்டும் முதலமைச்சரானார். அப்போது அண்ணா இல்லை. இவ்வாறு நாடாளுமன்றத்திற்கும், சட்டசபைகளுக்குமான தேர்தல், ஒரேசமயத்தில் நடக்காமல் போனதற்கு தமிழகம்தான் தடம் காட்டியது.

1971–இல் தேர்ந்தெடுக்கப்பட்ட தி.மு.க. 1976–இல் தேர்தலைச் சந்திக்க வேண்டும். ஆனால், 1975–இல் எமர்ஜென்சி வந்ததால், மாநில ஆட்சி கலைக்கப்பட்டது. இவ்வாறு பல மாநிலங்களில் சட்டசபைத் தேர்தல்கள் தாறுமாறான ஆண்டுகளில் நடந்தன. அந்தத் தாறுமாறுகள்கூட ஐந்தாண்டுகளை வரையறுத்துக் கொண்டுதான் நடந்தன.

இதனால், நாடாளுமன்றத்திற்குத் தேர்தல் நடந்த பிறகு ஏதோ ஒரு சில மாநிலங்களில் ஒவ்வொரு மாதமும் சட்டமன்றத் தேர்தல்கள் நடந்து கொண்டே வந்தன. அந்தத் தேர்தல்களின் முடிவுகள் ஆளும் கட்சிக்குச் சாதகமாகவோ, பாதகமாகவோ இருக்கலாம். பாதகமாக இருந்தால், ''மத்திய ஆட்சியைக் கலை'' என்று கோஷமிடுவார்கள். கூட்டம் போடுவார்கள். உண்ணா விரதமிருப்பார்கள்.

இந்தச் சந்தடிகள் மத்திய ஆட்சியின் திட்டங்

களை நிறைவேற்றிடச் சிரமங்களை உண்டாக்கியது. மக்களின் கவனம் சிதறடிக்கப்பட்டது. ஆட்சி நடத்துவதற்குரிய ஓர் அமைதிச் சூழ்நிலை ஆளுங்கட்சிக்கு அரிதாகவே கிடைத்தது. இதன் காரணமாகத்தான் வாஜ்பாய் ஆட்சியில் அத்வானி சொன்ன கோரிக்கையை 10 ஆண்டுகளுக்குப் பிறகு பிரதமர் மோடியும் எதிரொலித்தார். மாநிலங்களுக்கும் நாடாளுமன்றத்திற்கும் ஒரே நேரத்தில் தேர்தல் என்று ஒரு வருடமாகச் சொல்லி வருகிறார்.

தேர்தல்கள் தாறுமாறாக மாநிலங்களில் நடப்பதால், 2019 நாடாளுமன்றத் தேர்தலோடு சென்ற மாதம் ஆட்சியமைத்த கர்நாடக ஆட்சியை எப்படிக் கலைப்பது? அதற்கு முன்பு ஆட்சியமைக்கப்பட்ட குஜராத் ஆட்சியை எப்படிக் கலைப்பது? டிசம்பர் மாதம் தமது ஆயுள் காலத்தை முடிக்கக் கூடிய மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான், சத்தீஸ்கர் ஆகிய மாநிலங்களின் ஆட்சிகளை எப்படி நீட்டிப்பது?

இவ்வாறு, சில மாநிலங்களில் ஆட்சிகள் நீடிக்கப்பட வேண்டியுள்ளது. சில மாநிலங்களில் ஆட்சிகள் கலைக்கப்பட வேண்டியுள்ளன. இவையெல்லாம் சாத்தியம்தானா என்ற கேள்வியை முன்னிறுத்தி ஒரே நேரம் தேர்தல் இந்தியா போன்ற பெரிய நாட்டிற்குச் சாத்தியமில்லை என்ற கருத்தும் சொல்லப்படுகின்றது.

தமிழ்நாடு ஆட்சியை நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மூலமோ அல்லது நம்பிக்கைத் தீர்மானத்தின் மூலமோ தோற்கடித்து ஆட்சியைக் கலைத்துவிட முயற்சி செய்துவந்த தி.மு.க. என்ன செய்திருக்க வேண்டும்? 2019 தேர்தலோடு அ.தி.மு.க. ஆட்சியைக் கலைத்துவிட்டுத் தேர்தல் நடத்துவதற்கு மத்திய அரசு நடவடிக்கை எடுத்தால், வரவேற்பதாகச் சொல்லியிருக்க வேண்டும். ஆனால், மாநிலங்களுக்குத் தேர்தல் தனியாகவும், நாடாளுமன்றத்திற்குத் தேர்தல் தனியாகவும்தான் நடக்க வேண்டும் என்று தி.மு.க. கூறுகிறது. இவையல்லாமல் பல காரணங்களை அடுக்கி அடுக்கிக் கூறுகிறார்கள். அவற்றையெல்லாம்விடப் பிரதானமான காரணம் இதுதான்!

ஒரே நேரத்தில் இரு தேர்தல்களும் நடத்தப்படுமானால், மத்திய ஆட்சிக்கு அது நல்லது. அதேசமயம் மாநில ஆட்சிகளுக்கும் நல்லது. ஆட்சி கவிழ்ந்து தேர்தல் நடத்தப்படுமானால், அந்த ஆட்சியின் ஆயுள்காலம் நாடாளுமன்ற ஆட்சியின் ஆயுள் காலத்தோடு முடிவடைவதாக இருக்க வேண்டும்.

தேர்ந்தெடுத்த நாளிலிருந்து ஐந்து ஆண்டுகள் என்று கருதக்கூடாது. இதையெல்லாம் செய்வதற்குத் தேர்தல் ஆணையம் அனுமதிக்குமா? என்ற கேள்வியும் எழுகிறது.

ஆனால், உண்மையில் ஒரே நேரத்தில் தேர்தல் நடத்தப்படுமானால், தேர்தல் செலவு ரூ. 12 ஆயிரம் கோடி மிச்சமாவது நமக்கு ஒரு கூடுதல் பலன்தான். அதேசமயம் மக்களுடைய மன ஓட்டம் நாடு முழுவதும் 5 ஆண்டுகளுக்கு எப்படி இருக்கும் என்று மதிப்பீடு செய்யவும் இது உதவும்.

இப்போது, அவ்வாறு செய்ய முடியவில்லை. தற்போது நடந்து முடிந்த இடைத்தேர்தல்களில் 16 இடங்களில் பா.ஜ.க. தோற்ற நிலையில் அது தனது மொத்தச் செல்வாக்கையும் இழந்து விட்டதாக எதிர்க்கட்சிகள் பிரச்சாரம் செய்கின்றன. இதனால் மத்தியில் எப்படி ஓர் உறுதியான ஆட்சியை பா.ஜ.க.வால் தர முடியும்?

பா.ஜ.க. ஆளும் கட்சியாக உள்ள மூன்று மாநிலங்களில் டிசம்பர் மாதம் தேர்தல் நடைபெற உள்ளது. ஒரு வேளை தமக்குத் தோல்வி வந்து விடும் என்று மாநில ஆட்சிகளுக்கும், மத்திய ஆட்சிக்கும் ஒரே சமயத்தில் தேர்தல் நடத்த வேண்டும் என்று பயந்து போகிறதோ எனச் சந்தேகம் ஏற்படுத்தப்படுகிறது.

இதை முறியடிக்க வேண்டுமானால், பா.ஜ.க. ஆளும் கட்சியாகவும், கூட்டணியாகவும் உள்ள 19 மாநிலங்களில் ஆட்சிகளைக் கலைத்துவிட்டு நாடாளுமன்றத் தேர்தலோடு இணைந்து தேர்தலைச் சந்திக்க பா.ஜ.க. தயாராக உள்ளது என்று கூறுமானால், மக்கள் மத்தியில் ஒருவித நம்பகத் தன்மையை அது ஏற்படுத்தலாம்.

ஆகவே, உறுதியான ஆட்சி 5 ஆண்டுகளுக்கும் நீடிக்க வேண்டுமானால், ஒரே சமயத்தில் மாநிலங்களுக்கும் நாடாளுமன்றத்திற்கும் தேர்தல் நடத்துவதுதான் நல்லது.

வாசகர்களாகிய நீங்கள் இதைப்பற்றி என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள் ஆகஸ்டு 12–க்குள்.

– பி.சி.

# மழைத்துளி

வட்டம் போட்டு
பயத்தினை உண்டாக்கும்
மழைத்துளி.

சிறு சிறு வட்டங்கள்.
பெரும் பெரும் வட்டங்கள்.
எல்லாம் பள்ளிக் கணக்கில்
வாங்கிய மதிப்பெண் போல்.


ராஜ்ஜா

சிறு வட்டங்கள்
பெரும் வட்டங்களை
விடாப்பிடியாய் விரட்டும்.

பெரும் வட்டங்களோ
சிறு சிறு வட்டங்களை
அடித்துப் பிடித்து விழுங்கும்.

அதிரடி மழைத்துளி
ஓய்ந்து போக,
வட்டம் மறைந்து போகும்.

அமைதியில் உறங்கி
சஞ்சலத்தில் விழித்த மனக்குளமோ
மீண்டும் அமைதி பெறும்...

மற்றொரு மழைத்துளி
வட்டம் போட்டு
மற்றொரு பயத்தை
உண்டாக்கும் வரை...

அறச்சீற்றம்

# திருக்குறளையா தாழ்த்திப் பேசுவது?

தொல்லியல் துறை மேனாள் இயக்குநர் 'பத்மபூஷண்' முனைவர் இரா. நாகசாமி அவர்கள், தமிழின் அடையாளமாக உள்ள தத்துவஞானியாகிய திருவள்ளுவர் என்ற மேதையால் அருளப்பட்ட மாமறையாகிய திருக்குறள் நூல் மூல நூல் அல்ல, வடமொழியான சமஸ்கிருத சாஸ்திரங்களின் சாரம் என்று சென்ற ஜனவரி மாதம் 8–ஆம் தேதி சென்னையில் நடந்த நூல் வெளியீட்டு விழாவில் பேசியுள்ளார். அச்செய்தியை 'ஹிந்துமித்திரன்' பத்திரிகை வெளியிட்டுள்ளது.

டாக்டர் இரா. நாகசாமி, திருக்குறளைப்பற்றி இந்த முதிய வயதில் இப்படியொரு முரட்டுத்தனமான கருத்தை எப்படிச் சிந்தித்தார் என்று தெரியவில்லை.

மகாகவி பாரதியால் தமிழச்சாதியை அமரத்தன்மை வாய்ந்தது என்று உறுதிபூண வைத்த ஒரு நூல் திருக்குறள். அதனுடைய "உறுதியும், தெளிவும் பொருளின் ஆழமும், விரிவும், அழகும் கருதியே" மகாகவி அவ்வாறு திருக்குறளைப் போற்றினார். அதை யாத்த திருவள்ளுவரை 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்றும் அவரைத் துதித்தார்.

திருக்குறளை இப்படித் திரித்துக் கூறிய திரு. நாகசாமி அவர்கள் தமிழுக்குத் துரோகத்தையும், தமிழினத்திற்கு வஞ்சகத்தையும், தமிழ்ப்பண்பாட்டிற்கு இழிவையும் ஏற்படுத்துமாறு பேசியுள்ளது வன்மையாகக் கண்டிக்கத்தக்கது.

தமிழ் அறிஞர்கள் பலர் இதனைப்பற்றித் தங்களுடைய கருத்தோட்டங்களை அமில மழையாகக் கொட்டி வருகிறார்கள். அவற்றில் பேராசிரியர் இரா. மதிவாணன், முனைவர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன், முனைவர் சொ. சாந்தலிங்கம் ஆகியோர் எழுதியுள்ள கட்டுரைகளை 'ஓம் சக்தி' வாசகர்கள் படித்து ஆழச் சிந்தித்தால், அறச்சீற்றமடைவார்கள்!

– இ.ஆர்

சென்ற சனவரி மாத 'ஹிந்து மித்திரன்' இதழில் 'வடமொழி தரும சாத்திரங்களின் பிழிவாக இருப்பதே திருக்குறள், அது மூலநூல் அன்று' என்று மாபெரும் அண்டப் புளுகு ஆகாயப் புளுகுமூட்டைகளைக் கட்டவிழ்த்துக் காட்டித் தன்னைப் பெரிய ஆராய்ச்சியாளர் என்று நாகசாமி கொட்டமடித்துக் கொக்கரித்து இருக்கிறார். வாய்மையே வெல்லும் என்பது இந்தியாவின் குறிக்கோள் பொன்மொழி. அதனைப் பொய்மையே வெல்லும் என்று மாற்றும் முயற்சியில் நாகசாமி இறங்கியிருக்கிறார் என்று இதன்மூலம் தெரிகிறது.

ஆரியர்கள் இந்தியாவில் நுழைந்த போது, அவர்களிடம் எழுத்தறிவும் இலக்கியமும் இருந்ததில்லை. திடீரென்று பெரிய தரும சாத்திரங்கள் எப்படித் தானாக முளைத்தன? என்பதற்கு அவர் விடை சொல்ல முன்வரவில்லை. தமிழ்



பேரா. இரா. மதிவாணன்

## திருக்குறள்



மொழியின் படிப்படியான வளர்ச்சிகளை மூன்று தமிழ்க் கழக வரலாறு களும் மூவேந்தர் ஆட்சி களும் தக்க கால இடை வெளியின் இடையே தெளிவாகக் காட்டு கின்றன. அப்படி வட மொழி படிப்படியாக வளர்ந்த கால நிலை வர லாறு எங்கும் இல்லை.

கி.மு. 1500 ஆண்டுகளில் இந்தியாவில் புகுந்து, கி.மு. 1100 அள வில் இருக்கு வேதம் பாடி, வேள்வி செய்ததோடு வேத ஆரியரின் வரலாறு முடிந்துவிடுகிறது. அவர்கள் பயன்படுத்திய சாம்பல் நிறப் பானை ஓடுகள் கி.மு. 1100–இல் கங்கைக் கரையிலும் கி.மு. 800 அளவில் கோதாவரிப் படுகையிலும் அகழ்வாராய்ச்சியாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

நாட்டில் வாழும் பொதுமக்களிடையில் நெடுங்காலம் வளர்ந்த மொழியில்தான் இலக்கண இலக்கியங்கள், அறநூல்கள் முதலியவை வளரும். காட்டில் தவம் செய்யும் முனிவர்களுக்குத் தாடி தான் வளரும், இலக்கியம் இலக்கணம் மட்டும் அல்லாமல் மருத்துவம், கட்டடக் கலை, அரசியல், கணிதம், வானநூல், கடல் வாணிகம், கொல்லுத் தொழில், தச்சுத் தொழில், சிற்பம், ஓவியம், இசை, நாட்டியம் முதலிய நுண் கலைகள் படிப்படியாக நகர நாகரிகத்தை வளர்த்துக் கொண்டவர்களிடையில்தான் காண முடியும்.

ஆரியர்கள் ஒதுங்கி வாழ்ந்தவர்கள். பணக் காரனையும் நாடாளும் மன்னர்களையும் நயந்து பேசி, இலவசங்கள் பெற்று, இனிமையான வாழ்க்கை நடத்தியவர்கள். தருப்பைப் புல் ஏந்திய கையில் ஓலைச்சுவடி எடுக்கத் தெரியாதவர்கள். பாணினியின் இலக்கண நூலுக்கு உரை எழுதிய பதஞ்சலி வடமொழியை எழுத்தால் எழுதக்கூடாது என்பதற்கு ஒரு காரணம் சொல்கிறார். எழுத்தால் எழுதுவது அழிந்துவிடுமாம். எனவே, வட மொழிக்கு எழுத்து தேவையில்லையாம்.

தமிழ், பிராகிருதம், பாலி ஆகியவை அக் காலத்தில் எழுதப்படும் மொழிகளாக இருந்தன. அந்த எழுத்துகளையெல்லாம் பார்த்த வேத நெறியாளர்கள் அவற்றை எழுத்து என்று சொல்லத் தெரியாமல், சக்சுச– கண்ணால் பார்க்கப்படுவது என்று குறிப்பிட்டனர். இது நாகசாமிக்குத் தெரியுமா? தெரியாதா? காதால் கேட்கப்படும் சுருதி என்னும் செவிவழி இலக்கியங்களே அவர்களுக்கு விருப்பமுள்ளவை ஆயின. சமணமும் பௌத்தமும் வளர்ந்த காலத்தில் சமய நூல்கள் மட்டுமின்றி, பல்வேறு புலத்துறை நூல்கள் தமிழிலும் வடபுல எழுத்து மொழிகளிலும் வேகமாகப் பரவின.

சமய வாதம் செய்யவும் இந்தியாவின் எழுத்து மொழிகளில் உள்ள அனைத்துத் துறை நூல்களையும் வடமொழியில் மொழிபெயர்த்துக் கொள்ளவும் வடமொழிக்கு எழுத்துத் தேவைப்பட்டது. பாலி மொழியில் நிறைய வடசொற்கள் சேர்ந்தன. அதனால் ஏற்கனவே தமிழுக்கும் பிராகிருதத்துக்கும் பொதுவாக இருந்த 30 எழுத்துகளோடு 11 புதிய எழுத்துகளைச் சேர்த்து, பாலிமொழிக்கு 41 எழுத்துகளை வடிவமைத்தார்கள். இது புத்தர் காலத்தில் செய்யப்பட்ட சீர்திருத்தம்.

சிவசூத்திரம் எழுதிய ஆசிரியர் மேலும் ஓர் எழுத்தைச் சேர்த்து 42 எழுத்தாக்கினார். இதன் காலம் கி.மு. 5–ஆம் நூற்றாண்டாகலாம். இவை சமற்கிருத மொழியை முறையாக எழுதுவதற்குப் போதாதவை என உணர்ந்த பாணினி, மேலும் 9 எழுத்துகளைச் சேர்த்து சமற்கிருதத்துக்கு 51 எழுத்துகளை வடிவமைத்தார்.

**எனவே பாணினியின் காலமாகிய கி.மு. 4–ஆம் நூற்றாண்டுக்கு முன்பு சமற்கிருதத்தில் எந்த நூலும் எழுதப்பட்டிருக்க வாய்ப்பே இல்லை.** தமிழ் மொழி 3 தமிழ்க் கழகக் காலங்களிலிருந்து அதாவது கி.மு. 10,000–லிருந்து எழுத்து மொழியாக வளர்ந்து வந்திருக்கிறது. படஎழுத்தில் தொடங்கிய தமிழ், சிந்துவெளிக் காலத்தில் அசை எழுத்தாக மாறியது. அந்தச் சிந்துவெளி அசை எழுத்துகள் கீழ்வாலை பாறை ஓவியத்தில் இருப்பதும் நாகசாமிக்குத் தெரிந்ததே.

கி.மு. 1800 அளவில் ஐந்திரனார் சிந்துவெளி எழுத்தைத் தமிழி எழுத்தாக (தமிழ் பிராமி) மாற்றியமைத்தார். ஐந்திரம் தமிழ் நூலே என்று தாரா நாதர் கூறியதை மேற்கோள்காட்டி ‘மஞ்சரி’ நவம்பர் 2008 இதழில் கட்டுரை வெளிவந்துள்ளது,

தொல்காப்பியம், பிராகிருத மொழியின் காதந்திரம், பாலி மொழியில் கச்சாயணம், திபெத்திய மொழியில் சன்சுபா ஆகியவை தாம் ஐந்திரத்தைப் பின்பற்றியதாகக் கூறியுள்ளன. பாணினியைப்

பின்பற்றியதாக இந்தியாவில் எந்த மொழி இலக் கணமும் கூறவில்லை. வடமொழியில் இருந்த வாய்மொழி இலக்கியங்கள் எல்லாம் கி.மு. 200 அளவில்தான் எழுத்து வடிவம் பெறத் தொடங்கின.

இந்த நிலையில், வடமொழி நூல்களைப் பார்த்துத்தான் திரு வள்ளுவர் அறநூல் எழுதினார் என்பது எத்தனை பெரிய தவறு என்பது நாகசாமிக்கு ஏன் தெரியவில்லை?


திரு. நாகசாமி

யாகம் செய்வதன்மூலம் ஏமாந்த மன்னர்களின் அறியாமையை அறுவடை செய்து வடநாட்டில் வாழ்ந்தார்கள். சமணமும் பௌத்தமும் தலையெடுத்தபின் அங்கு வாழ முடியாமல், தென்னாட்டில் புகலிடம் தேடி வந்தார்கள். தமிழர்களின் விருந்தோம்பும் பண்பால் பகட்டான வாழ்க்கை கிடைத்தது. தமிழ் நூல்களை வடமொழியில் மொழிபெயர்த்துக் கொண்டு, மூலத் தமிழ் நூல்களை அழித்துவிட்டு, வடமொழி நூல்களில் இருந்துதான் தமிழ் நூல்கள் வந்தன என்று தம்பட்டம் அடிக்கத் தொடங்கிவிட்டார்கள்.

சூரிய நாராயண சாஸ்திரி என்னும் தன் வடமொழிப் பெயரை ‘பரிதிமால் கலைஞர்’ என மாற்றிக் கொண்டு செந்தமிழ்ச் செம்மலாக விளங்கிய அவர் நேர்மையான பார்ப்பனர். எப்பொழுதும் உண்மை பேசும் இயல்பினர். அவர் தன் நூல்களில், ‘தமிழில் உள்ள நூல்களை வட மொழியில் மொழிபெயர்த்துக் கொண்டு வடமொழி வளர்ந்திருக்கிறது’ என்று குறிப்பிட்டிருக்கிறார். வடமொழியோடு சிறிதும் தொடர்பற்ற உயர்தனிச் செம்மொழியாகத் தமிழ் விளங்குகிறது என்று வெளிப்பட அறிவித்தார். இது நாகசாமிக்கு ஏன் தெரியவில்லை?

சேஷ ஐயங்கார் வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர், பி.டி. சீனிவாச ஐயங்கார் முதலிய பெருமக்கள் பொய்பேசி அறியாதவர்கள். தமிழின் மேன்மையையும் தூய்மையையும் முந்து தமிழர் வரலாற்றையும் உலகறிய ஆங்கில நூல்களாக வெளியிட்டவர்கள். இவர்களை நாகசாமி தன் நூல்களில் மேற்கோள் காட்டுவதே இல்லை.

தொல்பொருளாய்வுத் துறையில் இயக்குநராக இருந்த காலத்தில் இவர் தமிழ் இலக்கியங்களையும், திருக்குறளையும் தாழ்த்திப் பேசவில்லை. இப்பொழுது திடீரென அவருக்கு அறிவுச்சுடர் (ஞானோதயம்) கொழுந்துவிட்டு எரியத் தொடங்கிவிட்டது. வடமொழி தரும சாத்திரத்தில் தருமமும் இல்லை. நீதியும் இல்லை. அதிலிருந்து திருக்குறள் வந்தது என்கிறார். கேழ்வரகில் நெய் வடிகிறது என்றால், கேட்பவருக்குமா அறிவில்லை? என்னும் பழமொழி இவருக்குத் தெரியவில்லை போலும்.

**வேத ஆரியர் வரலாறு – வேதம் வந்தது எப்படி?**

ஐரோப்பா பால்டிக் பகுதியில் வழங்கிய லித்வேனியன் மொழியோடு தொடர்புடைது வேத மொழி. அவர்களுள் ஒரு பிரிவினர் கிரேக்கம், துருக்கி வழியாக ஈரானில் புகுந்தனர். மற்றொரு பிரிவினர் வால்கா ஆற்றின் வழியாக காஸ்பியன் கடலுக்கும் கருங்கடலுக்கும் இடையில் உள்ள ஜார்ஜியா மலைப் பகுதிகளில் குடியேறினர். அங்கு கந்தக மண் கலப்பால் திடீர் திடீர் எனத் தரையில் தீப்பிழம்புகள் தோன்றின. அதனைக் கண்டு அஞ்சிய வேத ஆரியர் விலங்குகளைப் பலியிட்டு வணங்கி தம்மைக் காக்குமாறு வானத்துத் தெய்வங்களை வழிபட்டார்கள். இதுவே வேத வேள்வியாக மாறியது. இதனை ஆங்கிலக் கட்டுரையில் மேனாட்டு அம்மையார் ஒருவர் குறிப்பிட்டிருக்கிறார்.

அங்கிருந்து வேத ஆரியர் ஆப்கானிஸ்தானத்தில் குடியேறினர். அங்கு ஆடு மேய்த்து வாழும் பிராகுவி திராவிட மக்களோடு பழக நேர்ந்தது. நம்மைப் போலவே அருணாசலப் பிரதேசத்தில் வாழும் பழங்குடிகளும் ஆப்கானிஸ்தானத்து பிராகுவி மக்களும் குழந்தைகளுக்கு முடியெடுத்து காதுகுத்தும் பழக்கமுடையவர்கள். எந்தக் காரணத்தினாலாவது காதுகுத்தும் நிகழ்ச்சியைச் சில ஆண்டுகள் தள்ளிவைக்க நேர்ந்தால், உச்சியில் மட்டும் சிறிது குடுமி வைத்து தலையை மொட்டை அடித்து விடுவார்கள். இந்த வழக்கம் அங்குக் குடியேறிய வேத ஆரியரிடமும் பரவியது. அக்காலம் முதல் தம் தனித் தன்மையை நிலைநாட்டும் வகையில் உச்சிக் குடுமி வைத்துக் கொள்ளும் வழக்கம் வேத ஆரியரிடையே தோன்றியது.

சிந்துவெளி நாகரிகம் அழிந்த பிறகும் தமிழரின் யோகக் கலை வடநாட்டில் வாழ்ந்தது. யோகம் செய்வோர் யோகப் பட்டியை யோகம் செய்யாத நேரத்தில் இடது தோளில் தொங்கவிட்டு வலதுபுறம் முடிந்திருப்பார்கள். இதனைப் பார்த்த வேத ஆரியர் அதனைத் தமக்குப் பூணூல் ஆக்கிக் கொண்டார்கள். சிந்துவெளிக் காலத்தில்

இந்தியா முழுதும் தமிழ் ஒன்றே பேச்சு மொழியாகவும் எழுத்து மொழியாகவும் இருந்தது.

தமிழ் என்பதே முத்தமிழ். இசையும் நாட்டியமும் தமிழர்களுக்கு உடன் பிறந்தவை. நாடு முழுதும் பாணர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் பெரும்பாணர், சிறுபாணர் என்னும் இரு பிரிவினர். பாணர்கள் பாடும் பாடல்களைக் கேட்டு, மன்னரும் மக்களும் பொன்னும் பொருளும் வாரி வழங்கினர். இதைக் கண்ட வேத ஆரியர் தாமும் கூட்டம் கூட்டமாக மன்னர்களிடமும் செல்வர்களிடமும் தமிழோடு கலப்புற்ற வேத மொழியில் இருக்கு வேதப் பாடல்களைப் பாடி அதையே தமக்கு வாழ்வு தரும் தொழில் ஆக்கிக் கொண்டார்கள்.

சிந்துவெளி நாகரிகக் காலத்திலேயே தமிழ்ப் பாணர்கள் அங்கு வாழ்ந்தார்கள் என்பதை நிலை நாட்டும் வகையில் சிந்துவெளி முத்திரையில் மாபாணன் (பெரும் பாணன்) என்னும் சொல் இடம் பெற்றிருப்பதை நான் கண்டறிந்தேன். பாணர் வழியினர் இன்றும் ஒரிசாவில் வாழ்கின்றனர். தமிழ் யாப்பிலக்கணத்தில் ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பவற்றுக்குத் தனித்த ஓசைகள் உண்டு. இதே ஓசைகள் வேதப் பாடல்களிலும் சமணர் மற்றும் பௌத்தர்களுடைய வழிபாட்டுப் பாடல்களிலும் அமைந்திருப்பதை ஒப்பிட்டு ஆராய்பவர்கள் எளிதில் காணலாம்.

வடநாட்டில் வாழ்ந்த பாண்டிய மன்னர்களிடம் இருக்கு வேதப் பாடகர்கள் பொன்னும் பொருளும் பெற்றிருக்கிறார்கள். ஆரியர்களுக்குப் பொன்னும் பொருளும் உதவிய நார்மாறன், பல்பூதன் முதலிய பாண்டியர்களை இருக்கு வேதம் குறிப்பிடுகிறது. அதற்கு உரை எழுதிய சாயனர்பூதன் என்னும் பெயர் வடமொழியில் எக்காலத்திலும் இருந்ததில்லை என்று குறிப்பிட்டிருக்கிறார். தமிழ்நாட்டில் பூதப் பாண்டியன் நாடாண்டது நமக்குத் தெரியும்.

ஆரிய அரசன் பிருகதத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்துவதற்காகக் கபிலர் குறிஞ்சிப் பாட்டுப் பாடினார் என்பதும் நாகசாமிக்குத் தெரியும். ஆகவே, வடநாட்டார் தமிழ் படிப்பதில் ஆர்வம் செலுத்தினர் என்பதை நாகசாமி மறுக்க முடியாது.

கௌதம புத்தர் தமிழ் படித்தவர் என்று சீன மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட ‘லலித விஸ்தாரம்’ கூறுகிறது. இதனை ‘The Psalms of a Saiva Saint’ என்னும் நூலில் ஐசக் தம்பையா கூறியுள்ளார். பாணினிக்கு ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு கி.மு. 865–இல் பிறந்தவர் தொல்காப்பியர் என்பதைத் தொல்காப்பியர் காலம் 2005 என்னும் நூல் குறிப்பிடுகிறது.

இத்தனை வரலாற்று உண்மைகளையும் பின்னுக்குத் தள்ளிவிட்டு வட மொழிதான் இந்திய மொழிகளுக்குத் தாய் என்னும் கட்டுக்கதையைக் கூசாமல் சொல்லி வருகின்றனர். தமிழ் தொடர்பான உண்மைகளை இருட்டடிப்புச் செய்து, வடமொழிக்கும் தென்மொழிக்கும் செயற்கையாக முடிச்சுப் போட்டு அதனை அவிழ்க்க முடியாமல் நாகசாமி தத்தளித்துத் தவித்து வருகிறார்.

**வடமொழியில் இருந்துதான் எல்லாம் வந்தனவா?**

வடமொழியில் இருந்துதான் எல்லாம் வந்தன என்று கருதும் நாகசாமி பைபிள், குரான் முதலியவை எல்லாம் வடமொழி தரும சாத்திரங்களில் இருந்துதான் வந்தன என்று ஏன் சொல்லவில்லை? நோபல் பரிசு பெற்ற தாகூரும் தரும சாத்திரங்களைப் படித்துதான் கீதாஞ்சலி எழுதினார் என்று சொல்லவில்லை? இந்திய மொழிகள் அனைத்தும் சமற்கிருதத்திலிருந்துதான் பிறந்தன என்று கதையளப்பவர்கள் வேத ஆரியர் வருமுன் இந்தியர் அனைவரும் எழுதவும் பேசவும் தெரியாத ஊமையர்களாக இருந்தார்களா? பிராகிருதம், பாலி மொழிகள் தோன்றுவதற்கு முன்பும் வேத ஆரியர்கள் வருகைக்கு முன்பும் இந்தியா முழுதும் பேசப்பட்ட ஒரே மொழி தமிழ் என்பதை ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரன் என்னும் பாடல் வரி உறுதிப்படுத்துகிறது.

தொட்டதற்கெல்லாம் சமற்கிருதத்திலிருந்து மேற்கோள் காட்டும் நாகசாமி தமிழ், பிராகிருதம், பாலி ஆகியவற்றிலிருந்து ஏன் மேற்கோள் காட்டுவதில்லை? வேத ஆரியர் அல்லாத இந்தியர் வரலாற்றை ஏன் மறைக்கிறார்? எதிர்த்துக் கேட்க ஆளில்லை என்றால், எதை வேண்டுமானாலும் சொல்லலாமா?

ஆரியர் அல்லாத உள்நாட்டு மக்களின் வரலாறு குறித்து ஆங்கிலத்தில் பல நூல்கள் வெளிவந்துள்ளன. பி.டி. சீனிவாச ஐயங்கார் அவர்கள் (1929) “The Early History of Tamils (P.154) நூலில் “The Genius of the Tamils was utterly different from that of the Aryans” என்று எழுதியிருப்பது நாகசாமிக்கு ஏன் உறைக்கவில்லை? இது ஆராய்ச்சி உலகம். நாகசாமியைப் பெரிய ஆராய்ச்சி அறிஞர் என்று உலக அறிஞர்கள் கொண்டாடவில்லை. தன் தகுதி அறியாது மிகுதியாக அலட்டிக் கொள்வது நல்லதன்று.

திடீரென்று வடமொழியில் எல்லாம் வந்தன என்றால் எங்கிருந்து வந்தன? எப்படி வந்தன? என்று அறிஞர்கள் கேட்கத்தான் செய்வார்கள். சமற்கிருதச் சொற்களை இந்திய மொழிகளில் திணித்துவிட்டதால் இந்திய மொழிகளை அடிமை கொண்டதாகாது. இந்திய மொழிகள் சாகாவரம் பெற்றவை. ஏனெனில், அவை வன்மையான திராவிட அடித்தளம் கொண்டவை.

**(இன்னும் வரும்)**



# கண்ணிரண்டும் விற்று...

## முனைவர் சொ. சாந்தலிங்கம்

அண்மையில் இந்திய அரசு தமிழ் நாட்டில் உள்ள ஆறு பேருக்கு பத்ம விருதுகளை வழங்கிச் சிறப்புச் செய்துள்ளது. குறிப்பாக, இசை ஞானி இளையராசாவுக்குப் 'பத்ம விபூசண்' விருது வழங்கி அரசு தன் கௌரவத்தை உயர்த்திக் கொண்டுள்ளது.

அடுத்து, தொல்லியல் துறை முன்னாள் இயக்குநர் திருவாளர் இரா. நாகசாமி அவர்களுக்குப் 'பத்ம பூசண்' விருது வழங்கப்பட்டுள்ளது. எனது ஆசிரியர்களில் ஒருவர் என்ற முறையிலும், தொல்லியலைத் தமிழகத்தில் பட்டி, தொட்டியெல்லாம் கொண்டு சென்றவர் என்ற வகையிலும் எனது மகிழ்ச்சியையும், வாழ்த்துக்களையும் முதலில் அவருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆனால், இந்த விருதை வாங்குவதற்குத் திருவாளர் நாகசாமி அவர்கள் கொடுத்த விலை என்ன என்பதுதான் தமிழ்நாட்டில் உள்ள பல நடுநிலை ஆய்வாளர்கள் மத்தியில் உலவி வரும் கேள்வியாகும்.

சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இவர் தமிழ் மொழியில் உள்ள தொல்காப்பியம், சிலப்பதிகாரம் முதலிய இலக்கண, இலக்கிய நூல்கள் எல்லாம் வடமொழியிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவை என்ற கருத்தில் 'Mirror of Tamil and Sanskrit' என்ற ஆங்கில நூல் ஒன்றை வெளியிட்டார். குறிப்பாக, பரதரின் நாட்டிய சாஸ்திரத்திலிருந்து பெறப்பட்டவை இவ்விரண்டு நூல்களும் என்பது அவரது முடிவாக இருந்தது.

அதுபோல் தமிழ் மொழிக்கென்று எழுதப்படும் எழுத்துக்களும் வடபிராமியிலிருந்து பெறப்பட்டவை. அதுவும் கி.மு. முதல் நூற்றாண்டில்தான் அவை தமிழகத்தில் வழக்கத்திற்கு வந்தன என்றும் எழுதினார். இம்முடிவுகள் தமிழறிஞர்கள் மத்தியில் பல அதிர்வலைகளை ஏற்படுத்தின. முனைவர் தமிழண்ணல், முனைவர் நடன காசிநாதன், முனைவர் க.நெடுஞ்செழியன் முதலியோர் இவருக்கு எதிரான கருத்துக்களை எழுதி நூலாக வெளியிட்டனர்.

**அருட்செல்வர் அவர்கள் திருக்குறள் நூலை ஹிந்தி, ஒரியா, மலையாளம், ஆங்கிலம் முதலிய மொழிகளில் வெளியிட்டுப் பெருமை பெற்றவர்.**

பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையத்தின் சார்பில் தேவ. பேரின்பன் அவர்கள் எழுதிய 'தமிழும் சமஸ்கிருதமும் மெய்யும் பொய்யும்' எனும் தலைப்பில் தக்க மறுப்பு நூல் ஒன்றும் வெளியிடப்பட்டது. தமிழுக்குத் தனித்தன்மையில்லை என்றும், தமிழ் இலக்கியம் அனைத்தும் வடமொழி நூற்களின் தழுவல் என்றும் அவர் கூறியுள்ளார்.

உலகப் பொதுமறையைச் சிமிழுக்குள் அடக்கப் பார்க்கும் இந்நூல் உள்ளடக்கத்தைப் பற்றி மட்டுமே நாம் கவலைப்பட வேண்டியுள்ளது. இந்நூலில் திரு. நாகசாமி அவர்கள் முன்வைக்கும் கருத்துக்களுக்கு ஒவ்வொன்றாக நமது பதில் உரையைக் காண்போம்.

(புதிய செப்பேடு – சித்திரை 2018.

மீதி அடுத்த இதழில்)

# நாகசாமியா இப்படிப் பேசியது!




**வே**தபுரத்தார் வீசியது மலர் அல்ல; நம் தலையில் பட்ட கல்! காலில் குத்திய முள்; வாயில் போட்ட மண்; அரித்துக் கொண்டிருக்கும் புண். நம்மைக் கெடுப்பதற்காக எடுத்து வைக்கப்பட்டவை வேதங்களும், சாஸ்திரங்களும். இவற்றின் சுருக்கமாகத் திகழ்வது திருக்குறள் என்று கூறுவது 'ஊமையன் கோட்டையில் புகுந்த உளறுவாயன்' கதை.

விண்வெளிக் காலத்தில் வேதங்களை விற்க முயல்வது விலைபோகாச் சரக்கென்று காட்டும். வெஞ்சமரில் விழி இமைத்தாலும் இழுக்கென்பவன் திருக்குறள் வீரன்; வெற்றிபெற எவ்வழியிலும் செல்பவன் வேதங்களின் வித்து.

"ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும், சான்றோர் பழிக்கும் வினை" செய்யாதவனே தமிழர் தலைவன். மிஞ்சுகிற வஞ்சனையை விதைப்பவனே வேத முதல்வன். வேதம் கிளம்பியதா? பூதம் கிளம்பியதா? பேதமே கிளம்பியது. பேதைமை விளங்கியது, பிரிவினை தொடங்கியது. பிழை நிறைந்த பின்பாட்டு வெல்வதில்லை. "பண் என்னாம்? பாடற் கியைபின்றேல்?" என்று வள்ளுவர் வினா எழுப்புகிறார்.

மக்களை நான்கு வருணங்களாகப் பிரித்து மகிழ்வது வேதம். "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்று அனைவரையும் இணைத்து ஒற்றுமை வளர்ப்பது திருக்குறள். வேத மூர்த்திகள் அளித்த விலங்கை உடைக்கும் திருவள்ளுவர், வேதச் சுருக்கத்தை வைத்து விருந்து படைக்கவில்லை.

தந்தையைக் கொன்று தாயைப் புணர்ந்தவனை மன்னித்துத் தலைவனாக ஆக்கிக் கொண்டாடியவை சாத்திரங்கள். 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்றும், அது தவறினால், 'குன்றின் அனையாரும் குன்றுவர்' என்று கூறி எவருக்கும் விதிவிலக்கு அளிக்க மறுத்தவர் வள்ளுவர். 'எனைத் துணையர் ஆயினும் என்னாம்?' என்று எதிர் முழக்கம் இட்டு இடி முழக்கம் காட்டியவர்.

'நீச்ச பாஷை' என்று தமிழ்மொழியைத் தாழ்வு படுத்தியவர்கள், இன்று தமிழ் மொழியில் உள்ள திருக்குறளைத் தங்கள் வழிச் சொத்து என்று தலைகீழாக நிற்கிறார்கள்.

எத்தனை பேர் நாட்டில் ஏமாந்திருக்கிறார்கள் என்று எண்ணிப் பார்க்கிற கணக்கு இது. இந்தக் கணக்குக்குக் காலுமில்லை, தலையுமில்லை! இது மூலையில் ஒதுக்க வேண்டிய முண்டக் கணக்கு.

தேவமைந்தர்களான அந்தணர்களுக்கு உடலுழைப்பு உரியதல்ல என்று வாயை அகல

மாக்கி வாதாடிய வேத விற்பன்னர்கள், 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்ற வள்ளுவர் யாகசாலையில் வேலை பார்த்தவர் என்றால் யார் நம்புவது? இரு கண்களும், இரு செவிகளும் இழந்தோரும் எப்படி ஏற்பர்?

'சூத்திரன் வேதம் படித்தால் நாக்கை அறு; படிப்பதைக் கேட்டால் செவியில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்று' என்று வேதத்தை வேலாக்கிக் கல்விக் கண்ணைத் தோண்டியது வேதம் அல்லவா? 'கேடில் விழுச்செல்வம் கல்வி' என்று கேளாச் செவியினரையும் கேட்க வைத்த திரு வள்ளுவரைத் தங்கள் பக்கத்து வீட்டுக்காரராக மாற்றப் பார்க்கிறார்கள்.

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"

என்ற வள்ளுவர் வேத பாடசாலையில் படித்திருப் பாரா? படித்தார் என்று அடம் பிடிக்கிறவர்கள் தமிழர் உள்ளத்தில் இடம்பிடிக்க முடியாது.

இவ்வாறு பொருத்தமற்ற பொய்யுரைகளை மனம் போன போக்கில் உளறித் திரிவோரை வள்ளுவர்,

"பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கள் பதடி எனல்"

என்றார். இதுவும் வேதத்தில் இருந்து வெளியே வந்து விழுந்ததா?

நஞ்சுடைய நாக்கில் வரும் நடுங்கத்தக்க சொற்களைத்தான் வள்ளுவர், 'நாவினால் சுட்ட வடு' என்றார். தமிழர்களை இன்னும் நாவினால் சுடுவதற்கு எத்தனை பேர் வரப்போகிறீர்கள்? டாக்டர் நாகசாமி தலைமை ஏற்றுக் கொண்டாரா?

பழி சுமந்து அவர் நடந்தால், பாதம் தொட்டுப் பணிய இங்கே பம்பரம் ஆடும் பள்ளிச் சிறுவரும் மறுப்பார். களம் எத்தனை? என்று கணக்கிடத் தமிழ் நிலம் காத்திருக்கிறது.

மாந்தோப்பின் வேலி ஓரத்தில் இருக்கின்ற மரத்திற்கு வெளியே இருந்து கல்லடிகள் விழுந்து கொண்டே இருக்கும். அந்த மாங்கனி நம் கைக்கு வந்துவிடாதா என்று சிலர் கனவு காண்பதால் காய்த்த மரத்திற்குக் கல்லடிகள் வந்து கொண்டே இருக்கும்.

நாள்தோறும் திருக்குறளின் பெருமை உலகில் பரவிக் கொண்டிருக்கிறது. மாந்தர் வாழ் கின்ற இடமெல்லாம் திருவள்ளுவர் ஆசானாக அமர்த்தப் பெறுகிறார். பல மொழிகளும் அவரைத் தழுவிக் கொள்கின்றன.

இந்த முதன்மையைத் தட்டிப் பறித்துத் தம் மதாக ஆக்கிப் பெருமை கொள்ளக் காலந்தோறும் பல நாகசாமிகள் காட்சி தருகிறார்கள். அவர்கள் தோல்வியைத் தழுவிக் கொள்வதைத்தான் நாம் தொடர்ந்து பார்த்து வருகிறோம்.

ஒருவன் உலகில் முதன்மை பெறுவானேயா னால், இவன் என் ஊரைச் சேர்ந்தவன், இவன் என் இனத்தைச் சேர்ந்தவன், இவன் என் மொழி யைச் சேர்ந்தவன், இவன் என் குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று அந்தப் போர்வையிலே தம் உரிமையைக் கொண்டாடுகிறான்.

## முனைவர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன்



உரிமைப் புக ழுக்கு நடைபெறும் போட்டி யில் இன்று தலையாய போட்டி திருக்குறளுக்கு நடந்து கொண்டிருக்கிறது. திருவள்ளுவரைச் சமயங்கள் எல்லாம் தம்மவர் என்று தம்பட்டம் அடித்து ஓய்ந்திருக்கும் வேளையில், திருக்குறள் வேதங்களின் சுருக்கம் என்றும் சாத்திரங்களின் மொழிபெயர்ப்பென்றும் கூறிக் கொண்டு தலை நிமிர்ந்து நிற்கும் முயற்சிகள் அவர்களைத் தலை கவிழச் செய்யும் என்பதை விரைவில் உணர் வார்கள்.

''அந்நாள் தொட்டே அடக்கடா என்றுரைத்த அறங்காத்த தமிழே'' என்று பாடிய பாவேந்தர் பாரதிதாசனுக்குப் பிறகும் அறைகூவல் விடுப் போம். எந்நூலுக்கும் முதல் நூல் எங்கள் திருக் குறளே. இந்நூலில் வேதங்களின் பல்லவியும் இல்லை; சாத்திரங்களின் சரணங்களும் இல்லை என்று குன்றேறிக் கூவுவோம்!

# சக்தி பைனான்ஸ்

நம்பிக்கையின் நிகரற்ற கட்டமைப்பு

H.O. : கோயமுத்தூர் - 641 018. போன் : 0422-2231471-4

## புதிய மற்றும் பழைய
## “வாகனங்களுக்கு கடனுதவி திட்டம்”





*உங்கள் வளர்ச்சியே எங்கள் மகிழ்ச்சி*





20* வருடங்கள் வரையிலான சிறிய மற்றும் கனரக லாரிகள் JCB, Excavator வாகனங்களுக்கும் கடனுதவி அளிக்கப்படும்.

**எங்கள் சேவைகளைப் பற்றி சில தகவல்கள்**

- ✓ புதிய மற்றும் பழைய வாகனங்களுக்கு கடனுதவி வழங்குதல்
- ✓ மிகப்பழைய மாடல் சரக்கு வாகனங்களுக்கு நிதியுதவி
- ✓ வாகன சீரமைப்பு Tyre, FC, உதிரி பாகங்கள் மற்றும் செலவினங்களுக்கும் கடன் உதவி
- ✓ தேர்டு பார்ட்டி செட்டில்மெண்ட் (Third Party Settlement)
- ✓ பழைய வாகனங்களுக்கும் இன்சூரன்ஸ் சேவையுடன் கூடிய நிதியுதவி
- ✓ வாடிக்கையாளர்களின் தேவைகளை அறிந்து 24 மணி நேர துரித சேவை
- ✓ துரித சேவைக்கு பிரதான இடங்களில் வாடிக்கையாளர் சேவை மையங்கள்
- ✓ எளிய விதிமுறைகள், நம்பிக்கை, நாணயம் மற்றும் கனிவான சேவை.




# ஆயுர்வேதம் - அலோபதி - சித்தா சிகிச்சைபோல

# ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை!

வடதுருவமான ஆர்க்டிக் பனிப்பிரதேசப் பகுதியில் வெப்பமே இல்லை. வெள்ளிப் பனிமலைகள் நிரம்பிய பிரதேசம் அது. அங்கு வாழும் எஸ்கிமோக்கள் அக்கடும் குளிரில் எப்படித்தான் வாழ்கிறார்களோ, ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஸ்லெட்ஜ் எனும் வண்டிகள்தான் அவர்களுக்குப் போக்குவரத்து வாகனம். அவை பெட்ரோலில் ஓடுவதில்லை. நாய்கள்தான் அவற்றை இழுத்துச் செல்கின்றன. நமக்கு ஐஸ் போல அவர்களுக்கு நெருப்பு விசேஷப் பொருள்.

ஆர்க்டிக் பிரதேசத்திலுள்ள எஸ்கிமோக்களுக்கு ஓசோன் ஆக்சிஜன் அதிகமாகக் கிடைப்பதால்தானோ என்னவோ, அதிகக் காலம் உயிர் வாழ்கிறார்கள்.

அந்த ஆர்க்டிக் பிரதேசத்தின் ஆகாயம் ஓசோன் நிரம்பிய வானம். நமது பூமியானது, கரி மாசுகளால் வெப்பமடைந்து கொண்டே இருப்பதால், பூமியின் வெப்பம் ஆர்க்டிக் பிரதேசத்தில் உள்ள ஓசோனைத் தாக்கி ஓட்டை போட்டுள்ளதை விஞ்ஞானிகள் கண்டுபிடித்துக் கூறியுள்ளனர்.

பூமி வெப்பம் குறைந்து விடுமானால், ஓசோன் ஓட்டை அடைபடுவதற்கே 30 ஆண்டுகள் ஆகுமாம். அதாவது, 2050இல்தான் முன்பிருந்த பழைய நிலை வருமாம். ஓசோன் என்ற இந்த வாயு ஆகாயத்தில் வியாபிக்காமல் போகுமானால் சூரியனின் புற ஊதாக் கதிர்கள் (Ultra Violet Rays) நம்மீது நேராகப் படும். அதனால், நமது தோல் அந்தச் சூட்டைத் தாங்காமல் கருகிவிடும். பாதுகாப்பற்ற உடம்பில் தொற்று ஏற்பட்டுச் சாவு சம்பவிக்கும்.

இயற்கை சூரியனையும் தந்து அதில் இந்தப் புறஊதாக் கதிர்களையும் தந்து, அதனைத் தடுக்க ஓசோனையும் தந்துள்ளதை என்னவென்று சொல்வது?

பூமிக்கு அருகில் இந்த ஓசோன் படலம் படலமாகக் கீழே பரவிக் கிடக்கும் நேரத்தைப் பின்னிரவு 2.30 முதல் அதிகாலை 4 மணி வரை என்கிறார்கள். இந்த நேரத்தை நமது மகரிஷிகள் 'பிரம்ம முகூர்த்த நேரம்' என்கிறார்கள். அந்த நேரத்தில் நடமாடுவோமானால், ஓசோன் சக்தி நமக்கு நிறையக் கிடைக்குமாம்.

ஆனால், மருத்துவ விஞ்ஞானம் அந்த நேரத்தில் விழித்திருக்கவே

*கூடாதென்றும், அந்நேரம்தான் நமது மூளைப்பகுதியில் அமினோ அமிலம் சுரக்கும் நேரம் என்கிறது. இதனைப் பற்றி மேலதிக விளக்கத்தை மருத்துவர்களிடம்தான் பெறவேண்டும்.*

*நன்றாகத் தூங்கி 4 மணி அளவில் விழித்துப் படித்தால், முதல் நாள் புரியாத வற்றிற்குக்கூடப் புதிய வெளிச்சம் எளிதில் கிடைக்கிறது. அதனால், பிரம்ம முகூர்த் தம் என்பது இந்த 4 மணியாகவும் இருக்கலாம். நமது மணிக்கணக்கில்தான் ஏதோ சிக்கல் என்றும் கூறலாம். வள்ளலார், நித்திரை 21/2 நாழிகைக்குத்தான் என்பார். இந்த 21/2 நாழிகை என்பது 21/2 மணி அல்ல. நமது மணிக்கணக்குக்கு அது சரியாக வருவதில்லை. 6 மணி நேரம் தூங்குவதுதான் ஆரோக்கியம் என்கிறார்கள்.*

*இந்த ஓசோன் வாயுவை மருத்துவத்தில் உபயோகித்துச் சிகிச்சை பெறுவதை இங்கிலீஸ் சிகிச்சை முறை (அலோபதி) ஆதரிப்பதில்லை. அதிகச் செலவை ஏற்படுத்தும் அலோபதி முறையில் மருந்துக் கம்பெனிகள் பல கொள்ளையடித்து வருவதை மறுக்க முடியாது. ஓசோன் சிகிச்சை அவர்களுக்கு எதிரி.*

*தாய்லாந்து நாட்டில் 12 மாணவர்கள் ஒரு குறுகிய குகைக்குள் சென்று மாட்டிக் கொண்டனர். அவர்களைக் கால்பந்தாட்டப் பயிற்சியாளர் ஒருவர்தான் அழைத்துச் சென்றவர். அவர் புத்தத் துறவியும் ஆவார். அவரிடம் ஒரு வாரத்திற்கு வேண்டிய உணவுதான் இருந்தது. அதனை வைத்து அம்மாணவர்களின் உயிரை ஒரு வாரம் காப்பாற்றினார். அதற்கு மேல் என்ன செய்தார் என்றால், அந்த 12 பேருக்கும் குகைக்குள் தியானம் கற்பித்து மூச்சுக் காற்றை இழுத்து அதையே உணவாக்கிக் கொள்ளக் கற்பித்து, அவர்களின் உயிரைக் காப்பாற்றியுள்ளார். அம்மாணவர்கள் 24 நாட்கள் இப்படித்தான் உயிரோடு இருந்துள்ளனர்.*

*தியானத்தின் மூலம் காற்றையே அவர்கள் உணவாக்கி வாழ்ந்தது உண்மை. அப்படியானால், இயற்கையின் கொடையாகிய ஓசோனை நமது சிகிச்சைக்குப் பயன்படுத்திக் கொள்ளும் காலம் வெகுதூரத்தில் இல்லை. அச்சிகிச்சை முறை நமக்குக் கிடைத்து விட்டால், நோயற்ற வாழ்வில் நாம் வாழ முடியும். சூரிய சக்தி மின்சாரம் நமக்குக் கிடைப்பது மாதிரித்தான் இதுவும்.*

***ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சையைக் கோவையில் டாக்டர் அருள் "அருளி" வருகிறார் என்றுதான் சொல்ல வேண்டும். ஓசோனைப் பற்றி ஓர் ஆசானைப் போல எங்களுக்குப் பாடம் நடத்தினார். ஓசோன் டாக்டர்களுக்காக உருவாகப் போகும் ஒரு சங்கம் மருத்துவ உலகத்தில் மகத்தான சிகிச்சைப் புரட்சியை உருவாக்கப் போவது உறுதி.***

***கோவையில் வைட்டமின் 'சி' சிகிச்சையைப் பயன்படுத்திப் புற்று நோய்க்கு முற்றுப்புள்ளி வைத்து வரும் டாக்டர் அருள், ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை பற்றிச் சொல்லியவற்றையும் படித்துப் பாருங்கள்.***

**– இ.ஆர்.**

**கேள்வி : ஓசோன் வாயு விஷ வாயுவா?**

**பதில் :** ஓசோன் வாயு (டாக்சிக்) விஷ வாயு அல்ல. இதனுடன் மாசு சேர்ந்தால்தான் விஷ வாயு ஆகும். ஓசோன் வாயு இரு பக்கமும் பதமுள்ள கத்தி போன்றது. இதனை நேரடியாகச் சுவாசித்தால் விஷத்தன்மை ஏற்படலாம். ஆனால், இதனை ரத்தத்தின் மூலம் செலுத்தினால் அப்படி ஏற்படாது.

அதிகாலையில் 2 மணி முதல் 3 மணி வரை கடற்கரையோரம் நடந்தால் ஓசோன் வாயு காற்று

மூலமாகக் கிடைக்கும் என்பார்கள். அப்போது சுவாசித்தால் அதில் விஷத்தன்மை கிடையாது.

இப்போது அந்த நேரத்திலும் நமக்கு ஓசோன் வாயு கிடைப்பதில்லை. காரணம், என்றைக்கு வேளாண்மை அழிந்து பிற தொழிற்சாலைகள் பெருகினவோ, அன்றைக்கே ஆகாயம் மாசுபட்டு விட்டது. அதனால் இப்போது முன்பு போல தூய ஓசோன் நமக்கு அதிகாலையிலும் கிடைப்ப தில்லை.

**கேள்வி : ஓசோனில் இருக்கக்கூடிய மூலக் கூறுகள் என்னென்ன?**

**பதில் :** ஆக்சிஜன் 3($O_3$) மட்டும்தான்.

**கேள்வி : ஓசோனின் செயல்பாடுகள் என் னென்ன?**

**பதில் :** ஓசோனின் நேரடிச் செயல்பாடு என்ன வென்றால், நோயை உண்டாக்கும் வைரஸ், பாக்டீரியா, பூஞ்சைகள் ஆகியவற்றை நேரடியாக அது அழிக்கிறது. அதனால் அமெரிக்காவில் நியூயார்க் நகரில் குடிநீரில் (மெட்ரோ வாட்டர்) உள்ள நுண்ணுயிரிகளை அழிக்க ஓசோன் கலந்து வீடுகளுக்கு விநியோகிக்கிறார்கள். நீச்சல் குளங் களை ஓசோனைக் கொண்டு சுத்தம் செய் கிறார்கள். நம் நாட்டில் அந்த முறை இன்னும் வரவில்லை. நாம் இங்கு குடிநீரில் குளோரின்தான் கலக்கிறோம். குளோரின் மிகுந்த நச்சுத்தன்மை வாய்ந்தது.

குளோரின், ஃபுளோரின், புரோமின் இந்த மூன்றுமே மோசமானவை. குழாய் நீரில் ஃபுளோ ரின் வந்துவிடுகிறது. புரோமின் ரொட்டி முதலிய வற்றைச் சுத்தம் செய்யப் (பிளீச்சிங்) பயன் படுத்துகிறார்கள். குளோரினை அரசே அவ்வப் போது தண்ணீரில் கலந்து குடிநீராக விநி யோகிக்கிறது. இவை எல்லாம் மிகவும் மோச மானவை. இவற்றிற்குப் பதிலாக ஓசோனைக் கலந்து விட்டால் அந்நீரில் விஷக்கிருமி ஒன்று கூட இருக்காது.

**கேள்வி : ஓசோன் எந்த வடிவில் இருக்கிறது?**

**பதில் :** வாயு வடிவத்தில்தான் ஓசோன் இருக் கிறது. அந்த வடிவத்தில் நாம் அதை எடுத்துக் கொள்வதில்லை. மருத்துவமனையில் ஒரு கருவி



டாக்டர் அருள்

மூலமாக ஆக்சிஜனில் மின்சாரத்தைப் பாய்ச்சி ஓசோனை எடுக்கிறோம். அதுவும் வாயு வடிவி லேயே இருக்கும். மருத்துவமனையில் அப்படித் தான் பயன்படுத்துகிறோம்.

இதனை இரத்தத்தில் கலந்து கொடுக்கலாம், சலைன் திரவத்தில் கலந்து சொட்டுச் சொட்டா கவும் உடலில் செலுத்தலாம். மேலும், காது வழி யாக, ஆசனவாய் வழியாகவும் உடலில் செலுத்த லாம்.

**கேள்வி : ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சையை என் னென்ன நோய்களுக்கு உபயோகப்படுத்தலாம்?**

**பதில் :** இருதய ரத்தக்குழாய் அடைப்பு, இரு தயத் தசைகள் செயலிழப்பு, வயிறு தொடர்பான மலச்சிக்கல், அல்சர் உள்ளிட்ட நோய்கள், நுரை யீரல் தொடர்பான ஆஸ்துமா, மூச்சுத்திணறல் உள்ளிட்ட நோய்கள், சர்க்கரை நோயினால் ஏற்படும் விளைவுகள் – உதாரணத்திற்குப் பாதத் தில் வரும் புண்கள், பல்வேறு விதமான புற்று நோய்கள் எனப் பலவகை நோய்களுக்கு ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சையைக் கொண்டு நலம் பெறலாம்.

**கேள்வி : கோவையில் சத்தியமங்கலம் சாலையில் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை மருத்துவமனை ஒன்று முன்னர் செயல்பட்டு வந்தது. அது**

**இல்லை. என்னவாயிற்று?**

**பதில் :** ஆம். அது தற்போது இல்லை. அங்குச் சிகிச்சை பெற்றவர் ஏதோ ஒரு காரணத்தால் இறந்ததால், அதற்கு ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சைதான் காரணம் என்று இந்த அற்புத சிகிச்சையின் மீது வீண்பழி சுமத்தப்பட்டது. அவருடைய இறப்பிற்கு மருத்துவரின் சரியான தேர்ச்சியின்மைகூடக் காரணமாக இருக்கலாம்.

மிகப்பெரிய மருத்துவமனைகளில் நாள்தோறும் பல்வேறு காரணங்களால் இறப்புகள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இதய அறுவைச் சிகிச்சையிலும் சரி, தீவிர சிகிச்சைப் பிரிவுகளிலும் சரி இறப்புகள் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன.

இந்த மாதிரி இறப்புகள் நிகழாமல் தடுக்க, ஒவ்வொரு தீவிர சிகிச்சைப் பிரிவுகளிலும் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சைப் பிரிவை அறிமுகப்படுத்திச் சிகிச்சை செய்தால் சில உயிர்களை யாவது காப்பாற்றலாம்.

மூளைச்சாவு என்று சொல்லி நிறையப் பேருடைய உடல் உறுப்புகளைத் தானம் செய்கிறார்கள். மூளைச்சாவு அடைந்தவர்களுக்கு ஓசோன் செலுத்திப் பார்க்கலாம். அப்படிச் செலுத்தியும் சரியாகாவிடில், பின்னர் உடல் உறுப்புகளைத் தானம் செய்யலாம். உயிர் பிழைக்கும் ஒரு வாய்ப்பை அவர்களுக்கு ஏன் நாம் கொடுக்கக் கூடாது?

கி.பி. 1830 முதல் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை நடைமுறையில் உள்ளது. புற்றுநோய்ச் சிகிச்சை முதல் இருதய நோய் வரை எல்லா நோய்களுக்கும் ஓசோன் வாயு உதவுகிறது.

அலோபதி, ஹோமியோபதி, சித்த மருத்துவம், ஆயுர்வேதம், இயற்கை மருத்துவம் முதலிய சிகிச்சை முறைகளுக்கு இது துணைபோகும் சிகிச்சைதான். அலோபதி, ஆயுர்வேதம், ஹோமியோபதி, இயற்கை மருத்துவம் என எந்த மருத்துவம் செய்தாலும், அதனுடன் ஓசோனையும் துணைக்கு வைத்துக் கொண்டால், நிறையச் செலவுகளை மிச்சம் செய்யலாம், மருந்துகளால் வரும் பக்க விளைவுகளைத் தடுக்கலாம். இது நோயாளிக்கு ஒரு நல்ல வாய்ப்பு.

இங்கிலாந்து எலிசபெத் மகாராணி ஓசோன் சிகிச்சையுடன்தான் 96 வயதில் இன்றைக்கும் நன்றாக இருக்கிறார். பிடல் காஸ்ட்ரோ உடல் நலம் குன்றியிருந்த காலத்தில், ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை எடுத்துத்தான் நலம் பெற்றார். அதன் பின்னர்தான் கியூபா நாட்டில் எல்லா மருத்துவமனைகளிலும் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை இலவசமாகச் செய்யப்படுகிறது.

எங்கெங்கு ஆங்கிலம் பேசாத நாடுகள் உள்ளனவோ, அங்கெல்லாம் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை சிறப்பாக உள்ளது. அமெரிக்காவில் 8 மாகாணங்களில் உள்ள மருத்துவமனைகளில் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை நடைமுறையில் உள்ளது.

அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி ரொனால்ட் ரீகனுக்கு உடலில் மூன்று விதமான புற்று நோய் இருந்தது. அவர் ஜெர்மனிக்குச் சென்று அங்கு டாக்டர் ஹேன்ஸ் நைப்பர் என்பவரிடம் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சையைப் பெற்றுக் குணமடைந்தார்.

இச்செய்தி அப்போது மறைக்கப்பட்டது. ஏனெனில், அமெரிக்க அதிபர் ஒருவர் வேறு நாட்டிற்குச் சென்று சிகிச்சை பெற்றார் என்பது அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்று. அச்செய்தி வெளியானால், அமெரிக்காவின் மருத்துவத்துறையின் மீதான நம்பிக்கை மக்களுக்குப் போய்விடும் என்பதால் அது மறைக்கப்பட்டது. அவரது மறைவிற்குப் பின்னர் இச்செய்தி இப்போது கசிந்து விட்டது.

ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை ஜெர்மனியில் சிறப்பாக உள்ளது. ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சையில் ஜெர்மனி சிகிச்சை முறை, ரஷ்ய சிகிச்சை முறை என இரண்டு முறைகள் உள்ளன. நான் கோவையில் இந்த இரண்டு முறைகளையும் சேர்த்து நோயாளிகளுக்குச் சிகிச்சையளித்து வருகிறேன்.

ரஷ்ய முறைச் சிகிச்சை சலைன் திரவத்தின் வழியாக ஓசோனைச் செலுத்துவதாகும். ஜெர்மனி சிகிச்சை முறை ரத்தத்தின் வழியாக ஓசோனைச் செலுத்துவதாகும்.

ரொனால்ட் ரீகன் ஜெர்மனி சென்று வந்தபின்

அமெரிக்காவிலிருந்த மருத்துவர்களிடம் அவர் கேட்டாராம், 'அங்கே உள்ள ஒரு சாதாரண மருத்துவர் கிராமத்தில் உள்ளவர்களுக்கு ஆக்சிஜன் ஒசோன் சிகிச்சையளித்து அவர்களைக் குணப்படுத்தி அனுப்புகிறார். மக்கள் நலம் பெற்று அமைதியாகச் சென்று கொண்டிருக்கிறார்கள். இங்கே, அமெரிக்காவில் மில்லியன் டாலர்களைச் செலவு செய்தும் கீமோதெரபி சிகிச்சைதான் செய்து கொண்டிருக்கிறீர்கள்' என்று. இச்செய்திகளெல்லாம் இப்போதுதான் வெளிவருகின்றன.

**கேள்வி : ஆக்சிஜன் ஒசோன் சிகிச்சை ஏன் இதுவரை பிரபலமாகவில்லை?**

**பதில் :** இதற்கு யாரும் காப்புரிமை பெற முடியாது. இது இயற்கையின் கொடை. இதை ஒரு மாத்திரையாகவோ, கேப்ஸ்யூல் ஆகவோ, திரவ மருந்தாகவோ, ஊசி மருந்தாகவோ, சொட்டு மருந்தாகவோ யாரும் வியாபாரமாகச் செய்ய முடியாது. அதனால்தான் மருந்துக் கம்பெனிகள் மத்தியில் இதற்கு வரவேற்பில்லாமல் போய்விட்டது.

இதற்கு வணிகக் காப்புரிமை பெறுவதாக இருந்திருக்குமானால் தெருவுக்குத் தெரு ஒசோன் மருத்துவமனைகள் வந்திருக்கும். நிறைய மருந்துக் கம்பெனிகள் வந்திருக்கும். அங்கிருந்து மருத்துவ முகவர்கள் வந்து மருத்துவர்களை மருத்துவமனைகளுக்கு நேரில் வந்து பார்த்திருப்பார்கள். பரிந்துரை செய்திருப்பார்கள். மருத்துவர்களும் அவற்றைப் பயன்படுத்தியிருப்பார்கள். அதனால் மருந்துக் கம்பெனிக்கு வியாபாரமும் நன்கு நடந்திருக்கும்.

நமது வாகனங்களுக்குக் குறிப்பிட்ட கால இடைவெளியில் நாம் சர்வீஸ் செய்து கொள்வதைப்போல, நம் உடலுக்குச் சிகிச்சைகள் செய்து கொள்வதில்லை. நோய் வந்தாலும் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என இருந்து விடுகிறோம்.

ஒசோன் நம் உடலில் செலுத்தப்படுமானால், நமது உடலில் உள்ள நச்சுக் கிருமிகள் அழிக்கப்பட்டுச் சிவப்பு அணுக்களின் மேலுள்ள ஜவ்வு சுத்தம் செய்யப்படும். அது அணுக்களின் உயிர்ச் சத்தினை அதிகரித்துக் கொடுக்கும்.

Oxygen under – utilization–இருப்பதனால், நமக்கு நோய்ப்பிரச்சனை அதிகரிக்கிறது. 18 வயதில் நம் உடல் ஆக்சிஜனை உபயோகப்படுத்துவது போல், 70 வயதில் உபயோகப்படுத்துவதில்லை. இதனால்தான் பல்வேறு நோய்கள் வருகின்றன. மூச்சுத்திணறல் உள்ளிட்ட பல நோய்கள் வருகின்றன. நமக்குரிய ஆக்சிஜனை விருத்தி செய்ய ஆக்சிஜன் ஒசோன் சிகிச்சைதான் சிறந்தது.

நாம் சுவாசிக்கும் காற்று நுரையீரலுக்குப் போகிறது. அங்கு போய் ஆக்சிஜனை எடுத்துக் கொள்கிறது. கார்பன் டை ஆக்சைடு (கரியமில வாயு) வெளிவிடப்படுகிறது. அந்த ஆக்சிஜன் ஹீமோகுளோபினுடன் கலந்து ரத்த அணுக்களின் வழியே உடலின் அனைத்துப் பாகங்களுக்கும் செலுத்தப்படுகிறது. ஓரிடத்தில் அந்த ஆக்சிஜன் ரிலீஸ் செய்யப்படவில்லை என்றால் அங்கேயே சுற்றிக்கொண்டிருந்துவிட்டு, பிறகு அது வெளியேற்றப்படும்.



2–3DPG என்று ஓர் என்சைம் இருக்கிறது. அந்த என்சைமிற்கு ஆக்சிஜனை இழுக்கிற சக்தி உண்டு. இது நன்றாக இருந்தால் ஆக்சிஜனை இழுத்துக் கொள்ளும். குறிப்பிட்ட இடத்தில் பிரச்சனை இருந்தால், அந்த என்சைம் ஆக்சிஜனை இழுத்துக் கொடுக்கும். ஓசோன் செலுத்தப்பட்டால் அந்த என்சைம் அதிகரித்து நன்கு வேலை செய்யும்.

இந்த DPG என்சைம் நமக்கு வயதானால் குறையும். அதைச் சமானப்படுத்த ஓசோன் செலுத்தப்பட்டால், இதனை அது அபிவிருத்தி செய்யும். ரத்த ஓட்டத்தில் வரும் ஆக்சிஜன் தடையின்றிச் செல்லும். நோய் நொடியில்லாமல் வாழலாம்.

**கேள்வி : தமிழக அரசோ, மத்திய அரசோ ஓசோனைப் பற்றி என்ன கொள்கை வைத்திருக்கின்றன?**

**பதில் :** இன்னும் எதுவும் தெரியவில்லை. இதுபற்றி அரசுக்கு எதுவும் கொடுக்கப்படவில்லை. இதற்காக நாங்கள் இப்போதுதான் முயற்சி செய்து கொண்டிருக்கிறோம்.

**கேள்வி : 'மிராக்கிள்' வைட்டமின் 'சி' பானம் பற்றி ஒரு மருத்துவ மாநாடு பொள்ளாச்சியில் நடத்தியதைப் போல, ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை பற்றியும் ஒரு மாநாடு நடத்துவீர்களா?**

**பதில் :** விரைவில் நடக்கும். பொள்ளாச்சியில் டாக்டர் ம. மாணிக்கம் அவர்களின் தலைமையில் நடத்துவோம்.

**கேள்வி : டாக்டர் மாணிக்கம் அவர்களின் வைட்டமின் 'சி' சிகிச்சைக்கு ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை ஒத்துழைக்கக் கூடியதா?**

**பதில் :** நிச்சயம் ஒத்துழைக்கும். முதலில் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை எடுத்துக் கொண்டு பின்னர் வைட்டமின் 'சி' எடுத்துக் கொண்டால் பலன் பலமடங்கு அதிகரிக்கும்.

**கேள்வி : ஓசோனை அவரவர் வீட்டில் தயாரித்துச் சுவாசித்துக் கொள்ள முடியுமா?**

**பதில் :** அப்படிச் சுவாசிக்க முடியாது. தண்ணீரில் கலந்து குடிக்கலாம். அதற்கெனச் சில சாதனங்கள் உண்டு. அவற்றின் மூலம் அதனைக் கலந்து நாள்தோறும் குடித்து நலம் பெறலாம்.

**கேள்வி : ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சைக்காக மத்திய அரசு பட்ஜெட்டில் ஏதேனும் நிதி ஒதுக்கீடு உண்டா?**

**பதில் :** அதெல்லாம் இனிமேல்தான். இப்போதுள்ள மத்திய அரசு நல்ல அரசாக இருப்பதனால், இனிமேல் ஏதேனும் செய்யலாம்.

**கேள்வி : ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சையில் பக்க விளைவுகள் உள்ளதாகக் கூறப்படுகிறதே?**

**பதில் :** இணையதளத்தில் வரும் இதுபோன்ற செய்திகளையெல்லாம் நம்பாதீர்கள். ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சையைப் பாழ்படுத்த வேண்டும் என்பதற்காகச் சில விஷமிகளால் இம்மாதிரிச் செய்திகள் பரப்பப்படுகின்றன.

கீமோதெரப்பியில் இல்லாத பக்க விளைவுகளா இதில் உள்ளன? கீமோவில் முடி கொட்டிப் போகின்றது. ஆனாலும் அந்தச் சிகிச்சையை மக்கள் செய்து கொண்டுதானிருக்கிறார்கள். காய்ச்சலுக்குத் தரும் 'பாராசிட்டமால்' மாத்திரைகளை அதிகமாகச் சாப்பிட்டால் அது கல்லீரலைப் பாதிக்கும். குடல் புண்ணுக்குத் (அல்சர்) தரும் 'பான்ட்டோசிட்', 'ஜின்டேக்' மருந்துகளை அதிக நாட்கள் உட்கொண்டால், வயிற்றில் புற்றுநோய் வரும். இவற்றை விடவா ஆக்சிஜன் ஓசோன் மோசமானது?

ஆக்சிஜன் ஓசோனில் இம்மாதிரிப் பக்க விளைவுகள் எதுவுமே கிடையாது. சரியான மருத்துவரிடம் சென்று சரியான அளவில், சரியான முறையில் ஆக்சிஜன் ஓசோன் ஒருவருக்குச் செலுத்தப்பட்டால் ஒரு பக்க விளைவும் வராது. மருத்துவர்களுக்கு முதலில் இதைப்பற்றி நன்கு தெரிந்திருக்க வேண்டும்.

சீனாவில் சில மாகாணங்களில் நோய்கள் பரவாமல் கட்டுப்படுத்துகிற மருத்துவர்களை அழைத்துப் பாராட்டிச் சிறப்பிக்கிறார்கள். ஆனால், இங்கு பத்தாயிரம் இதய அறுவைச் சிகிச்சை செய்த டாக்டரை அனுபவசாலி எனப் பாராட்டுகிறோம். பத்தாயிரம் அறுவைச் சிகிச்சைகளைத் தடுப்பவர்தான் சரியான டாக்டர். அறுவைச் சிகிச்சை செய்பவர்களால் நாட்டின் பொருளாதாரம் வீழ்ச்சியடைகிறது. அறுவைச் சிகிச்சையைத் தடுப்பவரால்தான் பொருளாதாரம் மேம்படுகிறது.

**கேள்வி : மது அருந்துபவர்களுக்கு ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை பலனளிக்குமா?**

**பதில் :** உறுதியாகப் பலனளிக்காது. மதுப் பழக்கம், புகைப்பழக்கம் உள்ளவர்களுக்கு இதனால் பலனில்லை. இப்பழக்கத்தை அவர்கள் 2 மாதக் காலமாவது நிறுத்திவிட்டு, அதன்பின்னர் ஆக்சிஜன் ஓசோன் சிகிச்சை பெற்றால் பலன் கிடைக்கும்.

**– ந.நி.**

# வாசகர் கடிதங்கள்

**'ஓ**ம் சக்தி' ஜூலை 2018 இதழ் அட்டையை அலங்கரித்திருந்த அருள்மிகு லட்சுமி நாராயண னின் வண்ணப்படமும், அதன் விளக்கமும் மன தைக் கொள்ளை கொண்டன.

– **இரா. வளையாபதி**, தோட்டக்குறிச்சி.

**உ**டை அணிவதில் உள்ள கட்டுப்பாடு ஆண் களைவிடப் பெண்களுக்குத் தேவை என்பது பற்றிச் 'சுரங்கம்' பகுதியில் வெளியாகிய அருட்செல் வரின் கருத்து வரவேற்கத்தக்கதாக உள்ளது!

– **தெ. முருகசாமி**, புதுச்சேரி.

**ப**ழமொழிகளைத் தேடித் திரட்டும் பேக்கரி முதலாளி மெய்யாகவே மிகுந்த பாராட்டுக்குரிய வர்தான். தமிழுக்கு அப்பால் உள்ளவர்கள் பலர், இவ்வாறு ஓசைப்படாமல் தொண்டு புரிவது தமிழ ரின் பெருமைதான்!

– **பொன். முத்தையன்**, திருவிடை மருதூர்.

**த**மிழுக்குப் பெருமை சேர்த்த டி.எம்.எஸ். கட்டுரையும் கரந்தை ஜெயக்குமாரின் ராஜராஜன் சிலை மீட்புக் கட்டுரையும் மிக அருமையாக இருந்தன.

– **பாரதி சுந்தர்**, குறண்டி.

**டா**க்டர் ம. மாணிக்கம் அவர்களின் அரிய கண்டுபிடிப்பான ''மிராக்கிள் வைட்டமின் 'சி' ஆரோக்கிய பானம்'' மக்களுக்குக் கிடைத்த வரப் பிரசாதம்.

– **இரா. கல்யாணசுந்தரம்**, மதுரை.

**ஜூ**லை 'ஓம் சக்தி' இதழில் வெளியாகி யிருந்த டாக்டர் க. பழனித்துரை அவர்களின் கட்டுரை அருமை. நம் இந்திய தேசத்தின் மக்கள் நிலையைத் திறம்பட ஆராய்ந்து எழுதியுள்ளார்.

– **கோதையூர் மணியன்**, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**வா**ரணாசி சாதுக்கள் பற்றிய செய்திகள் மிக மிக அருமை. கட்டுரையாளருக்கும், அதை வெளி யிட்ட 'ஓம் சக்தி'க்கும் மனமார்ந்த பாராட்டுக்கள்!

– **ஆ.ர. அருணகிரி**, ஆலாம்பாளையம்.

**எ**திர்பார்ப்பு ஒன்று இருந்தால், ஏமாற்றமும் ஒன்று இருக்கும் என்கிற இன்றைய நிஜ வாழ்க் கையைப் போல் அகிலன் கண்ணனின் சிறுகதை அமைத்திருந்தது.

– **முத்தமிழருவி இ. மாரிமுத்து**,

அ. வாடிப்பட்டி.

**'பி**த்ருக்கள் தவம்' கட்டுரையில் மிக மிகப் புதிய தத்துவத்தை, கருத்தை நன்கு விளக்கிக் கூறியிருந்தார் டாக்டர் ஜி. அழகர் ராமானுஜம்.

– **ராம. சிதம்பரம்**, கண்டனூர்.

**டா**க்டர் ம. மாணிக்கம் அவர்களின் புதிய கண்டுபிடிப்பான ''மிராக்கிள் வைட்டமின் 'சி' பானம்'', புற்று நோயால் பாதிக்கப்பட்டோருக்கான அருமருந்து. இது பெருமளவில் பயன்பாட்டுக்கு வரும்போது 'புற்று நோய் இல்லாத புதிய இந்தியா' விசுவரூபம் எடுக்கும்.

– **எஸ். ஸ்ரீதுரை**, வேலூர்.

**'இ**ப்படியும் ஒரு மாணவனா அர்ச்சுனன்?' கட்டுரை, ஆசிரியர் – மாணவர், குரு – சிஷ்யன் எனும் தெய்வீக உறவு நிலையைத் தெள்ளத் தெளி வாக உணர்த்தியது.

– **ஏ.டி. சுந்தரம்**, சென்னிமலை.

**'ஓ**ம் சக்தி' ஜூலை இதழில் வெளியாகி யிருந்த நெற்குன்றம் ஸ்ரீ கரிவரதராஜப் பெருமாள் தரிசனக் கட்டுரை, ஆன்மிகப் பக்தியை நன்கு வெளிப்படுத்தியது.

– **சு. நவீனாதாமு**, பொன்னேரி.

**பா**ரதிதாசன் கவிதைப் பெருவெளியில், வீரி யம்மிக்க புரட்சிக் கவிஞரின் கருத்துக்களை விருந் தாகப் படைத்திருந்தார் கவிஞர் சிற்பி. அவை நல்லதோர் சிந்தனைக்கான அறிவார்ந்த விருந்து!

– **வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி**,

வரட்டணப்பள்ளி.

**'ஓ**ம் சக்தி' ஜூலை இதழில் வெளியாகியிருந்த மூன்று கவிதைகளும் முத்தான – முத்தாய்ப்பான கவிதைகள். நெஞ்சை நெகிழச் செய்யும் கவி தைகள்.

– **மேலை. தமிழ்க்குமரன்**, மேலைச்சிவபுரி.

# உங்கள் மனம் மகிழும் வாகனத்தை தேர்ந்தெடுப்பீர்




## TRAX CRUISER



புதிய
## TRUMP 40

3 சிலிண்டர் MERCEDES Derived Engine மற்றும் Gear Box




FORCE GURKHA E.O.V. 4.4.4
BUILT FOR WAR



Traveller
SIMPLY WORLD CLASS
Luxury

கல்வி மற்றும் வர்த்தக நிறுவனங்களுக்கு ஏற்றதொரு வாகனம்



Available in 9 to 20 Seats

விவசாயிகளின் செல்வ வெற்றிக்கு
BALWAN
400, 450 & 500



FORCE MAN
MAN FORCE TRUCKS Pvt. Ltd.

## MAN TRUCKS
The New Force in India



# NM நா. மகாலிங்கம் & கம்பெனி

68, Dr. நஞ்சப்பா ரோடு, **கோவை-18.** ✆ **2239800, 2239808**
செல் : 98438-84900, 98438 84920 பொள்ளாச்சி : ✆ 224096, 98438 84931
திருப்பூர் : ✆ 2478665, 98438-84902 ஈரோடு : 98438 84940

# வெறுப்பு அரசியலை வெறுப்போம்...

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

**இ**ந்தியாவிற்கு அகிம்சை வழியில் சுதந்திரம் பெற்றுத் தந்த மகாத்மா காந்தியைப்போல் இந்த நேர்மை, உண்மையில்லாத ஜனநாயகத்திற்குச் சாவு மணியடிக்க நல்ல ஒரு தலைவரை ஆண்டவன் கொடுக்க வேண்டும். மத்தியிலும், மாநிலத்திலும் வாரிசு இல்லாத அரசாங்கம் வேண்டும்.

– **தி.ஈ.தி. ஈசுவர்மூர்த்தி**, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**மோ**டி மீதான வெறுப்பு அரசியலால் ஒன்றிணைந்த கூட்டணித் தலைவர்கள் அனைவருக்குமே பிரதமராக வேண்டும் என்றுதான் ஆசை. எதிரும் புதிருமாக இருந்தவர்கள், மாறுபட்ட கொள்கைகளை உடைய இவர்கள் ஒன்று சேர்ந்து அனுபவமும், அரசியல் முதிர்ச்சியுமற்ற ராகுலைப் பிரதமராக முன்னிறுத்த மாட்டார்கள். காங்கிரசில் பல மூத்த தலைவர்கள் இருந்தாலும், அரசியல் வாரிசு என்ற ஒரே காரணத்திற்காக ராகுலைத் தலையில் தூக்கிவைத்து ஆடுகிறார்கள். வாரிசு அரசியல் ஒழிந்து, ஊழலற்ற, நிலையான ஆட்சியைத் தரும் நாட்டின் வளர்ச்சியையே பிரதானமாகக் கொண்டு செயல்படுபவர்களை இனம் கண்டு ஜனநாயக மாண்பைக் காக்க மக்கள் முன்வர வேண்டும்.

– **பே. சண்முகம்**, செங்கோட்டை.

**உ**லகில் வாழ்கின்ற மனிதர்கள் எல்லாம் இறைவனின் திருஉருவங்களே என்ற பேருண்மையை உணர்ந்து எண்ணம், சொல், செயலால் விருப்பு, வெறுப்பின்றி உலக அமைதியை இலக்காகக் கொண்டு செயல்பட நாமனைவருமே முயற்சியை மேற்கொள்வோம்.

– **தி. நாகராஜன்**, சிவகாசி.

**அ**ரசியல் தலைவர்கள் நீதியுடன் வாழ வேண்டும். மக்களில் பெரும்பாலானவர்கள் உண்மையாகவே வாழ்கிறார்கள். அதிகமான தலைவர்கள் தவறாகவே வாழ்ந்து வருகிறார்கள். மக்களுக்கு முதலில் தலைவர்களைக் கண்டால் கோபம் அதிகமாகவே வருகிறது. தேர்தல் காலத்தில் வரும் வன்மம் முழுவதும் நீடிப்பது மிகத் தவறான செயல் ஆகும்.

**– ஆ.ர. அருணகிரி, ஆலாம்பாளையம்.**

**இ**ந்திய அரசியலில் புனிதமான இந்தச் சூழ்நிலையில் வெறுப்பு அரசியலை வெறுப்பதென்பது காலத்தின் கட்டாயம்! இத்தகைய கொடுமைக்கு இந்திய அரசியல் கட்சிகள் வெட்கப்படும் என நாம் எதிர்பார்ப்பது 'நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதற்குச்' சமம்!

**– இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

**வா**ரிசு அரசியலால் இந்தியாவில் அநாகரிக ஆட்சி நடந்ததும், நடப்பதும் கண்கூடு. குருவி தலையில் பனங்காயை வைத்தது போல, அனுபவமற்றவர்கள் மீது பொறுப்புகளைச் சுமத்தும்போது அழுத்தம் தாங்காமல் பிதுங்கி வரும் பேச்சுக்களெல்லாம் வெறும் பிதற்றல்களாக வெளிப்படுகின்றன. இந்த விஷயத்தில் திருந்த வேண்டியது மக்கள்தான்.

**– இரா. கல்யாணசுந்தரம், மதுரை.**

**மோ**டி ஆட்சி விவசாயிகளுக்கு எதிரான ஆட்சியாக உள்ளது. ஜனநாயகத் தன்மை மோடியிடம் கொஞ்சமும் இல்லை. மோடி தாடி வைத்த 'ஹிட்லர்' என்று எல்லோரும் கூறுகின்றனர். ஆண்டுக்கு 2 கோடிப் பேருக்கு வேலை என்றார், ஜி.எஸ்.டி.யால் இருக்கிற சிறு தொழில்களை இழுத்து மூடியது மட்டுமல்ல, வேலை இல்லாப்

பட்டதாரிகளைப் பக்கோடா விற்கச் சொல்கிறார். வெளிநாட்டில் பதுக்கிவைத்துள்ள கருப்புப்பணம் ஒழிக்கப்படும் என்றார். கடந்த ஆண்டு மட்டும் சுவிஸ் வங்கிகளில் ரூ. 7 ஆயிரம் கோடி கருப்புப் பணம் போடப்பட்டுள்ளது. ஆக, மோடி எல்லா வகையிலும் தோல்வி அடைந்துவிட்டார்.

**– பா. சீமான்பாரதி, வெள்ளானைக்கோட்டை.**

**இ**ந்தியாவில் நிலையான அரசு அமைய வேண்டும், மக்கள் பணிகள் தொய்வின்றி நடை பெற வேண்டும். ஊழலற்ற நேர்மையான தலைமை தேவை என்ற எண்ணம் இல்லை. எதிர்க்கட்சித் தலைவர்கள் ஒன்று சேர்ந்து பிரதமர் வேட்பாளரை அறிவிக்க முடியாமைக்குக் காரணம், அனைவருக்கும் தலைமைப் பதவிமீது ஆசை. இன்றைய தேவை திடமான அரசு. நேர்மையான தலைமை. மக்கள் தேர்வு செய்வார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது.

**– ப. அடைக்கலம், திருவில்லிப்புத்தூர்.**

**ப**ல ஆண்டுகளாகவே இந்திய அரசியலில் வெறுப்பு அரசியல் முறைதான் வளர்ந்து கொண்டு வருகின்றது. கொள்கைகளையும், திட்டங்களையும் பேசுவதை விடுத்து, எதிரணியினரின் செயல்களை விமர்சித்துக் குறைகூறி, தரம் தாழ்ந்து பேசுபவர்களே அதிகமாகிவிட்டனர். ஆளும் கட்சியாக இருந்தால் தாங்கள் என்னென்ன நன்மைகளைச் செய்யப்போகிறோம் என்றும், எதிர்க்கட்சியாக இருந்தால் தாங்கள் செய்த பணிகளைப் பற்றியும், நாட்டின் பிரச்சனைகளையும், அவற்றிற்கான தீர்வுகளையும் பேச முடிவெடுத்துச் செயல்படுத்தினால், வெறுப்பு அரசியல் மறைந்து ஆரோக்கியமான அரசியல் தோன்றும்.

**– வெ. பாண்டுரெங்கன், திருநின்றவூர்.**

**சு**யநலமில்லாது, பொதுநலம் கருதி, நாட்டிற்காகத் தன்னையே அர்ப்பணிப்பவர்கள்தான் இனி சனநாயகத்தைக் காப்பாற்றிட முடியும். இந்தியாவில் இனி ஆட்சி அமைப்பவர்கள் கூட்டணியாக அமைத்தாலும், மக்களுக்காகத் தன்னைச் சமர்ப்பணம் செய்பவராக இருந்து விட்டால், எல்லோரும் மகிழ்வர். அனைத்தும் வாக்களிக்கும் மக்களின் கைகளில்தான் உள்ளன. அப்படியாவது தூய மலராம் சனநாயக மலர் மலரட்டும். நாளும் நாம் நம்பிக்கை கொள்வோமாக.

**– சு. இலக்குமணசுவாமி, மதுரை.**

**ஜ**னநாயக அரசு முறையில் ஆண்ட அரசுத் தரப்பினர், எக்குறைபாடுகளால் ஆளுமை இழக்க நேரிட்டது என்பதை ஆய்வு செய்திடல் வேண்டும். ஆளும் தரப்போ எத்தகு குறைபாடுகளால் ஆளுமை இழக்க நேரிடும் என்பதைக் கருத்தில் – கவனத்தில் கொண்டு நேரிய முறையில், வரம்பு மீறாமல், சீரிய செயல்வினை புரியுமேயானால், மக்களும் நலம் பெறுவர். நாடும் நலம் பெறும். ஆக, இரு தரப்பினரும் காழ்ப்புணர்ச்சி இன்றிச் செயல்பட முன்வர வேண்டும்.

**– எஸ். ஜி. இசட்கான், திருப்பூர்.**

**இ**ந்தியாவில் தேர்தல் மூலம் ஜனநாயக ஆட்சி அமைவதென்பது அந்த ஆட்சி கூட்டாட்சித் தத்துவத்தைக் குலைக்கும் முயற்சிகளில் ஈடுபடாது, சொல் வேறு, செயல் வேறு என அமையாமல், சுதந்திரமாக இயங்க வேண்டிய தேர்தல் ஆணையம், சி.பி.ஐ., அமலாக்கப்பிரிவு, நீதிமன்றங்களில் தலையிடாத அரசு, எதிர்க்கட்சிகளை எந்த வழியிலேனும் பிரித்துச் சிதற வைக்காத அரசாக அமைதல் வேண்டும்.

**– அ. சம்பத், திருவரங்கம்.**

**மோ**டியிடம் சில குறைகள் உள்ளன. இவை தவிர்க்க முடியாதவை. காரணம், தேர்தல் அரசியல். கூட இருக்கும் சிலர் கறை படியாதவர்கள் அல்ல! கார்ப்பரேட்டுகளிடம் அவர்கள் கை நீட்டினால்தான் மோடி ஜெயிக்க முடியும். இந்த நாட்டில் நேர்மைக்கு மதிப்பு வர வேண்டும் என்றால், ‘உச்சநீதிமன்றத் தீர்ப்பு பாதகமாக வந்தால் குறை கூறுவதும், சாதகமாக வந்தால் பாராட்டுவதுமான சராசரிகளுக்கு வேட்டுவைக்க வேண்டும்.’

**– சீத்தலைச் சாத்தன், திருப்பத்தூர்.**

**அ**ரசியல் ஒரு சாக்கடை என்றார் தத்துவஞானி ஒருவர். அரசியலில் வெறி கூடாது என்றார் ஒரு படைப்புக் கர்த்தா. அவர்களின் கருத்து இன்று அரங்கேறுகிறதோ என்ற அச்சம் வருகிறது. ஒருவரை ஒருவர் வன்மத்தோடு திட்டிக்

*அட்டைப்பட விளக்கம் :*

## *யாழ்ப்பாணம் நல்லூர் கந்தசாமி திருக்கோவில்*




***யா**ழ்ப்பாணத்தில் உள்ள நல்லூர் கந்தசாமி திருக்கோவில், புகழ் பெற்ற முருகன் ஆலயம். அங்கே வழிபாடு செய்யப்படுவது முருகப்பெருமானின் விக்கிரகத்திற்கு அல்ல. முருகனின் வேல் தான் அங்கு பக்தர்களின் தரிசனத்திற்குக் காட்டப்படுகிறது, அர்ச்சிக்கப்படுகிறது. யாழ்ப்பாணத்தில் பல கோவில்களில் வேல் வழிபாடுதான். வீரத்திற்கு அடையாளமாக இந்த வேல் வழிபாடு அமைந்துள்ளது. அந்த வீரம் தமிழ் இனத்தைக் காக்கும் வீரம் என்றால் தவறில்லை – இன்றைக்கும், நாளைக்கும்!*

– இ.ஆர்.

கொள்வதும், வாரிசு அரசியலை முன்னெடுப்பதும் நல்ல ஜனநாயகத்தைக் கட்டமைக்காது. அரசியலாளர்கள் ஆக்கப்பூர்வமான, மக்கள் நலனில் அக்கறை வைத்து, அதர்மம் தொலைத்து, தூய நிர்வாகத்தைப் புனரமைக்க வேண்டியது காலத்தின் கட்டாயம்.

**– நவீன்குமார், நடுவிக்கோட்டை.**

**தே**ர்தலில் அதர்மம் செய்பவர்கள் ஆட்சிக்கு வரமாட்டார்கள். நீதி தேவதை நிலைத்து நிற்கவிட மாட்டாள். தேர்தலில் அதர்மம். ஆட்சியில் அடங்கி விடும். அதர்மவாதிகளுக்கு மக்களின் எண்ண அலைகள் மனமாற்றத்தைத் தந்துவிடும். மக்களின் கோபம் அதர்மவாதிகளை அடக்கிவிடும்.

**– ஏ.டி. சுந்தரம், சென்னிமலை.**

**வி**வாதக் கட்டுரையில் வந்ததைப்போல, புனித, தார்மீக நெறி அரசியலில் இல்லை. அரசியலில் ஒரு சிலர் தனது பணபலம், சாதிபலம், அடாவடி என வெறுப்புணர்ச்சிகளுக்கு ஆளாகி மக்களைப் பயமுறுத்தி வந்ததால், இந்தத் துரதிருஷ்ட நிலை நமது இந்தியாவிற்கு வந்துவிட்டது. வெறுப்பு அரசியலை அறவே நீக்கிட, மக்களை விடத் தலைவர்களாலே மட்டும் முடியும். நிலை மாறாத பொழுது பத்திரிகைகள், ஊடகங்கள், அதைவிடத் தீர்ப்புகளை நீதிமன்றங்கள் பாடங்களாக நமக்கு அறிவுறுத்துகின்றன. மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு. இதுவரை பொய்த்ததில்லை. இனியும் பொய்க்காது.

**– யு. முத்துக்கிருஷ்ணன், தாராபுரம்.**

**இ**ந்தியா விடுதலை பெற்ற ஆரம்பக் காலத்தில், ஜனநாயகத்திற்கு மதிப்பளித்து, ஜனநாயகத்திற்கு ஊறு ஏற்படாதவாறு பார்த்துக்கொண்ட பெருமை, அன்றைய தேசப்பற்றுக் கொண்ட ஆட்சித் தலைவர்களுக்கு இருந்தது. உச்சநீதிமன்றத் தீர்ப்புப் பாதகமாக வழங்கப்படும்போது உடனே தீர்ப்பைக் குறை கூறுவதும், சாதகமாக வரும்போது பாராட்டுவதும் தன்னல அரசியலின் நியாயமான போக்காகச் சித்தரிக்கப்படுவதையே குஜராத் தேர்தல் நடவடிக்கைகளிலும், கர்நாடகத் தேர்தல் நடவடிக்கைகளிலும் அணுகிப் பார்க்கும்போது நியாயமும், தர்மமும் அடிபட்டுப் போவதைத் தெளிவாகவே உணர முடிகிறது. ஜனநாயகம் பொதுவாக்கப்பட்டு அரசியல் நடவடிக்கைகள் விருப்பு, வெறுப்பின்றி நடுநிலை தவறாது செயல்படும்போதுதான் ஜனநாயகத்தில் வெறுப்பு அரசியலுக்கு இடமில்லாமல் போகும்.

**– வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி, வரட்டணப்பள்ளி.**

**ம**க்களுக்குத் தொண்டு செய்பவர்கள் தன்னலம் கருதாமல், பதவி ஆசையில்லாமல் செயல்பட வேண்டும். இதில் சாதி, மதம் பற்றிய தகவல்களைக் கூறி மக்களைக் குழப்பக்கூடாது. பொதுத் தேர்தல் நடந்தால், மக்களுக்குத் தொண்டு செய்பவர்களைப் பற்றிச் சிந்தித்துத்தான் வாக்களிப்பார்கள். இதில் எந்த வேறுபாடும் இன்றிச் செயல்படுவதுதான் முறை. இதனை வெறுப்பு அரசியலாகக் கருதக்கூடாது.

**– இரா. தியாகராசன், இலால்குடி.**

**வெ**றுப்பு அரசியலை வெறுக்க வேண்டும் என்பதில் எந்தவிதமான கருத்து வேறுபாடும் இல்லை. ஆனால், வெறுப்பு அரசியலையே ஆதாரமாக வைத்துக்கொண்டு இருக்கும், இயங்கும் மதவாதக் கட்சிகளின் ஆதரவோடு இயங்கும் மோடி

அரசால் எப்படி இதைக் கட்டுப்படுத்துவதற்கு முய லும்? மக்களைப் பிரித்து ஆளும் முறையைத்தான் எல்லாக் கட்சிகளும் செய்கின்றன. அமேசான் காட்டில் வாழும் வனவாசிக்கும், ஈரோடு நகர வாசிக்கும் என்னென்ன ஒற்றுமைகள் உண்டு? அவர்கள் இருவரும் மனிதர்கள் என்பதுதான் ஒற்றுமை. ஆனால், வேற்றுமைகள் ஏராளம்.

அமேசான்வாசியும், நீங்களும் ஒற்றுமையாக வாழ வேண்டும் என்று சொல்லும் அரசியல் வாதிகள் எத்தனை பேர்? பகுப்பது சுலபம், தொகுப்பது மிகமிகக் கடினம். ஆகவேதான், எல்லாக் கட்சி, மத, சாதி அமைப்புகளும் பகுத்துப் பிரித்துத் தங்களைப் பலப்படுத்திக் கொள்வதை யேதான் செய்கிறார்கள். இன்றைய பா.ஜ.க. அரசு போன்ற வெறுப்பு அரசினைக் களைய, பிற கட்சித் தலைவர்கள் இணைவது இன்றியமையாதது. இந்தியா எதிர்காலத்தில் சிதறுண்டு போகாமல் இருப்பதற்கு இந்தக் கூட்டுக்கலவை மிகமிக அவசியம்.

**– ம.பெ. சுதந்திரகுமார், சென்னை.**

**கு**ஜராத் மற்றும் கர்நாடக மாநிலங்களில் நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலின்போது திரு. நரேந்திரமோடி அவர்களின் நிலைப்பாட்டை மட் டும் அடிப்படையாகக் கொண்டு அவரைப் பாராட் டுவது ஏற்புடையதன்று. சில பல நிகழ்வுகளில் அவரின் செயல்பாடு பாரபட்சமாக இருந்துள்ளது. அரசியல்வாதிகளில் நடுநிலையுடன், எந்நிலை யிலும் தடம் புரளாமல் நேர்மையாகப் பாரபட்ச மின்றி நடந்து கொண்டதற்கான சுவடு இதுவரை இருந்ததில்லை என்பதுதான் நிதர்சனம். வாரிசு அரசியலில் தவறேதுமில்லை. கட்சி என்பது தங் களால் அங்கீகரிக்கப்பட்ட கொள்கைகளின் மூலம் நாட்டு நலனைப் பெருக்குவதற்குக் கூட்டு முயற்சி மேற்கொள்பவர்களின் தொகுப்புதானே!

**– உ.மு.ந. ராசன் கலாமணி,**
**கோபிசெட்டிபாளையம்.**

**ந**ம்நாட்டு அரசியல்வாதிகள், நம் நாடு ஒரு ஜனநாயக நாடு என்பதை உணர்ந்து கொள்ள




GOVT.REG.NO. : 571/2007

சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோவில் ஆடி திருவிழா

திருச்சிற்றம்பலம் அன்னதான அறக்கட்டளை

அனைவரும் சாப்பிட வாருங்கள் தினமும் மதியம் அன்னதானம்

ஆடி அமாவாசை சிறப்பு அன்னதானம் செய்திடுவீர்

11.08.2018 ஆடி 26 சனிக்கிழமை ஆடி அமாவாசையை முன்னிட்டு பிதுர்களின் ஆசி வேண்டி சகல தோஷங்கள் நிவர்த்தி ஆக சங்கல்பம் செய்து வடை, பாயசத்துடன் சிறப்பு அன்னதானம் செய்திடுவீர்கள். இதற்கான பிதுர்களின் திதி தேதி, மாதம், நட்சத்திரம் அப்பாவழி, அம்மாவழி முறையாக எழுதி அனுப்புங்கள் முடிந்த நன்கொடையை செலுத்தி இதன் சிறந்த பலன்களை அடைய அன்போடு அழைக்கின்றோம்.

இந்த அரிய பெரிய வாய்ப்பினை தவறவிடாமல் உடன் ஆவண செய்ய வேண்டுகிறோம்.

மேற்படி தினங்கள் 1000 நபர்களுக்கு வடை பாயாசத்துடன் சிறப்பு அன்னதானம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இதற்கு தாங்களால் முடிந்த தர்மத்தை செய்து இதன் சிறந்த பலன்களை அடைய அன்போடு அழைக்கின்றோம்.

1000 பக்தர்களுக்கு அன்னதானம் வழங்க ரூ. 50000/-
100 பக்தர்களுக்கு அன்னதானம் வழங்க ரூ. 5000/-
10 பக்தர்களுக்கு அன்னதானம் வழங்க ரூ. 500/-

இதற்கான ரசீது அட்சதை ஆசீர்வாத பிரசாதங்கள் உடன் முறையாக அனுப்பி வைக்கப்படும். 80G Pancard நகல் அனுப்பி வைக்கப்படும். நன்கொடைகளை M.O. DD, Online Transaction, CC Avenue மூலமாகவும் செய்யலாம். தொடர்பு கொள்ளவும்.

ப்ரம்மஸ்ரீ. சி. நவதாண்டவ தீஷிதர்

நெ.10/22, கீழ சன்னதி சிதம்பரம் - 608 001. செல் : 93455 12976, 93645 83178

E-mail : santhansubramani1969@yahoo.com anandhancdm2015@gmail.com

Website : www.thiruchitrambalam.org Whatsapp : 93455 12976

Current Account Name : Thiruchitrambalam Annadhana Arakkattalai.

( Bank : SBI, Cdm Branch, A/c No. 30263863248, IFSC Code : SBIN0000823



வேண்டும். இந்தியாவில் இன்று நம்மை ஆண்டு கொண்டிருப்பது ஜனநாயக அரசியல் அல்ல, சாதி அரசியல்தான் நம்மை ஆண்டு கொண்டிருக் கிறது. சாதி மற்றும் மதங்களின் பெயரால் கட்சி நடத்துவது, சாதி அடிப்படையில் தேர்தல்களில் வேட்பாளரை நிறுத்துவது முதலிய ஜனநாயக விரோதத் தன்மையைத் தடை செய்ய வேண்டும். ஊழல் இல்லாத அரசாங்கம் உருவாக 'லோக்பால்' அமைப்பை அரசாங்கம் உருவாக்க வேண்டும்.

**– நன்னிலம் இளங்கோவன், மயிலாடுதுறை.**

**ம**க்கள் தனிப்பட்ட தலைவர்களின் பெயர் களிலேயே நம்பிக்கை வைத்து வாக்களிக் கிறார்கள். மக்கள் மோடியின்மீது நம்பிக்கை வைத்தால், அவரை மீண்டும் தேர்ந்தெடுக்கலாம். அவருடைய அரசியல் வாழ்வில் ஒரு சிறு தவறு நேர்ந்தால்கூட, அவர் மீண்டும் வெற்றிபெற முடி யாது என்பதைக் காலம்தான் தீர்மானிக்கும். ஆட்சி அமைக்க எண்ணிக்கையே தேவைப்படு வதால் கூட்டணி தர்மத்தைப் பற்றியெல்லாம் பேச முடியாது. மக்கள் அவ்வளவு சீக்கிரம் ஜனநாயகத் தூண்களைச் சரியவிட மாட்டார்கள் என்பது உறுதி.

**– என். பிச்சைமணி, பொள்ளாச்சி.**

**வா**ழ்ந்தாலும் பேசும், வீழ்ந்தாலும் ஏசும் இந்தச் சமூகத்தில் அரசியல்வாதிகளின் நிலைமை சங்கடமான ஒன்றுதான். நம் இந்திய தேசத்திற்கு இப்பொழுது தேவை ஒரு தன்னலம் கருதாது, தேச நலன் கருதும் ஓர் இந்தியக் குடிமகன். பரம்பரைப் பெருமை இல்லாத, தன் னலம் கருதாத ஒரு குடிமகன் நம் நாட்டை ஆள வேண்டும் என்பதுதான் இப்பொழுது மக்களின் ஆசை, எதிர்பார்ப்பு.

**– உஷா முத்துராமன், திருநகர்.**

**ரா**குல்காந்தி அவர்கள் மோடியைப் பற்றிக் கூறிய அவதார வார்த்தைகளை ஏற்றுக்கொள்ள முடியாது. காரணம், லஞ்சத்தை இந்தியாவில் வளர்த்து விட்டார்கள். ஆலமரம் போல் விழுதுகள், வேர்கள் உண்டாகிவிட்டன. ராகுல்காந்தியே ஆட்சியில் அமர்ந்தாலும், லஞ்சத்தை ஒழிக்கவே முடியாது. இது முழு உண்மை. இதற்கு முன் ஆட் சியில் உட்கார்ந்த பிரதமர்கள் லஞ்சத்தை ஒழிக்க முடிந்ததா? சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆளும் கட்சிக்கு எதிரான கருத்துக்களை, எதிர்க் கட்சி கள் வெறுப்பு அரசியலைக் கூறத்தான் செய்வார் கள். அதனைச் சட்டரீதியான முறையில் எதிர்ப் பதே ஜனநாயகக் கொள்கை. மக்கள் தீர்ப்பே, மகேசன் தீர்ப்பு. இதுவே இறுதி முடிவு ஆகும்.

**– லிங்கம் சின்னசாமி, தாராபுரம்.**

**இ**ன்றைய அரசியல்வாதிகள் வாக்கு வங்கி அரசியல்தான் நடத்துகிறார்கள். தங்கள் கட்சி களை வளர்ப்பதுவும், ஆட்சியைப் பிடிக்கும் செயல் களைச் செய்வதுவும் தவறில்லை. அது ஆக்கப் பூர்வமான வழிகளில் இருக்க வேண்டும். ஆளும் கட்சி நிறைவேற்றும் நல்ல திட்டங்களைக்கூட எதிர்க்கக்கூடிய நிலையில்தான் இன்றைய எதிர்க் கட்சிகள் இருக்கின்றன. நல்லது செய்யும் ஆளும் கட்சித் திட்டங்களை வரவேற்றால், தங்கள் அரசியல் செல்வாக்குச் சரிந்துவிடும் என்று எதிர்க்கட்சியும், தவறுகளைச் சுட்டிக்காட்டும் பொழுது அதை ஏற்றுத் திருத்திக்கொண்டால் ஆளும் திறமைக்கு இழுக்கு என்று ஆளும் கட்சியும் நினைப்பதுதான் வெறுப்பு அரசியல். இரு வருக்கும் பொது நோக்கு நாடு, மக்களின் மேன்மை என்பதாக இருந்தால், வெறுப்பு அரசிய லுக்கு இடமில்லை.

**– புலவர் கருமலைத்தமிழாழன், ஒசூர்.**

**ஜ**னநாயகத்தில் ஆளும் கட்சியும், எதிர்க் கட்சியும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போன்றவை. இன்றைய ஆளுங்கட்சி, நாளைய எதிர்க்கட்சியாகி விடலாம். இன்றைய எதிர்க்கட்சி நாளைய ஆளுங்கட்சியாகிவிடலாம். எனவே, கட்சிகள் மாற்றாந்தாய் மனப்பான்மையோடு செயல்படுதல் அவற்றிற்கு மட்டுமல்ல, நாட்டிற்கும் நற்பயன்களைத் தராது. நாட்டின் நலத்திற்குத் தீங்கு செய்வோரை ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி ஆகிய இரண்டுமே ஒன்றுபட்டு இரட்டைக்குழல் துப்பாக்கியாக இருந்து அகற்ற முனைய வேண் டுமேயன்றி, ஒருவருக்கொருவர் குடுமிப்பிடிச் சண்டை போட்டுக் கொள்வது நாட்டின் நலத்தை யும், பெருமையையும் காற்றோடு பறக்க விடுவ தற்கு ஒப்பானதேயாகும்.

**– மேலை. தமிழ்க்குமரன், முத்தரசநல்லூர்.**

கட்டுரை

# ஆடிப் பெருக்கு

நம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை ஆனி மாதம் பிறந்தவுடன் சாரல் காலம் தொடங்கிவிடுகிறது. ஆடி மாதத்தில் மழை பெய்து நீர்நிலைகள் நிரம்பி விடுகின்றன. ஆறுகளில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும். இக்காலம் தென் மேற்குப் பருவக் காலம். எனவே நீர்ப் பிடிப்புப் பகுதிகளில் பெய்யும் மழையால் ஆறுகளில் "புதுப்புனல்" பொங்கி வரும்.

பெருக்கெடுத்து ஓடுவது பெருக்கு எனப்படும். இதனை "ஆற்றுப் பெருக்கு" என்றும் கூறுவார்கள். இந்தக் கால கட்டத்தில் உழவர்கள், பட்டம் பார்த்து, விதை விதைப்பார்கள். இந்த ஆடி மாதத்தில் நெல், கரும்பு முதலியவற்றை விதைத்தால்தான், விவசாயிகள் தை மாதத்தில் அறுவடை செய்ய முடியும். அதற்கு வற்றாத நதிகளைத் தங்கள் கடவுளாகப் போற்றி மகிழ்ந்து, பூஜைகள் செய்து பின் உழவு வேலைகளைத் தொடங்குவார்கள். இதனடிப் படையிலேயே "ஆடிப்பட்டம் தேடி விதை" என்ற பழமொழி வந்தது.



சபரிமலை ஐயப்பன் கோவிலில் 18 படிக்கட்டுகள் உண்டு. அதுபோல ஆறுகளின் கரைகளில் கட்டப்பட்டுள்ள படித்துறைகளில் பதினெட்டுப் படிகளை அமைப்பார்கள். "ஆடிப் பெருக்கு" என்பது ஆடி மாதம் 18–ஆம் நாளைக் குறிக்கும். இதனைப் "பதினெட்டாம் பெருக்கு" என்பார்கள். அன்னை ஆதிபராசக்தி அருளால் வருவதே நதிகளில் காணப்படும் வெள்ளப் பெருக்கு. ஆறுகளின் புனிதத் தன்மையைக் கருதியே கங்கை, யமுனை, கோதாவரி, காவிரி என்று பெண்களின் பெயரையே நதிகளுக்கு வைத்திருக்கிறார்கள்.

**விழாக் கொண்டாடும் முறை:** பெண்கள் ஆடிப்பெருக்கு அன்று நதிகளுக்குச் சென்று நீராடுவார்கள். பின் நதிகளைப் பெண்ணாக மதித்து, வலையல்கள் குலுங்க பூஜை நடத்தி, நதிக்குப் பெருமை சேர்ப்பார்கள்.

**பூஜைக்குரிய பொருட்கள் :** வெற்றிலை, பாக்கு, மஞ்சள், பூ, கருகமணி, அரிசி, வெல்லம், முளைப்பாரி முதலியன. இந்த மங்கலப் பொருட்களை வைத்துப் பூஜை செய்து, பின்னர் ஆற்றில் விடுவார்கள்.

எஸ்.கோவிந்தராஜன்

**வழிபாடுகளும் வேண்டுதல்களும் :** நிலமும் நீரும் சேர்ந்த இடங்களில், பூமித் தாய்க்குச் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும். தானிய அபிவிருத்தியை அருளும் அம்பிகையைப் பெண்கள் வம்ச விருத்திக்காக வேண்டி வழிபாடுகளை நடத்துவர். குலம் விளங்க, நல் வாரிசுகள் அமைய அம்பிகையை மனம் உருகிப் பிரார்த்தனை செய்வார்கள். கன்னிப் பெண்களுக்கு விரைவில் திருமணம் நடக்கவும், அம்பிகையை வேண்டிக் கொண்டு மஞ்சள் கயிற்றை அளிப்பார்கள்.

**காவிரிக் கரை :** ஆடிப்பெருக்கு அன்று காவிரியில் வெள்ளம் கரை புரண்டு ஓடும். ஆகையால் அங்கு ஆடிப்பெருக்கைச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். காவிரிக் கரையோரப் பகுதியில் குடும்பப் பெண்களும், புதுமணத் தம்பதிகளும் கூடி, புனித நீராடி சாமி தரிசனம் செய்வார்கள். திருச்சி அம்மா மண்டபம், படித்துறை முதலிய இடங்களில் காவிரித் தாய்க்குச் சிறப்பு வழிபாடு நடைபெறும். மங்கல மங்கையர் தங்களது தாலி பாக்கியம் நிலைக்க, புது மஞ்சள் கயிற்றைக் கட்டிக் கொள்வார்கள்.

டெல்டா மாவட்டங்களில் உயிர் நாடியாக விளங்கும் காவிரித் தாயை, ஆடிப்பெருக்குத் தினத்தன்று வணங்கி வழிபடுவது, காலங்காலமாக நடைபெற்று வருகிறது. மேலும் திருப்பூர், கோவை, மேட்டூர், குளித்தலை, திருச்சி, பூம்புகார் முதலிய இடங்களில் காவிரிக்குச் சீர் கொடுக்கும் நிகழ்ச்சியும் நடக்கும்.

அடிப் பெருக்கன்று முளைப்பாரி, கருகமணி, வெற்றிலை, பாக்கு, அரிசி, வெல்லம் வைத்துப் பெண்கள் ஒருவருக்கொருவர் மஞ்சள் கயிறு அணிந்து வாழ்வு சிறக்க வேண்டிக் கொள்வர். ஆறுகள் இல்லாத பகுதிகளில் வாய்க்கால்கள், கிணறுகள், அடிப்பம்புகள் முதலியவற்றில் மங்களப் பொருட்களை வைத்து மக்கள் வழிபாடு நடத்துவர். ஒகேனக்கல் நீர்வீழ்ச்சி முதல் காவிரி சங்கமிக்கும் பூம்புகார் வரை ஆடிப் பதினெட்டாம் பெருக்கு வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

**நம்பெருமாள் புறப்பாடு :** இந்நாளில் ஸ்ரீரங்கம் கோவிலிலிருந்து உற்சவர் நம்பெருமாள் புறப்பாடாகி, அம்மா மண்டபம் படித்துறைக்கு எழுந்தருள்வார். அங்குப் பெருமாளுக்குத் திருமஞ்சனம் நடக்கும். மாலைவரை, பெருமாள் அங்கு வீற்றிருப்பார். பெருமாளின் சீதனமாகப் புடவை, தாலி மற்றும் மங்கலப் பொருட்கள் ஆற்றில் விடப்படும்.

**சித்ரான்னம் :** மாலையில் பலவிதமான சாதங்களைத் தயார் செய்து நதிக்கு நிவேதனம் செய்வார்கள். பின் உற்றார் உறவினர்களுடன் நதிக்கரையில் அமர்ந்து அந்த உணவுப் பொருட்களைக் களிப்புடன் உண்பார்கள்.

**தமிழர்களின் பண்பு :** தங்கள் வாழ்வுக்கு எவை எல்லாம் காரணமாக இருக்கின்றனவோ, அவற்றிற்கு எல்லாம் மரியாதை செய்வது, தமிழர்களின் பண்பு. அதனால்தான் நதி வழிபாடு செய்து தங்களது நன்றியைத் தெரிவிக்கிறார்கள். ●







‘சிலம்புச் செல்வர்’

# ம.பொ. சிவஞானம்

## விருது விழா அழைப்பிதழ்

4 ஆம் ஆண்டு

இடம் : ‘பாரதி அரங்கம்’ **காந்தியடிகள் கல்வி நிறுவனம்,**
**மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி,** காந்தியடிகள் தமிழ்ப் பண்பாட்டு மையம்,
தடாகம் சாலை, இடையபாளையம், கோவை – 25.

**நாள் : 15.08.2018**
**புதன்கிழமை**
**மாலை : 5.30 மணி**



‘சிலம்புச் செல்வர்’ ம.பொ.சி. விருது பெறுவோர்

**முனைவர் திருப்பூர் கிருஷ்ணன்** அவர்கள்

ஆசிரியர் : ‘அமுதசுரபி’ மாத இதழ்

தலைமை :

**கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம்** அவர்கள்

சிறப்புரை : “விடுதலைப் போரில் தமிழகம்”

**கவிஞர் பெ. சிதம்பரநாதன்** அவர்கள்

ஆசிரியர் : ‘ஓம் சக்தி’ மாத இதழ்

ஏற்புரை :

**முனைவர் திருப்பூர் கிருஷ்ணன்** அவர்கள்

‘**சிலம்புச் செல்வரின் காலத்தை வென்ற கவிஞன்**’ நூல் வெளியீடு

வெளியிடுபவர் : **திரு. வி.பி. கண்ணப்ப கோபாலகிருஷ்ணன்** அவர்கள்

பெற்றுக் கொள்பவர் : **முனைவர் பா. கோவிந்தராசன்,** டி.ஐ.ஜி., அவர்கள்

மேனாள் சிறைத்துறை துணைத் தலைவர்

## அனைவரும் வருக... வருக... என அழைப்போர்

| | | |
|---|---|---|
| **கே.ஏ. சுப்பிரமணியன்**<br>தலைவர் | **கவிஞர் புவியரசு**<br>நெறியாளர் | **ஆர். சண்முகசுந்தரம்**<br>செயலாளர் |

கட்டுரை

ம. வெங்கடேசன்

# இந்திய அரசியல் சாசனச் சிற்பி

அரசியல் அமைப்பு வரைவுக்குழு, இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தை ஒப்படைத்த நாள் 1950, நவம்பர் 26. அந்த நாளை டாக்டர் அம்பேத்கருக்குத் தற்போதைய நரேந்திரமோடி தலைமையிலான பா.ஜ.க. அரசு அர்ப்பணித்துப் பல நிகழ்வுகளை நடத்தியுள்ளது.

இதனைக் காங்கிரஸ் உள்ளிட்ட சில கட்சிகள் விமர்சித்துள்ளன. அரசியலமைப்புச் சட்டத்தை வடிவமைத்தவர் டாக்டர் அம்பேத்கர் மட்டுமே அல்ல. அதில் பெரும் பங்கு கொண்ட ஜவஹர்லால் நேருவின் பங்கை பா.ஜ.க. மூடி மறைக்கிறது என்று காங்கிரஸ் குற்றம் சாட்டியது. இதில் துளியும் உண்மையில்லை. இந்த விமர்சனத்தை நேருவே கூட இப்போது இருந்திருந்தால் விரும்பியிருக்க மாட்டார்.


டாக்டர் அம்பேத்கர்

உண்மையில் அப்போது நடந்தது என்ன? சில சரித்திரப் பக்கங்களைப் புரட்டினால், இந்திய அரசியல் சாசனத்தின் சிற்பி யார் என்பது தெள்ளத் தெளிவாக விளங்கும். அதுவே இக்கட்டுரையின் நோக்கம்.

சுதந்திர இந்தியாவுக்கெனத் தனித்த அரசியல் சாசனம் வடிவமைக்கப்பட வேண்டும் என்ற சிந்தனை எழுந்தவுடன், மூத்த காங்கிரஸ் தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத் அரசியல் சாசன சபையின் தலைவராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1946 டிசம்பர் 13 அன்று அரசியல் சாசன சபையில் ஒரு தீர்மானத்தை முன்மொழிந்து இப்பணியை அவர் ஆரம்பித்து வைத்தார். இதில் டிசம்பர் 17–இல் டாக்டர் அம்பேத்கர் தனது முதல் கன்னிப்பேச்சைச் சாதாரண உறுப்பினராகவே தொடங்கினார்.

டிசம்பர் 1946–லிருந்து ஜூன் 1947 வரை அரசியல் சாசன சபையில் அரசியல் சாசனத்தை வரைவதிலும், பல குழுக் கூட்டங்களிலும் டாக்டர் அம்பேத்கரின் தலைசிறந்த பங்களிப்பைப் பல மூத்த தலைவர்கள் கண்கூடாகக் கண்டனர். டாக்டர் அம்பேத்கர் அரசியல் சாசன சபையில் ஏறத்தாழ அனைத்து முக்கியக் குழுக்களிலும், அவரது அறிவுத் திறனையும் பங்களிப்பையும் பிறர் உணர்ந்திருந்த காரணத்தால் உறுப்பினராகச் சேர்க்கப்பட்டார்.

பின்பு டாக்டர் ராஜேந்திர பிரசாத் அவர்களுக்கு உதவ ஒரு பரந்த ஆலோசனைக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக்

குழுவுக்கு சர்தார் வல்லபபாய் படேல் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதிலும் உறுப்பினராக டாக்டர் அம்பேத்கர் இருந்தார். பல்வேறு சூழ் நிலைகளில் குழுவின் தலைவர் சர்தார் வல்லபபாய் படேலும் மூத்த தலைவர் ராஜாஜியும் அம்பேத்கரின் கருத்துக் களை வரவேற்றுப் பாராட்டினார்கள்.

அதேசமயம், இடைக்கால அரசின் தலைவராக இருந்த ஜவஹர்லால் நேரு தலைமையில் ஐக்கிய அரசியல் சாச னக்குழு அமைக்கப்பட்டது. நேரு இக் கூட்டத்திற்கு வர இயலாதபோது தற் காலிகத் தலைவராக டாக்டர் அம்பேத் கர் தேர்ந்தெடுக்கப்பட்ட நிகழ்வு களும் உண்டு.

இதற்கிடையே அரசியல் சாசன சபையின் உறுப்பினர் பதவியை டாக்டர் அம்பேத்கர் இழந்துவிட்டார். டாக்டர் அம்பேத்கர் இல்லாத நிலை யில், சாசன சபையின் பணிகளுக்கு நெருக்கடி ஏற்பட்டது. சபையின் வேலைகள் அனைத்திற்கும் பின் னடைவு ஏற்பட்டது. இதை உணர்ந்த ராஜேந்திர பிரசாத், சர்தார் வல்லபபாய் படேல் மும்பையில் முதல்வராக இருந்த திரு. பி.ஜி.கேர் என்பவருக்குக் கடிதம் எழுதி, 'டாக்டர் அம்பேத்கரைத் தேர்ந் தெடுக்க வழி செய்ய முயற்சி செய் யுங்கள்' என்று எழுதினர்.

ஒரு காலத்தில் காங்கிரசையே எதிர்த்துப் போராடிய டாக்டர் அம்பேத்கரின் சேவை சாசன சபைக்கு எவ்வளவு இன்றியமையாததாக இருந்தது என்பதை மாபெரும் காங் கிரஸ் தலைவர்களே உணர்ந் திருந்தனர் என்பதை, இக் கடிதங்கள் நமக்கு உணர்த்தும். மீண்டும் டாக்டர் அம்பேத்கர் சபை யின் உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப் பட்டார்.

இதற்கிடையே, இந்திய அரசியல் சாசனம் வரைய சரியான ஒருவர் கிடைக்கவில்லையென காந்தியிடம் கூறி, பல நாடுகளுக்குச் சாசனங்களை வரைந்த சர் ஐவர் ஜென்னிங்ஸை அழைக்கப் பிரதமர் நேரு அனுமதி கோரினார். காந்திஜி இதற்கு மறுப்புத் தெரிவித்து, டாக்டர் அம்பேத்கர் பெயரைப் பரிந்துரைத்தார்.

மேலும் டாக்டர் அம்பேத்கரை அமைச்சரவையில் சேர்த்துக்கொள்ளு மாறு காந்திஜி கூறியபோது, தயக்கம் காட்டிய நேரு, டாக்டர் அம்பேத்கர் இந்திய விடுதலைப் போராட்டத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்தார் என்று கூறினார். ஆனால் காந்திஜியோ, 'டாக்டர் அம்பேத்கரின் திறமைகள், புதிய இந்தியாவை உருவாக்குவதற்குப் பயன்படுத்தப்பட வேண்டும்' என்று வலியுறுத்தினார்.

நேருவின் தயக்கத்துடனேயேதான்



## அம்பேத்கர் ஏன் ராஜினாமா செய்தார்?

**ச**ட்ட அமைச்சராக இருந்த அம்பேத்கர் 1947-இல் ஹிந்துமதச் சீர்திருத்த மசோதா ஒன்றைத் தாக்கல் செய்தார். அந்த மசோதா மூலம் டாக்டர் அம்பேத்கர் ஹிந்து மதத்தின் சனாதன தர்மத்தைக் கொச்சைப்படுத்திவிட்டதாக ஹிந்துசமயத் தீவிரவாதி களால் அவர்மீது குற்றம்சாட்டப்பட்டது.

அம்பேத்கர் காங்கிரஸ்காரர் அல்ல. காந்திஜி யால் சிபாரிசு செய்யப்பட்டு நேரு அமைச்சரவையில் சட்ட அமைச்சராக இடம்பெற்றவர். ஹிந்துமதச் சீர்திருத்த மசோதா பிரச்னையில் காங்கிரஸ் கட்சியும் அம்பேத்கரை எதிர்த்தது. பிரதமர் நேருவுக்குத் தர்ம சங்கடமான நிலைமை உருவானது. அதனால் இந்தச் சீர்திருத்த மசோதாவை 1952 தேர்தலுக்குப் பிறகு பரிசீலிக்கலாம். இப்போது வலியுறுத்த வேண்டா மென்றும் டாக்டர் அம்பேத்கரிடம் நேரு கூறினார். பிரதமரும் அம்பேத்கரை ஆதரிக்கவில்லை.

சட்ட அமைச்சராக இருந்து, இப்படியொரு மசோதாவைத் தாக்கல் செய்ய முடியாமல் பதவியில் நீடிக்க விரும்பாமல் தனது சட்ட அமைச்சர் பதவியை டாக்டர் அம்பேத்கர் ராஜினாமா செய்துவிட்டு வெளி யேறினார்.

டாக்டர் அம்பேத்கர் நாட்டின் முதல் சட்ட அமைச்சரானார். 1947 ஆகஸ்ட் 29–இல் அரசியல் சாசன சபை ஒரு குழுவை அமைத்தது. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், திரு. அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், திரு. என். கோபால்சாமி ஐயங்கார், திரு. கே.எம். முன்ஷி, திரு. சையது முகமது சாதுல்லா, சர்.பி.எல். மிட்டர், திரு. டி.பி. கைத்தான் – இவர்கள்தான் வரைவுக்குழுவினர். இக்குழுவிற்கு டாக்டர் அம்பேத்கர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தக் குழுதான் அரசியல் சாசன வரைவை முழுமையாகத் தயாரித்தது. டாக்டர் அம்பேத்கர் மிகக் கடுமையாகவே உழைத்தார்.



இந்திய அரசியல் சாசன சபை உறுப்பினர்கள்

அரசியல் சாசனம் வரைவதில் டாக்டர் அம்பேத்கரின் பணி எவ்வாறு இருந்தது என்பதை டி.டி. கிருஷ்ணமாச்சாரி எவ்வாறு பாராட்டினார் என்று பாருங்கள் :

“அரசியல் சாசனம் வரைவதில் டாக்டர் அம்பேத்கரின் ஆர்வத்தையும் கடுமையான உழைப்பையும் நான் அறிவேன். சபையால் வரைவுக் குழுவுக்கு அமர்த்தப்பட்ட எழுவரில், ஒருவர் பணியிலிருந்து நீங்கிவிட்டார். ஒருவர் காலமாகிவிட்டார். அந்த இடம் நிரப்பப்படவில்லை. இன்னொருவர் அமெரிக்கா சென்றுவிட்டார். மற்றொருவர் மாநில வேலைகளில் ஈடுபட்டிருந்தார். ஓரிருவர் தில்லியிலிருந்து தொலைவில் இருந்ததால், அவர்களுடைய உடல் நிலை காரணமாக வருகை தர இயலவில்லை. ஆதலால் அரசியல் சாசனம் வரையும் முழுப் பொறுப்பும் டாக்டர் அம்பேத்கரிடம் சென்றது. அவர் அக்கடமையைச் செவ்வனே செய்ததால், நாம் அவருக்கு நன்றியுடையவராகிறோம் எனக் கூறுவதில் எந்த ஐயமும் இல்லை”

– என்று கூறினார் தமிழகத்தைச் சேர்ந்த டி.டி. கிருஷ்ணமாச்சாரி. அந்த அளவுக்கு டாக்டர் அம்பேத்கரின் பணி நிகரற்றதாக இருந்தது.

1949 செப்டம்பர் 16 அன்று எல்லா ஷரத்துகளின் மீதும் நடைபெற்ற விவாதங்கள் முடிவடைந்தன. செப்டம்பர் 17 அன்று டாக்டர் அம்பேத்கர் ஒரு தீர்மானத்தை மொழிந்தார். அதன் மீதான விவாதம் 10 வாரங்களுக்கு நடைபெற்றது. இறுதியாக டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டிப் பேசிய உறுப்பினர்களின் பேச்சுக்களை ஆராய்ந்தால் டாக்டர் அம்பேத்கரின் பணி எவ்வளவு முக்கியமானது என்பது விளங்கும்.

**திரு. சேட் கோவிந்ததாஸ் :** “முதலில் இந்த அமைப்புச் சட்டத்திற்குச் சரியான வடிவத்தைக் கொடுப்பதற்குப் பாடுபட்ட டாக்டர் அம்பேத்கரைப் பாராட்ட விரும்புகிறேன். அவர் தனக்குத் தரப்பட்ட பணியை மிகத் திறமையாகச் செய்து முடித்திருக்கிறார்.”

**திரு. குலாதர் சாலிஹா :** “இந்த அற்புதமான அமைப்புச் சட்டத்தை எவ்வளவே இடர்ப்பாடுகளுக்கிடையில்

> **“ச**ட்ட அமைச்சர் எனும் முறையில் அதிகாரப் பூர்வமாகப் பாரத தேசத்தின் ஆட்சி மொழியாக சம்ஸ்கிருதம் இருக்க வேண்டும் என நான் பாராளு மன்றத்தில் வலியுறுத்தினேன். அதுவே சமுதாய ஏற்றத் தாழ்வுகளை அகற்றிடச் சிறந்த வழி.”
>
> – டாக்டர் அம்பேத்கர்

தயாரித்த வரைவுக் குழுவினரையும், எல்லாவற்றிற்கும் மேலாக இக்குழுவின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் அவர்களையும் வாழ்த்த நான் கடமைப்பட்டுள்ளேன்.”

**திரு. டி. பிரகாசம்** : “டாக்டர் அம்பேத்கர் ஒரு சட்ட மேதை. இவர் இங்கு செய்த பணியால் இங்கிலாந்து நாட்டின் அரசு வழக்குரைஞராக ஆவதற்கும் தகுதி பெற்றவர் என மெய்ப்பித்துள்ளார்.”

**திரு. எச். ஜே. காண்டேகர்** : “இந்த அமைப்புச் சட்டத்தை நான் ‘மகா சட்டம்’ என்று அழைக்கிறேன். ஏனென்றால், டாக்டர் அம்பேத்கர் ஒரு மகர். மனுநீதியை நாம் அகற்றிவிட்டு, மகர் நீதியைப் பெற்றுள்ளோம். மனுநீதியால் நாட்டிற்கு எந்தப் பயனும் இல்லை. மகர் நீதியால் இந்த நாட்டை ஒரு சொர்க்க பூமியாக ஆக்குவோம்.”

**திரு. மக்பூப் அலி பேக்** : “இந்த அமைப்புச் சட்டத்தை மிகத் திறமையோடு வடிவமைத்த டாக்டர் அம்பேத்கர் அவர்களை நான் பாராட்டுகிறேன். அமைப்புச் சட்டத்தின் நுணுக்கங்களைப் பற்றியும், குறிப்பாக நிதித்துறை சம்பந்தமாகவும் அவருக்கு இருக்கின்ற அறிவு, அவரது பேச்சுத் திறன் ஆகியவையெல்லாம் அற்புதமானவை. முழுமையானவையும்கூட.”

**திரு. எஸ். நாகப்பா** : “இந்த அருஞ்செயலின் மூலம் பட்டியல் வகுப்பைச் சார்ந்தவர்கள் திறமையற்றவர்கள் என்கிற மாசு துடைக்கப்பட்டுவிட்டது. அத்துடன் அல்லாமல் வாய்ப்புகள் கிடைக்குமேயானால், மற்றவர்களை மிஞ்சவும் முடியும் என்பதும் தெளிவாகத் தெரிந்துவிட்டது. இதற்காக நான் டாக்டர் அம்பேத்கர் அவர்களைப் பாராட்டுகிறேன்.”

**திரு. ஜஸ்பத்ராய் கபூர்** : “டாக்டர் அம்பேத்கர் இந்தச் சபையில் ஆற்றிய முதல் உரை, அதற்குப் பிறகு பல நேரங்களில் ஏற்பட்ட சிக்கல்களைத் திறமையுடன் இவர் நீக்கிய முறை, அமைப்புச் சட்டத்துக்காக இவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் ஆகியவற்றைப் பார்க்கின்றபோது, டாக்டர் அம்பேத்கர் மிகச்சிறந்த தேசபக்தர் என நான் கூறுவேன்.”

**திரு. சியாமாநந்தன் சகாயா** : “நம் நாட்டின் விடுதலையை மகாத்மா காந்தி பெற்றுத் தந்தார். அதனுடைய அமைப்புச் சட்டத்தை, மகாத்மாவைக் கடுமையாக விமர்சித்த சட்டமேதையான டாக்டர் அம்பேத்கர் உருவாக்கியுள்ளார். இவரை நம்முடைய சாசன சபை மட்டுமல்லாமல், நம்முடைய நாடே பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.”

**திரு. கோபால் நாராயண்** : “இவர் வடிவமைத்த இந்த மாபெரும் அமைப்புச் சட்டத்தில் எந்த ஒரு பொருளையும் இவர் விட்டுவிடவில்லை. டாக்டர் அம்பேத்கரைப் பற்றி நான் ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். இவர் அறிவுத் தன்மையின் மனித உருவம் மட்டுமல்ல, தனக்குப் பெரும் புகழும் சேர்த்துக் கொண்டுள்ளார்.”

**திரு. ஆர்.வி. துலேர்** : “நம் எதிரில் வைக்கப்பட்டதானது ஒரு மாபெரும் பணி. டாக்டர் அம்பேத்கர் இதனை மிகவும் திறமையாகச் செய்து முடித்திருக்கிறார். இந்தப் பணியானது பாண்டவர்களில் பீமனின் பெருஞ்செயல் போன்றது. அவரது பெயர் பீமராவ் அம்பேத்கர். தன்னுடைய பெயருக்கு ஏற்ப இருந்தது அவருடைய பணி. தெளிவான பேச்சு, தொலைநோக்கு இவற்றின் மூலம் எதிர்வரிசையில்

அமர்ந்திருந்த எல்லா உறுப்பினர்களின் எண்ணங்களையும் நன்றாகப் புரிந்து கொண்டு அவற்றிற்கேற்பத் தம்முடைய கருத்துக்களைத் தெளிவான பாணியில் கூறினார்."

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர்:** "டாக்டர் அம்பேத்கர் இந்த வரைவு அமைப்புச் சட்டத்தின் தலைவராக, தன்னுடைய அயராத உழைப்பின் மூலமாக எவ்வளவு திறமையுடன் இதனை வடிவமைத்துள்ளார் என்பதனை நான் பாராட்டாவிட்டால், என்னுடைய பொறுப்பிலிருந்து தவறியவனாவேன்."

**திரு. கே.எம். ஜேதே :** "பட்டியலின மக்கள் டாக்டர் அம்பேத்கரை வெகுவாகப் பாராட்டிப் போற்றி வருகின்றனர். ஆகவே, இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தை 'பீம் ஸ்ருதி' என்றுதான் அழைக்க வேண்டும். சட்டத்தின் மூலமாகத் தீண்டாமையை ஒழித்து விட்டார் டாக்டர் அம்பேத்கர்."

1949 நவம்பர் 25–இல் டாக்டர் அம்பேத்கர் நிறைவுரையாற்றினார். அதன் பின்னர் டாக்டர் பாபு ராஜேந்திர பிரசாத் கூறினார் :

"இந்த நாற்காலியில் நான் அமர்ந்து கொண்டு, அன்றாடம் இந்த மன்றத்தின் நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டு வந்த நேரங்களிலெல்லாம், வரைவுக் குழுவின் தலைவரான டாக்டர் அம்பேத்கர் தன்னுடைய உடல்நலம் குன்றியிருந்தாலும் எவ்வளவு ஆர்வத்துடனும், அக்கறையுடனும் தன்னுடைய கடமையை ஆற்றியுள்ளார் என்று உணர்ந்தேன். நாம் டாக்டர் அம்பேத்கர் அவர்களை வரைவுக் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுத்தது எவ்வளவு சரியான முடிவு என்பதையும் நான் உணர்ந்தேன். இந்த முடிவு எவ்வளவு சரியானது என்பதை அவர் மெய்ப்பித்தது மட்டுமல்லாமல், தன்னுடைய பணிக்கு அவர் மெருகு ஏற்றியுள்ளார் என்றே கூற வேண்டும்."

– இப்படி எல்லோரும் அரசியல் சாசனம் வரைவதில் டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய பணியை (பெரும்பாலும் காங்கிரஸ்காரர்கள்தான்) கூறினாலும், இப்போதைய காங்கிரஸ்காரர்களுக்கு அதை ஏற்றுக் கொள்வதில் தயக்கம் ஏனோ தெரியவில்லை. அதனால் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களே, டாக்டர் அம்பேத்கரின் பணியைப் பாராட்டியிருக்கிறார்:

"டாக்டர் அம்பேத்கரைக் காட்டிலும் அரசியல் சாசனம் உருவாவதற்கு வேறு யாரும் அதிக அக்கறையும் உழைப்பும் எடுத்துக் கொள்ளவில்லை என்பதில் ஐயமில்லை."

இதுதான் இந்திய அரசியல் சாசனம் வடிவமைத்த சிற்பியின் கதை. இந்த நாடு உள்ள வரை இந்த நாட்டுக்கெனத் தனித்த சிறப்புடைய அரசியல் சாசனத்தை வடிவமைத்த டாக்டர் பீமராவ் அம்பேத்கரின் புகழும் நிலைத்திருக்கும்.

"**யா**ராலும் நம் குறைகளைத் தீர்க்க இயலாது. நமது கைகளில் அரசியல் அதிகாரத்தைப் பெற்ற ஒரு வாய்ப்பில் அமைந்த அரசியல் சட்டத்தால் மட்டுமே அவ்வாறு தீர்க்க இயலும். இத்தகைய அரசியல் அதிகாரம் இல்லையெனில், நம் மக்களால் நம் பிரச்சினைகளைத் தீர்வுக்குக் கொண்டுவர இயலாது."

– டாக்டர் அம்பேத்கர்

மனு ஸ்மிருதியின் பெயரால் மக்களைப் பிளவுபடுத்தி, சமுதாயத்தின் பெரும் பகுதி மக்களைத் தீண்டத்தகாதவர்களாக்கி அடக்கியாண்ட ஆதிக்க சக்திகளுக்குத் தனது கடுமையான உழைப்பாலும், நேர்மையான நடத்தையாலும் சரியான மருந்தைக் கொடுத்தார் அம்பேத்கர்.

ஒருமைப்பாட்டை வலுவாக்கும் 'பீம ஸ்ருதி' என்று அழைக்கத் தக்க அற்புதமான அரசியல் சாசனத்தை அவர் வழங்கிச் சென்றார்.

(தேசிய சிந்தனைக் கழக வெளியீடான 'அண்ணலின் நினைவில்...' நூலிலிருந்து).



# இவரைத் தெரிந்து கொள்ளுங்கள்!

**நோ**வாம் அவ்ராம் சாம்ஸ்கி இன்றைய தலைமுறையில் வாழ்ந்து கொண்டிருக்கும் மிகச்சிறந்த மேதை களில் ஒருவர். கடந்த 60 ஆண்டுக் கால மாக அடக்குமுறைக்கும் அநீதிக்கும் எதி ராகவும், சிறந்த உலகத்தை உருவாக்கு வதற்காகவும் போராடுகிற லட்சக்கணக் கான மக்களின் உந்து சக்தியாகவும் திகழ்கின்றவர் அவர்.

ஜனநாயகத்தின் பெயரில் மோசடி செய்வதையும், ஏகாதிபத்திய நோக்கங் களையும் கொண்ட அமெரிக்க தேசத்தை வெளியுலகிற்குத் தைரியத் தோடும், தாட்சண்யமில்லாமல் விமர் சனம் செய்து காட்டி வருபவர் சாம்ஸ்கி அவர்கள்.

அறிவுலக மேதைகள் அதிகமாக அவரை மேற்கோள் காட்டிப் பேசு கிறார்கள். அதுமட்டுமல்ல. இன்றைய நவீன மொழி இயல் ஆராய்ச்சிகளுக் கான தந்தை என்று அவர் போற்றப் படுகிறார். “Syntactic Structures” என்ற அவ ருடைய நூல், மொழியை அறிவியல் ரீதியாகப் புத்தாக்கம் செய்துள்ள புத்தக மாகும். அப்புத்தகத்தின் மூலமாக மொழிப் புலத்தில் சாம்ஸ்கி ஒரு முக்கியச் சிந்த னையாளராக உருவாகியுள்ளார்.

மொழியைப் பற்றிய அவருடைய அடிப்படை ஆராய்ச்சிக்கு இரண்டு அம்சங்கள் உள்ளன. முதல் அம்சம், மனித மனத்தில் மொழி என்பது உடற் கூறு (Biology) சம்பந்தப்பட்டதாக உள் ளது. இரண்டாவது அம்சம், அதன் காரணமாகவே மொழி என்பது மரபியல் (Genetic) ரீதியானது என வெளிப்படுகிறது என்பதாகும்.

பயாலஜி மற்றும் ஜெனடிக் என்ற இரண்டு அம்சங்களை வைத்து அவர் செய்த ஆராய்ச்சி, மிகவும் ஆச்சரிய மானது. அந்த ஆராய்ச்சியின் சிறப்பு, மொழிக்கும் மனித குலத்திற்கும் உள்ள தொடர்பை அது விளக்குகிறது.

மொழிகள் பலவாறாக இருந்தாலும், அவை மனித மூளைக்குள் ஒரே வித மான கட்டமைப்பைக் கொண்டுதான் உருவாகின்றன. அந்த மொழியானது, அதைப் பேசுகிறவர்கள் வாழ்கிற சமூ கம், கலாச்சாரம் இவையெல்லாம் வெவ் வேறாக இருந்தாலும், அவர்களின் மூளையில் உருவாகிற மொழிக் கட்ட மைப்பு என்பது எல்லா மனித இனங் களுக்குள்ளும் ஒரே மாதிரியே உருவாகி யுள்ளது என்பதைத்தான் அவர் கண்டுணர்ந்தார்.

இந்தக் கண்டுபிடிப்பு மொழிப் புலத்தில் ஒருவிதப் புரட்சியை ஏற்படுத் தியது. மொழிப்புலத்தில் மட்டுமல்ல, தத்துவத் தளத்திலும், உளவியல் தளத் திலும் இரண்டு நபர்கள் எப்படி ஒரு மொழியைப் பேசுவதன் மூலம் அதைக் கற்றுக் கொள்கிறார்கள் என்பதை விளக்குமாறு அவருடைய ஆராய்ச்சி அமைந்தது.




“மொழியியல் அறிஞர் நோவாம் சாம்ஸ்கி உலக மொழிகளையெல்லாம் ஆய்வு செய்து கண்ட முடிவு நமக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. ஏனெனில், அவர் தமிழர் அல்ல. தமிழ்நாட்டைப் பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. ஆனால், தமிழ் மொழியைப் பற்றி அவருக்குத் தெரிந்தது வேறு யாருக்கும் தெரியாது. அது என்ன?

8000 ஆண்டுகளுக்கு முன்பு உருவான தமிழ் மொழி இன்று வரைக்கும் அதே இலக்கணக் கட்டமைப்பில் பேசப்படுகிறது, எழுதப்படுகிறது. ‘அறிவுடையார் எல்லாம் உடையார்’ என்பது திருவள்ளுவர் 2000 ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய கருத்து. இன்றைக்குப் படித்தாலும் அது நமக்குப் புரிகிறது. காரணம், அந்தக் கட்டமைப்பு மாறாமல் இருக்கிறது. அதுதான் தமிழ்மொழியின் சிறப்பு.

‘உலகத்திலுள்ள மொழிகளில் 2 மொழிகள்தான் இப்படிக் கட்டமைப்பு மாறாமல் உள்ளவை’ என்கிறார் சாம்ஸ்கி. ஒன்று தமிழ்மொழி. மற்றொன்று, தென்னாப்பிரிக்கப் புராதன மொழியான சுவாகிலி. அந்த சுவாகிலி மொழி தமிழ்மொழி போல் அல்ல. தமிழ் மொழியை உலகத்தில் 43 நாடுகளில் 9 கோடிப்பேர் பேசுகிறார்கள்.”

சாம்ஸ்கி படிப்பறிவையும் அரசியல் துடிப்பையும் இணைத்துத் தன் ஆய்வுக்குப் பயன்படுத்தினார். அதனால் அவர் நம் தலைமுறையின் ஒரு மிகச்சிறந்த மேதையாகக் கருதப்படுகிறார்.

மொழிப்புலம் கடந்து அரசியல் தளத்தில் அவர் செயல்படுகிற விதம் வித்தியாசமானது. வியட்நாம் தேசத்தில் அமெரிக்கப்படை ஆக்கிரமிப்பதற்காகப் பிரவேசித்ததைக் கடுமையாகச் சாடினார்.

அதேபோல, 1967இல் நடந்த யுத்தத்திற்கெதிரான அவருடைய குரல், உலக மக்களின் கவனத்தைக் கவர்ந்தது. அப்போது அவர் எழுதிய ‘அறிவுஜீவிகளின் பொறுப்புணர்வு’ என்ற கட்டுரையை ஒரு செவ்வியல் இலக்கியம் (Classic) என்றே கூறலாம்.

தங்கக் கூண்டுக்குள் அமர்ந்து சமூகத்திற்குச் சம்பந்தமில்லாமல் தனியாகச் சிந்தித்தவர் அல்ல அவர். அவருடைய சிந்தனை காரணமாக அவர் பல முறை கைது செய்யப்பட்டார். அமெரிக்க அதிபர் நிக்சன் அவர்களின் கடுமையான எதிரியாகக் கருதப்பட்டவர் அவர்.

கிழக்குத் தைமூர் தேசம் விடுதலை பெறுவதற்கு இவருடைய தலையீடு உதவியது. அமெரிக்க தேசத்தின் வெளிநாட்டுக் கொள்கையையும், நவீன மூலதனக் கொள்கையையும் பாலஸ்தீனத்தில் இஸ்ரேலின் ஆக்கிரமிப்பையும் அவர் கடுமையாக விமர்சித்தவர்.

2011–இல் ‘சிட்னி அமைதி விருது’ இவருக்கு வழங்கப்பட்டது. 100 நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார். ‘அமெரிக்காவின் உலக ஆதிக்கம்’ என்ற நூலும், ‘அதிகார துஷ்பிரயோகம் மற்றும் ஜன நாயகத்தின்மீது தாக்குதல்’ என்ற நூலும் பிரசித்தி பெற்ற அவருடைய நூல்களாகும்.

சாம்ஸ்கி ஒரு சுதந்திரச் சிந்தனையாளர். சமூக ஆர்வலர், சோசலிசவாதி, உற்பத்தி சக்திகளைத் தொழிலாளிகளின் மேற்பார்வையில் வைத்துக் கொள்வதைப் பற்றியும், தொழிலாளர்களின் ஆலோசனைக் குழுதான் சமூகத்தை ஆட்சி செய்ய வேண்டும் என்பதையும் வலியுறுத்தி வந்தவர் அவர்.

மசாசூசெட்ஸ் கல்லூரியில் ஓய்வு பெற்ற பேராசிரியராகப் பணி செய்து வருகிறார். அரிசோனா பல்கலைக் கழகத்தில் அவருடைய பணி போற்றப்படுகிறது. 89 வயதைக் கடந்துள்ள அவர், ஏகாதிபத்திய எதிர்ப்பாளராகவும், நீதிக்கும் அமைதிக்கும் உரிய காவலராகவும் தற்போது விளங்குகிறார்.

சமூகத்திற்குத் தான் ஆற்ற வேண்டிய கடமைகள் பற்றி அவர் கூறுகிற வாசகங்கள் கவனிக்கத்தக்கவை. அவர் விரும்புகிற உலகம் – அவருடைய பேரக் குழந்தைகள் எந்தத் துன்பமும் இல்லாமல் வாழ்வதற்கான உலகமாக இருக்க வேண்டும். துன்பம் மட்டுமல்ல, அவமானங்களும் அவர்களுக்கு இருக்கக் கூடாது. மற்றவர்களும் துன்பப்படக் கூடாது என்பதுதான்.

– ந.நி

# இம்மாதராசி பலன்

**“என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்**
**என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!”**

**1.8.2018 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | | | |
| | 01.8.2018 சுக். – கன்னி<br>17.8.2018 சூரி. – சிம்மம்<br>19.8.2018 புதன் வக்ர நிவர்த்தி | | சூரியன்<br>ராகு<br>புதன் (வ) |
| செவ். (வ)<br>கேது | | | சுக்கிரன் |
| சனி (வ) | | குரு | |

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**

## மேஷம்



**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் சூரியன் 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், குடும்பப் பிரச்சனைகள் கவலை கொடுக்கும். உங்கள் காரியங் களின் முயற்சிகளில் சனியின் வக்கிர நிலை காரணமாகத் தடைகள் ஏற்படும். சூரியன் மாதத்தின் பிற்பாதியில் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், அரசாங்க அலுவல்கள் சில அனுகூலப்படும். குரு வக்கிரம் நீங்கி நேர்கதியில் வரும் அக்டோபர் மாதம் 10–ஆம் தேதி வரை சஞ்சரிப்பதால், ஒரு சிலருக்குச் சுப காரியங்கள் ஈடேறும். செவ்வாய் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்ப தால் மன உளைச்சலுக்கு ஆளாவீர்கள்.

சுக்கிரன் இம்மாதம் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப் பதால், சில எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் உங்களைத் தேடி வரலாம். பணம், பொருள் வரவாகக்கூடும். 10–இல் கேது சஞ்சரிப்பதால், தர்மார்த்த காரியங்கள், புண்ணியக் காரியங் களில் ஈடுபடலாம். ராகு – சூரியன் இணைவு காரணமாக மாற்றுச் சாதி, மதக்காரர்கள் சந்திப் பால் இம்மாதம் நன்மை, தீமை ஏதாகிலும் ஏற்படக் கூடும். புதன் வக்கிரகதியில் சஞ்சரிப்பதால், பிறர் உதவியை நீங்கள் எதிர்பார்க்கக்கூடும்.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், மனத் தைரியம் கூடும். தொழில், உத்தி யோகத் துறைகளில் அனுகூலம் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் அலைச்சல், சுபச்செலவு, விரயம், தேக நலிவு ஏற்படக்கூடும். செவ்வாய் வக்கிரம் பெற்றுக் கேதுவுடன் சேர்ந்து பாதக ஸ்தானத்தில் சஞ்சரிப்பதால், பெற் றோர்களுக்குப் பாதிப்பு ஏற்படும். மூன்றாம் வீட்டில் சூரியன் – ராகு சேர்க்கை மாதத்தின் பிற்பாதியில் ஏற்படுவதால், துணிவான முயற்சிகளால் நன்மை உண்டாகும்.

குரு 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உறவினர் வகை அதிருப்தி ஏற்படக்கூடும். சிலருக்கு வைத் தியச்செலவு, கடன் முதலியவை ஏற்படக்கூடும். இன்னும் 3 மாதங்களுக்குச் சிரமங்கள் இருந்து வரும். சனி 8–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், ஒரு சிலருக்குச் சோர்வும், உடல் அசதியும் தொந்தரவு கொடுக்கும். கூட்டாளி

வகையிலும் கூட்டுத் தொழிலிலும் அதிருப்திகள் ஏற்படும். சுக்கிரன் 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சிலர் கடன் பட்டு ஆடம்பரப் பொருள் வாங்குவர். திருமணக் காரியம் தடைப்படும்.

## மிதுனம்



**மி**துன ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் 2, 3–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால், ஒரு சிலருக்குக் கண்களில் உபத்திரவம் ஏற்பட வாய்ப்புண்டு. பணத்தட்டுப்பாடு ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் தொழில், உத்தியோகத் துறைகளில் ஆதாயம் ஏற்படும். சுப காரிய ஈடுபாடுகள் வெற்றியளிக்கும். இம்மாதம் செவ்வாய் 8–இல் வக்கிரம் பெற்றுக் கேதுவுடன் சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், உஷ்ணத்தால் பாதிப்பு ஏற்படலாம். எதிர்பாராத விபத்துக்கள் ஏற்படலாம், கவனம் வேண்டும். பிறர்மீது தேவையற்ற கோபதாபங்கள் ஏற்படலாம்.

சனி 7–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சோம்பலும், சோர்வும் உங்களிடம் அதிகம் காணப்படும். குரு 5–ஆம் வீட்டில் நேர்கதியில் சஞ்சரிப்பதால், திருமண வாய்ப்புகள் கூடிவரும். முதலீடுகள் செய்வதில் கவனம் தேவை. பிறருக்கு ஜாமீன் கொடுப்பது முதலியவற்றைத் தவிர்க்க வேண்டும். 3–இல் சுக்கிரன் சஞ்சரிப்பதால், சுகபோக இச்சைகள் மிகும். உங்கள் ராசி அதிபதி புதன் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், முடிவெடுப்பதில் தடுமாற்றம் ஏற்படும். புதிய முயற்சிகளுக்கு மாதத்தின் பிற்பாதி ஏற்றது.

## கடகம்



**க**டக ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் முற்பாதியில் ராசிமீது சஞ்சரிப்பதால், உடல் நலிவு ஏற்படும். சிரசு ரோகம் உண்டாகும். மாதத்தின் பிற்பாதியில் இரண்டாம் வீட்டில் ஆட்சி பெற்றுச் சூரியன் சஞ்சரிப்பதால், குடும்ப விருத்தி ஏற்படும். தன வரவு உண்டாகும். சுப காரியச் செலவுகள் ஏற்படும். செவ்வாய் 7–ஆம் வீட்டில் சூரியனுக்கு நேர் எதிராக வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் ரத்த சம்பந்தம் உடைய உறவுகளால் அபிப்பிராய பேதம், எதிர்ப்பு உண்டாகும்.

குரு 4–ஆம் வீட்டில் நேர்கதியில் சஞ்சரிப்பதால், இட மாறுதல்கள், பதவி உயர்வு முதலியவை சிலருக்குக் கிட்டும். சனி வக்கிரம் பெற்று 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவர் வழியில் தற்காலிகப் பிரச்சனைகள் ஏற்பட வாய்ப்புண்டு. சுக்கிரன் இரண்டில் சஞ்சரிப்பதால், வாக்குச் சாதுர்யத்தால் சில காரியங்களைச் சாதித்துக் கொள்வீர்கள். புதன் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் உங்களின் ஆரோக்கியம் கருதி சுபச் செலவுகள் ஏற்படலாம். புதிய காரியங்களைப் புரட்டாசி மாதம் தொடங்க, வெற்றி ஏற்படும்.

## சிம்மம்



**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் அலைச்சல், விரயம், வீண் விவகாரங்களை ஏற்படுத்தக்கூடும். ஒரு சிலர் அரசாங்கத் தண்டனை அல்லது நிந்தனைகளுக்கு ஆளாவர். மாதத்தின் பிற்பாதியில் ராசி மீது ஆட்சி பெற்றுச் சூரியன் சஞ்சரிப்பதால் மன வலிமை, ஆன்ம பலத்துடன் திகழ்வர். செவ்வாய் 6–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுக் கேதுவுடன் சஞ்சரிப்பதால், கோர்ட்டு விவகாரங்களிலும் தொழில் உத்தியோகத்துறைகளிலும் வீண் பயமும், கலக்கமும் ஏற்படக்கூடும்.

சனி வக்கிரம் பெற்று 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் குழந்தைகளாலோ, வாழ்க்கைத் துணைவராலோ சிலர் சங்கடங்களை அடைவர். சூரியன், ராகு, புதன் 12–ஆம் வீட்டில் இணைந்து சஞ்சரிப்பதால், ஒரு கண்ணில் பாதிப்பு சிலருக்கு ஏற்படும். குரு நேர்கதியில் அக்டோபர் 10–ஆம் தேதி வரை 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் போட்டி, பந்தயங்களில் வெற்றி கிடைக்காது. சுக்கிரன் ராசிமீது இம்மாதம் சஞ்சரிப்பதால் நல்ல தோற்றம், இளமையுடன் காட்சி அளிப்பீர்கள். புதன் வக்கிரம் பெற்று 18–ஆம் தேதி வரை 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பொருளாதார விஷயங்களிலும் நண்பர்கள் விஷயங்களிலும் கவனமாக இருக்க வேண்டும். திருமணக் காரியங்கள் ஈடேற வாய்ப்பில்லை.

## கன்னி



**க**ன்னி ராசி அன்பர்களுக்கு, சூரியன் மாதத்தின் முற்பாதியில் லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால்,

ஒரு சிலர் வழக்கு விவகாரங்கள், கோர்ட்டு விவ காரங்களில் தலையிட நேரலாம். மாதத்தின் பிற் பாதியில் சூரியன் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சுப விரயம் ஏற்படும். செவ்வாய் – கேது 5–ஆம் வீட்டிலும் நேர் எதிராகச் சூரியன் – ராகுவும் சஞ்சரிப்பதால், மூன்றாவது மனிதர்கள் மூலமோ, குழந்தைகள் மூலமோ சங்கடங்கள் ஏற்படும் வாய்ப்புண்டு. உங்கள் ராசியதிபதி புதன் 18–ஆம் தேதி வரை வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், குழப்பத்திற்கு ஆளாவீர்கள்.

19–ஆம் தேதி முதல் புதன் நேர்கதியில் சஞ் சரிப்பதால், எதிர்பாராத நன்மை கிட்டும் வாய்ப் புண்டு. குரு 2–ஆம் வீட்டில் நேர்கதியில் சஞ்சரிப் பதால், வரும் அக்டோபர் 11 வரை குரு நற்பலன் களைக் கொடுக்க வாய்ப்புண்டு. சனி 4–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், பெற் றோர்க்குத் துர்ப்பலன்கள் ஏற்படும். போக்கு வரத்துக்களில் எச்சரிக்கை தேவை. சுக்கிரன் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பங்கு வர்த்தகம் முதலிய ஹேஷ்ய பேர நடவடிக்கைகளில் ஈடுபட் டிருப்போர் பெரும் நஷ்டத்தைச் சந்திப்பர். மாதத் தின் பிற்பாதியில் அரசாங்கக் காரியங்களில் எச் சரிக்கையுடன் ஈடுபட வேண்டும்.




**து**லாம் ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் 10, 11–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால், தொழில் துறை அனுகூலமடையும். முயற்சி கள் பலிதமாகும். நண்பர்கள் மூல மான உதவிகள் கிடைக்க வாய்ப் புண்டு. மாற்று மதக்காரர்களால் தொழில், உத்தி யோகத் துறைகளில் லாபம் கிட்டும். செவ்வாய் 4–ஆம் வீட்டில் கேதுவுடன் சஞ்சரிப்பதால், வயது முதிர்ந்த பெரியவர்களுக்கு உடல் நலக் கோளாறு கள் ஏற்பட வாய்ப்புண்டு. லாபஸ்தானத்தில் சுக் கிரன் சஞ்சரிப்பதால், பெண்களால் உதவியும், நன்மையும் உண்டு.

ராசி மீது குரு சஞ்சரிப்பதால், திருமணம் முதலிய சுப காரியங்களில் 3 மாதங்களுக்குப் பின் சாதகமான பலன்கள் உண்டாகும். இல்லற வாழ் வில் அவ்வப்போது சர்ச்சைகள் ஏற்படலாம். சனி வக்கிர நிலையில் சிறிது காலம் சஞ்சரிப்பதால், தற் சமயம் சொத்து, சுகம் சேர்க்கைக்கு வாய்ப் பில்லை. 10–இல் ராகு சஞ்சரிப்பதால், இடமாற்றம் குறித்துச் சிலர் சிந்திப்பர். அதேபோல் தொழில் துறையிலும் ஒரு சிலர் புதிய விஞ்ஞான யுக்தி களைப் பிரயோகம் செய்ய விருப்பம் கொள்வர். ஆனால், நினைப்பது நடைபெறுவது கேள்விக் குரியது. புதிய முயற்சிகளை மாதத்தின் பிற்பகுதி யில் தொடங்க நன்மையுண்டு.




**வி**ருச்சிக ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் காரிய தாமதத்தை ஏற்படுத்தும். ஒரு சிலர் தங்கள் பெற்றோர் வழியில் மருத்துவச் செலவை அடைவர். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 10–ஆம் இடத்தில் சஞ்சரிக்க இருப்பதால், தொழில், உத்தியோகத் துறைகளில் அனுகூலமும், பணவரவும் உண்டாகும். தொழில்வழிப் பயணங் களைச் சிலர் மேற்கொள்ளக்கூடும். செவ்வாய் மூன்றாம் வீட்டில் வக்கிரம் பெற்றுக் கேதுவுடன் சேர்ந்து சஞ்சரிப்பதால், சகோதர வர்க்கத்தார் சில பிரச்சனைகளை அடையக்கூடும். உடல் நலக் கோளாறுகள் ஏற்பட வாய்ப்புண்டு.

சனி வக்கிரம் பெற்று இரண்டில் சஞ்சரிப்ப தால், பண வரவு ஏற்பட்டாலும், கூடவே செலவும் ஏற்படும். குரு 12–இல் சஞ்சரிப்பதால், உங்களது அந்தஸ்தைத் தக்கவைத்துக் கொள்ளப் போராட வேண்டியிருக்கும். ஒரு சிலர் குறிப்பாக, ஆன் மீகக் காரியங்களில் ஈடுபட்டிருப்போர், அறக் கட்டளை நடத்துவோர் மேலான யோக பலன்களை அடைவர். 9–ஆம் வீட்டில் சூரியன் – ராகு சேர்க்கை ஏற்படுவதால், சுப காரியங்களில் இறங் குபவர்கள் தங்கள் ஜாதகத்தை ஆய்வு செய்து கொள்வது நல்லது.




**த**னுசு ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் எதிர்பாராத செலவு, உடல் நலிவு களை ஏற்படுத்தலாம். மாதத்தின் பிற்பாதியில் காரியத்தடை, வீண் அலைச்சல்களை ஏற்படுத்தலாம். மாதம் முழுவதும் சுக்கிரன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சிலர் தகப்பனார் வர்க்கத்தாருடன் கருத்து பேதம் கொள்வர். நண்பர்கள் பகையும் சிலருக்கு ஏற்படும். செவ்வாய் 2–இல் கேதுவுடன் சஞ்சரிப்பதால், பிறருடன் பேசும்பொழுது நிதானத் தைக் கடைப்பிடிக்க வேண்டும். செலவு

செய்வதிலும் கவனம் வேண்டும். புத்திர வர்க்கத்தார் வகையிலோ, சகோதர வர்க்கத்தார் வகையிலோ விரோதம் ஏற்படக்கூடும்.

சனி ராசி மீது வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சுறுசுறுப்புக் குறைந்து காணப்படுவீர்கள். குரு 11–இல் சஞ்சரிப்பதால், பெரியோர் உறவும், ஆசியும் கிடைக்கும். புதன் 18–ஆம் தேதி வரை வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவரோடு தர்க்கம் வேண்டாம். தொழில் துறையில் சிறிது மந்த நிலை நிலவிவரும். 19–ஆம் தேதி முதல் நன்மை ஏற்பட வாய்ப்புண்டு. திருமணக் காரியங்கள் கைகூடும். அக்டோபர் 10–ஆம் தேதி வரை திருமண வாய்ப்புண்டு.




**ம**கர ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவரோடு கருத்துப்போர் செய்யக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் 8–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால், எதிர்பாராத செலவு, எதிர்பாராத சம்பவங்கள் நிகழக்கூடும். 10–இல் குரு நேர்கதியில் சஞ்சரிப்பதால், தொழில் சம்பந்தமாகப் பயணாங் கள் சிலருக்கு ஏற்படும். சிலர் நாணயக் குறைவை அடைவர். சனி வக்கிரம் பெற்றுள்ளதால், வரவு வந்து சேரும். சுபச்செலவுகளும் கூடவே வரும்.

செவ்வாய் – கேது ராசி மீது சஞ்சரிப்பதால், உணர்ச்சிவசப்படுவீர்கள். 8–இல் சுக்கிரன் சஞ்சரிப்பதால், சொத்து சுகங்கள் சிலவற்றைச் சிலர் விற்க முயற்சிப்பர். சிலர் அடமானம் வைப்பர். 7–இல் ராகு, சூரியன், புதன் இணைவு ஏற்படுவதால், கணவனை இழந்த பெண்களிடம் கவனமாக இருக்க வேண்டும். வரும் அக்டோபர் 11–ஆம் தேதிக்கு மேல் கல்யாணக் காரியங்கள் கூடிவரும். புதிய செயல்களில் இந்த மாதம் இறங்க வேண்டாம்.




**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் ராகு சேர்க்கை பெற்று 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், நுண்கிருமிகளின் தாக்கம் காரணமாகக் காய்ச்சல், வயிற்று உபாதை முதலியவை ஏற்பட வாய்ப்புண்டு. மேலும், வாழ்க்கைத் துணைவர் வழியில் வீண் விவகாரம் ஏற்படக்கூடும். தொழில் துறையில் முன்னேற்றம் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் 7–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால், சச்சரவுகள் அகன்று மன அமைதி ஏற்படும். செவ்வாய் விரயஸ்தானத்தில் கேது சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், ஒரு சிலருக்குத் தொழில் சம்பந்தப்பட்டு வருமானம் வரக்கூடும். சகோதர வர்க்கத்தார் பிரச்சனைகளை ஏற்படுத்தக்கூடும்.

சனி வக்கிரம் பெற்று 11–இல் சஞ்சரிப்பதால், நண்பர்கள் எதிர்பார்ப்புகளுக்கு மாறாக நடந்து கொள்ளக்கூடும். குரு 9–இல் சஞ்சரிப்பதால், தடைப்பட்ட காரியங்களில் தடைகள் அகன்று முன்னேற்றம் ஏற்படும். பண வசதி, தொலைதூர நற்செய்தி கிட்டும். இம்மாதம் சுக்கிரன் 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பெண்கள் வகையில் யாரேனும் எதிர்ப்புகளை ஏற்படுத்தலாம். புதன் 18–ஆம் தேதி வரை வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், மாறுபட்ட மனநிலை உங்களிடம் காணப்படும். கல்யாணக் காரியங்கள் கூடிவரும்.




**மீ**ன ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதிவரை முடிவெடுக்க இயலாத குழப்பமான மனநிலையை ஏற்படுத்தக்கூடும். குலதெய்வ வழிபாடு நன்று. சூரியன் – ராகு – புதன் சேர்க்கை காரணமாக உங்களுக்குக் காரியத்தடைகள் ஏற்படுவது தடுக்க இயலாத ஒன்று. மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தொழில் உத்தியோகத் துறைகளில் நன்மை ஏற்படும். எதிர்ப்புகள் அகன்றுவிடும். செவ்வாய் வக்கிரம் பெற்று லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால், எதிர் பாராமல் தன லாபம் கிட்ட வாய்ப்புண்டு.

சனி வக்கிரம் பெற்று 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தொழில் சம்பந்தமாக அதிருப்திகள் அவ்வப்போது வந்தகலும். 8–இல் குரு சஞ்சரிப்பதால், இன்னும் இரண்டு மூன்று மாதங்கள் பொருள் முடக்கம் இருந்து வரும். பின்னர் எல்லா வகையிலும் மேன்மை ஏற்படும். கல்யாணக் காரியங்கள் அக்டோபர் மாதம் 11–ஆம் தேதிக்கு மேல் ஈடேறும். சுக்கிரன் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சகோதர வகை விரோதம், எதிர்ப்பு வரலாம். புதன் வக்கிரம் பெற்று 18–ஆம் தேதி வரை சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவரோடு அபிப்பிராய பேதம் ஏற்படலாம். ●

நேர்காணல்



# மாடு வளர்ப்பில் பொறியாளருக்கு விருது!

இன்றைய இளைஞர்கள் பொறியியல், மருத்துவம், மேலாண்மை முதலிய படிப்புகளைப் படித்து, அப்படிப்புகளுக்கேற்ற வேலைகளைப் பெற்று முன்னேறவே விரும்புகின்றனர். தகவல் தொழில்நுட்பத் துறையின் வளர்ச்சி, அத்துறையில் இன்றைய இளைஞர்களை அதிகம் ஈர்த்து, நல்ல ஊதியத்துடன் கூடிய வேலை வாய்ப்புகளை அளித்து வருகிறது. எனினும் எல்லோர்க்கும் இந்த வாய்ப்புச் சாத்தியப்படுவதில்லை.

சொந்தத் தொழில் செய்ய வேண்டும், அதன் மூலம் மற்றவர்களுக்கு வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தர வேண்டும் என்ற எண்ணத்தில் செயல்படுபவர்கள் குறைவான தொகையினராகவே உள்ளனர்.

ஆனால், பொறியியல் படிப்புப் படித்து விட்டு, வேளாண்மைத் துறையின் ஒரு துணைத் தொழிலான கால்நடை வளர்ப்பை அடிப்படையாகக் கொண்ட பால்பண்ணைத் தொழிலைச் செய்து வருகிறார் ஓர் இளைஞர்.

இப்படி ஓர் இளைஞர் பால்பண்ணைத் தொழில் செய்வதென்பது ஒரு சாதாரணச் செய்திதான். ஆனால், அந்தத் தொழிலைத் தொடங்கி இரண்டே ஆண்டுகளில் அதற்காக மைய அரசின் 'நேஷனல் கோபால் ரத்னா' என்ற விருதை இவர் பெற்றிருப்பதும், இவர் கோவை வடக்கு சட்டமன்ற உறுப்பினரின் புதல்வராக இருந்தும், நாள் முழுவதும் மாடுகளோடு இருந்து கொண்டு, மாட்டுச் சாணத்தோடு புழங்கிக் கொண்டும் இருப்பதுதான் ஆச்சரியம்.

எந்த ஒரு நல்ல தொழிலையும் தாழ்வாகக் கருதக்கூடாது என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக, இளைய தலைமுறைக்கு ஒரு முன்மாதிரியாக விளங்குகிறார் கோவை பெரியநாயக்கன்பாளையத்தைச் சேர்ந்த இளைஞர் திரு. தீரஜ் ராம்கிருஷ்ணா.

அவர் இத்தொழிலுக்கு வந்தது பற்றியும், விருது பெற்றது பற்றியும் அறிய அவரை அணுகினோம். மாட்டுப் பண்ணையில் மாடுகளோடும் கன்றுகளோடும் உறவாடிக் கொண்டிருந்த அந்த 24 வயது இளைஞர் மகிழ்ச்சியுடன் பகிர்ந்து கொண்ட தகவல்கள்...

**கேள்வி : ஒரு பொறியாளரான நீங்கள் பால் பண்ணைத் தொழிலுக்கு எப்படி வந்தீர்கள்?**

**பதில் :** நான் கல்லூரியில் பொறியியல் இரண்டாமாண்டு படித்துக் கொண்டிருக்கும்போதே ஒரு தொழில் நடத்தத் தொடங்கினேன். அதைச் சரியாக நடத்த முடியவில்லை. அதை விட்டுவிட்டு, அதே ஆட்களையும், வண்டிகளையும் வைத்துக் கொண்டு என்ன செய்யலாம் என்று யோசித்தேன். பால் விற்பனை செய்யலாம் என முடிவு செய்து, பால் கறந்து கொண்டு வந்தவுடன் அதைக் கண்ணாடி பாட்டில்களில் நிரப்பி விற்பனை செய்யத் தொடங்கினேன்.



கேள்வி : பால் தொடர்பான என்னென்ன பொருள்கள் உற்பத்தி செய்து விற்பனை செய்கிறீர்கள்?

பதில் : எங்கள் பண்ணையின் பாலைக் கறந்தவுடன் அப்படியே 5 இடங்களில் விற்பனை செய்கிறோம். மற்ற விவசாயிகளிடம் வாங்கும் பாலினைத் தயிர், வெண்ணெய், நெய், பனீர், பாக்கெட் பால், பாக்கெட் தயிர் முதலிய பொருள்களாகக் கடைகளுக்கு விற்பனை செய்கிறோம்.

*மாட்டுப் பண்ணையில்*
*தீரஜ் ராம்கிருஷ்ணா*



100 முதல் 150 லிட்டர் வரை பால் அக்கம் பக்கத்துத் தோட்டங்களில் வாங்கி விற்றுக் கொண்டிருந்தேன். பின்னர் அதில் தரம் குறைவு, உரிய நேரத்திற்கு வந்து சேராமை முதலிய காரணங்களால், நாமே சொந்தமாகப் பண்ணை தொடங்கலாம் என்று முடிவு செய்தேன். சோதனை முயற்சியாக முதலிலேயே ஒரு மாடு வாங்கி வளர்த்து வந்தேன். இந்த முடிவினை என் தந்தையாரிடம் சொல்ல, அவர் 10 மாடுகள் வாங்கித் தந்தார். அவை படிப்படியாக அதிகரித்தன. கல்லூரிப் படிப்பு முடித்து வெளியே வந்ததும், இதனையே முழுமையாகப் பார்க்க முடிவு செய்து பண்ணையை நடத்தி வருகிறேன்.

**கேள்வி : தற்போது எத்தனை மாடுகள் உங்கள் பண்ணையில் உள்ளன?**

**பதில் :** தற்போது 40 மாடுகளும், 25 கன்றுக் குட்டிகளும் உள்ளன.

**கேள்வி : இவற்றில் நாட்டு மாடுகள் எத்தனை? கலப்பின மாடுகள் எத்தனை?**

**பதில் :** கிர் இன நாட்டு மாடுகள் கன்றுக் குட்டிகளோடு சேர்த்து மொத்தம் 12 உள்ளன. மற்றவை ஜெர்சி மற்றும் ஃபிரீசியன் கலப்பின மாடுகள். இவை போக சுமார் 10 வெள்ளாடுகள் உள்ளன.

**கேள்வி : பாலை அப்படியே விற்பனை செய்யாமல், மதிப்புக்கூட்டப்பட்ட பொருள்களாகத் தயாரித்து விற்பனை செய்வதே லாபம் என்கிறீர்கள். இதில் எந்த அளவு லாபம் கிடைக்கும்?**

**பதில் :** நாங்கள் வெளியே வாங்கும் பாலுக்கு அவற்றின் தரத்திற்கேற்ப ரூ. 26 முதல் ரூ. 30 வரை கொடுக்கிறோம். இவ்வாறு வாங்கும் பாலிலிருந்து முன்னர் சொன்ன தயிர், நெய், பாக்கெட் பால் முதலிய பொருள்களை ஆட்களை நியமிக்காமல், அவரவர்களே தயாரித்து விற்பனை செய்தால், ஒரு லிட்டருக்கு ரூ. 10 முதல் ரூ. 15 வரை கூடுதல் லாபம் கிடைக்கும்.

**கேள்வி : ஒரு நாளைக்கு எத்தனை லிட்டர் பால் விற்பனை செய்கிறீர்கள்?**



மத்திய அமைச்சர் ராதாமோகன் சிங்கிடம் 'நேஷனல் கோபால் ரத்னா' விருது பெறுகிறார் தீரஜ் ராம்கிருஷ்ணா.

**பதில் :** எங்கள் பண்ணையிலிருந்து 250 லிட்டர் பாலும், வெளியே வாங்குவது 150 லிட்டர் பாலுமாக ஒரு நாளைக்கு 400 லிட்டர் பால் விற்பனை செய்கிறோம்.

**கேள்வி : உள்ளூரில் மட்டுமே விற்பனை செய்கிறீர்களா? வெளியேயும் அனுப்புகிறீர்களா?**

**பதில் :** உள்ளூரில் மட்டுமே விற்பனை செய்கிறோம். 400 லிட்டர் என்பது மிகவும் குறைவான அளவு என்பதால், வெளியூர்களுக்கெல்லாம் விற்பனைக்கு அனுப்பப்படுவதில்லை.

**கேள்வி : மாட்டுக் கொட்டகைகளில் என்ன மாதிரியான சுகாதாரப் பணிகள் செய்யப்படுகின்றன?**

**பதில் :** கால்நடை மருத்துவர்களின் வழிகாட்டுதல்படி, நாள்தோறும் இரண்டு முறை பொட்டாசியம் பர்மாங்கனேட் கலந்த நீரால் கொட்டகையின் தரைகள் கழுவப் படுகின்றன. மாடுகளும் அவ்வப்போது கழுவப்படுகின்றன.

**கேள்வி : மாடுகளுக்குக் கட்டி வைத்துத் தீனி தரப்படுகின்றதா? மேய்ச்சலுக்கும் ஓட்டிச் செல்லப் படுகின்றனவா?**

**பதில் :** மாடுகளுக்கு இங்கே மேய்ச்சல் நிலங்கள் இல்லாததால் இங்கே கட்டித்தான் வைக்கப்பட்டுள்ளன. ஆனாலும், மாடுகள் தீனி தின்பதற்குத் தனிக் கொட்டில் உள்ளது. இந்த இடத்தில் வெறுமனே சுற்றித் திரிந்து கொண்டு தீனி தின்னலாம். தீனி தின்னும் நேரம் தவிர, மற்ற நேரங்களில் இவை வெறுமனே சுற்றுவதால், காலாற நடக்கும் பலன் அவற்றிற்குக் கிடைக்கின்றன.

**கேள்வி : மாடுகளிடமிருந்து பால் அதிகமாகக் கிடைப்பதற்காக என்னென்ன சிறப்புத் தீனி வகைகள் கொடுக்கப்படுகின்றன?**

**பதில் :** பால் அதிகம் கிடைப்பதற்காக 'அசோலா' என்னும் நீர்த்தாவரம் மாடுகளுக்கு அதிக அளவில் கொடுக்கப் படுகிறது. அத்துடன் குச்சிப் பிண்ணாக்கும் கொடுக்கப் படுகிறது. எங்கள் மாடுகள் மிகுதியான அளவில் பால் கொடுப்பதில்லை. சராசரியாக ஒரு நாளைக்கு 12 முதல் 15 லிட்டர் வரைதான் கொடுக்கின்றன. ஆனால், பாலின் தரம் நன்றாக இருப்பதில் கவனம் செலுத்தி, இந்தத் தீவனங்களைக் கொடுத்துப் பராமரிக்கிறோம்.

**கேள்வி : பாலைக் கைகளில் கறக்கிறீர்களா? இயந்திரத்தின் மூலம் கறக்கிறீர்களா?**

**பதில் :** இயந்திரங்களின் மூலமாகத்தான் பால் கறக்கிறோம்.

**கேள்வி : பண்ணையில் எத்தனை பேர் வேலை செய்கிறார்கள்?**

**பதில் :** பண்ணையில் மட்டும் 5 பேர் வேலை செய்கிறார்கள். வெளியே வியாபாரம், பணம் வசூல் செய்பவர்கள் உட்பட மொத்தம் 18 பேர் உள்ளனர்.

**கேள்வி : அவர்களுக்கு ஊதியம் எவ்வளவு தரப் படுகிறது?**

**பதில் :** அவரவர் பணிக்கேற்ப ரூ. 9 ஆயிரம் முதல் ரூ 15 ஆயிரம் வரை ஊதியம் தரப்படுகிறது.

**கேள்வி : பெரிய நிறுவனங்கள் விற்கும் பாலின் விலையும், உங்கள் நிறுவனம் விற்கும் பாலின் விலையும் ஒரே மாதிரியானதா? விலை வேறுபாடு உள்ளதா?**

**பதில் :** எங்கள் பண்ணையிலிருந்து நேரடியாக விற்கும் பால் லிட்டர் ரூ. 40 என்ற விலையில் விற்பனை செய்யப்படுகிறது. வெளியிலிருந்து வாங்கிப் பாக்கெட்டுகளில் அடைத்து விற்கும் பால் பிற பெரிய நிறுவனங்கள் விற்கும் விலைக்கே விற்கப்படுகிறது.

**கேள்வி : உங்கள் பால் பண்ணைக்கு மைய அரசு**

**என்ன விருது வழங்கியுள்ளது? எதற்காக வழங்கியுள்ளது?**

**பதில் :** மைய அரசு, சிறந்த பால் பண்ணைக்கான 'நேஷனல் கோபால் ரத்னா' என்னும் விருதை வழங்கியுள்ளது. இது பண்ணையில் எத்தனை மாடுகள் வளர்க்கிறோம் என்பதை வைத்து வழங்கப்படுவதல்ல. நாட்டு மாடுகளை வைத்து இந்தப் பண்ணை செயல்படுவதை வைத்து வழங்கப்படுகிறது. நாட்டு மாடு எவ்வளவு பால் கறக்கிறது? எந்த மாதிரியான தீவனம் தருகிறோம்? கொட்டகை எப்படிப் போட்டிருக்கிறோம்? எப்படித் தீவனம் வழங்கப்படுகிறது? மேய்ச்சல் உள்ளதா? புல் அரைத்துத் தரப்படுகிறதா? இப்படிப் பல வகையான விதிமுறைகளுக்கு மதிப்பெண்கள் வழங்கப்படுகின்றன. அந்த வகையில் அதிக மதிப்பெண்கள் பெற்றுச் சிறந்த பால் பண்ணையாக எங்கள் பண்ணை தேர்ந்தெடுக்கப்பட்டு இந்த விருது வழங்கப்பட்டது.

**கேள்வி : இது தமிழக அளவில் வழங்கப்பட்ட விருதா? தேசிய அளவில் வழங்கப்பட்ட விருதா?**

**பதில் :** தமிழகம், கேரளா, கர்நாடகா, ஆந்திரா, தெலுங்கானா, பாண்டி உள்ளிட்ட தென்னிந்திய மாநிலங்கள் அளவிலான விருது இது.

**கேள்வி : இந்த விருது இந்த ஆண்டுதான் முதல் முறையாக வழங்கப்பட்டதா?**

**பதில் :** இல்லை. மூன்று ஆண்டுகளாக வழங்கப்பட்டு வருகிறது. தமிழகத்திற்கு இந்த ஆண்டுதான் முதன் முதலில் கிடைத்துள்ளது. சிறந்த பண்ணைக்கு எங்களுக்கும், சிறந்த கோசாலைக்கு வெள்ளியங்கிரி கோசாலைக்கும் கிடைத்துள்ளது.

**கேள்வி : இந்த விருது உங்களை எந்த வகையில் ஊக்கப்படுத்தியுள்ளது?**

**பதில் :** தமிழகத்தில் முதன்முறையாக இந்த விருது பெற்றது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. இந்த விருதுடன் ரூ. 5 லட்சம் ஊக்கத் தொகையாக வழங்கினார்கள். அது, பாலைப் பாக்கெட்டுகளில் அடைக்கும் இயந்திரம் வாங்கியது முதலான செலவுகளுக்கு மிகுந்த உதவியாக இருந்தது. இத்தொகை கிடைக்காதிருந்தால், இதற்காக நான் இன்னும் 7 – 8 மாதங்கள் பணம் திரட்ட வேண்டியிருந்திருக்கும். மைய அரசின் இந்தத் தொகை எனக்கு இந்தக் கால அவகாசத்தை மிச்சப்படுத்தியுள்ளது.

**கேள்வி : மாட்டுச் சாணத்தை என்ன செய்கிறீர்கள்?**

**பதில் :** மாட்டுச் சாணத்தை எங்கள் நிலத்திற்கு உரமாகப் பயன்படுத்துகிறோம். விவசாயிகளுக்கும் விற்பனை செய்கிறோம். இதனை வெறும் தொழு உரமாக மட்டுமல்லாமல், மண்புழு உரமாகவும் மாற்றி விற்பனை செய்கிறோம்.



அசோலா வளர்ப்புக் குட்டைகள்

**கேள்வி : வளரும் இளம் தொழிலதிபராக உள்ள நீங்கள், இத்துறைக்கு வர விரும்பும் அடுத்த தலைமுறையினருக்கு என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?**

**பதில் :** இத்தொழிலுக்கு வருபவர்கள் குறைந்தது 3 ஆண்டுகள் கடினமாக உழைக்க வேண்டியிருக்கும். அதற்குத் தயங்கக்கூடாது. பிற ஆட்களையே நம்பி இருக்கக்கூடாது. ஆள்கள் இல்லாத நிலையில் எந்த வேலையையும் செய்யத் தயாராக இருக்க வேண்டும், செய்ய வேண்டும். மாடு மேய்ப்பது கேவலம் என எண்ணக் கூடாது. நன்கு உழைத்தால் உறுதியாக வெற்றி பெறலாம்.

பேட்டி : **இரா. வேணுகோபாலகிருஷ்ணன்**

கட்டுரை

# நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் 9

# எனது ஈடுபாடு

பொதுவாக எந்த ஒரு பொருளும் பற்றாக்குறையாக இருக்கும்போது நிச்சயம் சண்டை சச்சரவுகள் ஏற்படும். அதுவே மிகையாக இருக்கும்போது சர்ச்சைகள் எழாது. இது நீருக்கும் பொருந்தும்.

நீர்ப் பற்றாக்குறை இருக்கும்போது சர்ச்சைகள், மாநிலங்களுக்கிடையில், மாவட்டங்களுக்கிடையில், ஏன் கிராமங்களுக்கிடையில்கூட ஏற்படும். நான் நீர்மேலாண்மைத் துறையில் இருந்தபொழுது நீருக்காகப் பல சண்டை சச்சரவுகளை நேரில் பார்த்தேன்.

அந்தச் சமயங்களில் நான் விவசாயிகளிடம் நேரில் சென்று இந்தப் பிரச்சனைகளைத் தீர்த்து வைத்தேன். நான் பொதுப்பணித் துறையில் பொறியாளராகத் தாமிரபரணி ஆற்றின் கடைமடைப் பகுதியான ஸ்ரீவைகுண்டத்தில் பணியாற்றிய போது, நீர் மேலாண்மையில் மிகவும் கடினமான பல தருணங்களைச் சந்தித்தேன்.

ஒருமுறை முக்கியக் கால்வாயில் தண்ணீர் திறந்து விட்டிருந்தோம். அந்தத் தண்ணீர் ஒவ்வொரு கண்மாயாக நிரம்பி அடுத்த கண்மாய்க்குச் செல்வதுபோல அமைப்பு இருந்தது. விவசாயிகள் ஒரு கண்மாயில் உள்ள மடையை அடைத்து விட்டார்கள். அதனால் தண்ணீர் அடுத்த கண்மாய்க்குச் செல்ல முடியவில்லை.

பொதுப்பணித் துறை பணியாளர்கள் எவ்வளவோ சொல்லியும் அடைப்பைத் திறக்க அவர்கள் மறுத்துவிட்டார்கள். நான் அந்த இடத்திற்கு நேராகச் சென்றேன். அங்கே நூற்றுக் கணக்கான விவசாயிகள் இருந்தார்கள். இதேபோல் முன்னொரு சமயம் இந்தப் பகுதியில் துப்பாக்கிச் சூடும் நடந்திருந்தது. நான் காவல்துறை தேவையில்லை எனத் துணைக் கண்காணிப்பாளரிடம் கூறிவிட்டேன். விவசாயிகளிடம் நிலைமையை விளக்கிக் கூறினேன். அப்போது துணை ஆட்சியர் சம்பவ இடத்திற்கு வந்து விட்டார். அவர் என் நண்பரும் கூட, அவரும் காவல்துறையின் உதவிக்கு உத்தரவிடவா? எனக் கேட்டார். நான் வேண்டாமெனக் கூறிவிட்டேன்.



பொறியாளர் ஏ.சி.காமராஜ்

சுமார் நான்கு மணி நேரம் விவசாயிகளிடம் பேசியதில் அவர்கள் கடைசியாக ஒப்புக் கொண்டார்கள். மறுகால் மடையில் போடப்பட்டிருந்த மண் தடுப்பு அகற்றப்பட்டது. அதன்படி கீழே உள்ள கண்மாய்க்குத் தண்ணீர் சென்றடைந்தது. இது போலப் பல சம்பவங்கள் நடந்தன.

ஒருநாள் சில விவசாயிகள் நள்ளிரவு 1 மணிக்கு எனது பங்களாவிற்கு வந்தார்கள். எனது பியூன் எடுத்துரைத்தும் அவர்கள் செல்ல மறுத்து விட்டார்கள். நான் எழுந்து சென்று அவர்களிடம் காலை 8 மணிக்கு வாருங்கள் சந்திக்கலாம் எனக் கூறினேன். உடனே சென்றுவிட்டார்கள்.

மறுநாள் காலை அவர்கள் வாகனங்களில் வந்தார்கள். நான் எனது வண்டியில் செல்ல, அவர்களை என்னைப் பின்தொடர்ந்து வருமாறு கூறினேன். தண்ணீர்ப் பற்றாக்குறை உள்ள சில வயல்களைப் பார்த்துவிட்டுக் கடம்பா குளத்தின் கரையிலுள்ள ஓய்வுவிடுதிக்கு வந்தோம்.

அப்பொழுது அவர்களின் குறைகளைக் கேட்டேன். அவர்கள் "நாங்கள் என்ன சொல்வது. எங்கள் நிலம்தான் வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ளது என்று நினைத்தோம். ஆனால் மற்ற பகுதிகளில் உள்ள நிலங்கள் மிகவும் மோசமாக உள்ளது. இருந்தாலும் எங்களுக்கு எப்பொழுது தண்ணீர் கிடைக்கும்?" என்று கேட்டார்கள்.

நான் நான்கு நாட்களில் தண்ணீர் கொடுப்பதாகக் கூறினேன். அவர்கள் திருப்தியுடன் சென்றுவிட்டார்கள். பொதுவாக நான் சொல்லிவிட்டால் உறுதியாகத் தண்ணீர் கொடுத்துவிடுவேன் என்ற நம்பிக்கை விவ

தொடர்ச்சி 94-ம் பக்கம்

சிறுகதை

# பேசும் கலப்பை

'காளை' என்று சொன்னால் ஔசேப் சேட்டன் எல்லா வற்றையும் மறந்துவிடுவார். அவருடைய சகாக்களில் சிலர் 'இப்படியொரு காளைப் பைத்தியக்காரன் உலகில் உண்டோ?' என்றுகூட அவரைப் பற்றிச் சொல்லிக் கொள்வதுண்டு. அவரது 'கண்ணன்' என்ற காளையைப் பற்றி ஆச்சரியப்படாதவர்கள் இருக்கமாட்டார்கள். கண்ணன், ஔசேப் சேட்டனின் உயிர் போன்றதாகும். நல்ல உடற்கட்டு, சாம்பல் நிறம், வெளியே பிதுங்கி நிற்கும் கண்கள். கண்ணன் நடப்பதைப் பார்க்கும்போது தனி அழகாகத் தோன்றும்.



கலப்பையில் பூட்டும்போதும் சரி, உழவு சம்பந்தப்பட்ட பிற வேலைகள் செய்யும்போதும் சரி, ஔசேப் சேட்டன் தன் மனதில் நினைப்பதைப் புரிந்து கொண்டு கண்ணன் செய்யத் தொடங்கி விடுவான். வேலை நேரங்களில் ஔசேப் சேட்டன் தார்க்குச்சியைக் கையில் எடுத்துக் கொண்டு அடிக்கப் போவதுபோல் 'பாவலா' காட்டுவாரே தவிர, இதுவரையில் கண்ணனைச் 'சுணக்கடி' அடித்தது கிடையாது.

உழும் இடங்களில் எத்தனைக் காளைகள் இருந்தாலும் சரி, அவற்றிற்கு வழிகாட்டும் வகையில் கண்ணன்தான் முதல் ஏராகச் சென்று தலைமை தாங்கி வழிநடத்துவது வழக்கம். ஓர் இடத்தை உழுது முடித்ததும், அடுத்து உழப் போகும் இடத்தைக் கண்ணனுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை; அது கண்ணனுக்கே தெரியும்!

அடுத்த உழவைத் தொடங்குவதற்கு முன்னால் ஔசேப் சேட்டன், கண்ணனிடம் 'எடா... நீ கொஞ்சம் நில். நான் வெற்றிலைப் போடட்டும், எவ்வளவு நேரமாச்சு, நான் வெற்றிலைப் போட்டு!' என்று சொல்லும்போது மட்டும்தான் கண்ணன் நிற்பான். வெற்றிலைப் போட்டு முடித்ததும் அவர் சொல்லுவார். அதைக் கேட்ட உடனே கண்ணன் வேலைக்கு ஆயத்தமாகி விடுவான்.

ஒரு வயலை உழுது முடித்துவிட்டு மறு வயலுக்குச் செல்லும்போது, வரப்பு ஓரமாகக் கண்ணன் மிகக் கவனமாகத்தான் நடப்பான். அவனுக்குத் தெரியும், வரப்பின் மீது ஓங்கி ஒரு மிதிவிட்டால், அது தகர்ந்து போகும் என்று.

சொன்னால் உடனே புரிந்துகொள்ளும் திறமையுள்ள கண்ணனை மறு உழவுத் தொடங்குவது வரையில், பிடித்துக் கொண்டு போய்க் கட்டிப் போட

**ஔசேப் சேட்டன் நாடியைத் தாங்கிப் பிடித்தவாறு ஊமையைப் போல் உட்கார்ந்து கொண்டிருந்தார். மனைவி பக்கத்தில் நின்று குதிக்கிறார்; மகள் சங்கடம் தாங்க முடியாமல் அழுகிறாள்.**

வேண்டிய தேவையில்லை. கட்டவிழ்த்துவிட்டு, 'இன்ன நேரத்திற்கு வந்திரணும் என்னா...?' என்று ஒரு தாக்கீது கொடுத்தாலே போதும்!

அதுபோல் உழுது முடித்துவிட்டு வயலை விட்டு வெளியேறியதும் குளித்து முடித்து உடலைச் சுத்தப்படுத்துவது என்பது கண்ணனுக்கு நிர்ப்பந்தமான காரியமாகும்.

ஔசேப் சேட்டனின் அன்பைப் பற்றித் தெரிந்த சில விவசாயிகள் கூறுவது உண்டு, 'எப்பேர்ப்பட்ட நோஞ்சான் காளையாக இருந்தாலும் சரி, ஔசேப் சேட்டன் தன் கையினால் தொட்டால் போதும், காளை அவன் கட்டுக்கு நின்றுவிடும்' என்று.

மலையாளம் மூலம் : பொன்குன்னம் வர்க்கி
தமிழில் : ஏ.எம். சாலன்



அவர், காளையிடம் ஒருவகை கொஞ்சல் மொழி பேசுவதுண்டு மட்டுமல்ல; ஔசேப் சேட்டன் தன்னுடைய நேரம் அத்தனையும் மாட்டிற்கு இரை தேடுவதிலேயே செலவிடக் கூடியவர்.

ஔசேப் சேட்டனைப் பொறுத்தமட்டில் தன் காளையின் வயிறு நிரம்பினால்தான் அவருடைய பசி அடங்கும். ஆடு, மாடுகள் தொழுவத்தில் பட்டினி கிடந்தால், அந்த விவசாயியின் வீடு சீரழிஞ்சு போகும் என்பது ஔசேப் சேட்டனின் நம்பிக்கை. கண்ணனுக்கு மரச்சீனிக் கிழங்கு கொடுத்தால்கூட ஔசேப் சேட்டன் அதைச் சின்னச்சின்னத் துண்டுகளாக, அழகாக நறுக்கித்தான் கொடுப்பார்.

அது எங்கேயாவது போய் மேய்ந்துவிட்டு உடம்பில் சகதியுடன் வீட்டிற்குத் திரும்பி வரும் வேளையில் ஔசேப் சேட்டன் சத்தம் போடுவார். 'எடா கண்ணா...' என்று.

அது, அவர் சத்தத்தைக் கேட்டதும் பக்கத்தில் செல்வது வரையில் தலையை உயர்த்திப் பிடித்துக் கொண்டு நிற்கும். வேறு ஒன்றுமல்ல; ஒரு பிடி பச்சைப்புல் அல்லது இரண்டு பழத் தொலி. இவை இரண்டில் ஏதாவது ஒன்றுடன்தான் அவர் அதன் அருகில் செல்வது வழக்கம். அவற்றை அவர் கையில் வைத்துத்தான் அது சாப்பிடும்.

ஔசேப் சேட்டன் அதைத் தொட்டுத் தடவும் வேளையில், பதிலுக்கு அது அவரை நாவால் நக்கித் தன் அன்பைக் காட்டும். அவர் உடம்பின் மீது உப்பாய்ப் படிந்திருக்கும் வியர்வை அதற்கு ரொம்பப் பிரியமானதாகும்.

எந்த மூலையில் நின்று ஔசேப் சேட்டன் அழைத்தாலும் சரி, அவருடைய குரலைக் கேட்டதும் கண்ணன் கண்டுபிடித்துவிடுவான். அதை ஓட்டும்போது இடி முழக்கத்தைக் கேட்டு ஆடும் மயிலினைப் போல் அவன், ஆனந்தம் அடைவான். கலப்பையில் பூட்டும் வேளையில் அவன் பின்னால் ஔசேப் சேட்டன்தான் நிற்க வேண்டும்! அவரைத் தவிர வேறு யாராவது பின்னால் நின்றால், அவன் பிரச்சினைப் பண்ணுவான். அதைச் சரிப்படுத்த வேண்டுமானால், ஔசேப் சேட்டன்தான் வர வேண்டும்.

ஒருநாள் ஒரு நிகழ்ச்சி நடந்தது. துண்டத்து வீட்டைச் சேர்ந்த கேளனின் மகன் பாச்சன் அன்று கலப்பைப் பிடித்திருந்தான். ஜூரம் வந்ததினால் ஔசேப் சேட்டன் அன்று உழுவதற்குப் போக இயலாமல் படுக்கையில் விழுந்து கிடந்தான். ஒரேயொரு காளை இல்லையென்றால், அன்று கேளனின் வயலில் உழவு நடக்காது. எனவேதான் 'என்ன ஆனாலும் ஆகட்டும்' என்று நினைத்துக் கொண்டு ஔசேப் சேட்டன் கண்ணனையும் கூட்டுக்காரனையும் விட்டுக் கொடுக்கத் தீர்மானித்தான்.

பிற மாடுகளுடன் கண்ணன் அன்று வயலில் இறக்கப்பட்டான்.

ஒரு 'சால்' உழுது முடிக்கப்பட்டிருந்தது. அடுத்ததைத் தொடருவதற்கு முன்னால் ஒரு 'ஹம்மிங்' தேவை என்று பாச்சனுக்குத் தோன்றியது. உடனே கண்ணனுக்குப் பின்னால் நின்றபடி ராகத்தோடு கூடிய ஒரு ஹம்மிங்! சங்கீதம் என்பது அவன் அருகில்கூடச் சென்றது கிடையாது!

அந்தத் தரங்கெட்ட ராகத்தைக் கேட்டதும் கண்ணனுக்குச் சொல்ல முடியாத அளவுக்கு வெறுப்பு ஏற்பட்டது. கண்ணன் தலையைப் போட்டு ஆட்டியவாறு தன் எதிர்ப்பைக் காட்டினான். பாச்சன் அதைப் பொருட்படுத்தவில்லை. கண்ணன் தன் இசையில் மயங்கி நிற்பதாகப் பாச்சன் நினைத்துக் கொண்டான்.

பாச்சன் தன் பாடலை நிறுத்திய பாடில்லை. தொண்டையைத் திறந்து சங்கீதத்தை அவமானப் படுத்திய பாச்சனின் வலதுகால் முட்டியில ஓர் உதை கொடுத்தது. அந்த உதையில் சங்கீதம் பாடியவன் மூன்று நாட்கள் வரையில் வீட்டில் தைலம் தடவிக் கொண்டு கிடக்கும்படியாயிற்று.

**க**ண்ணன் இவ்வாறு கிட்டத்தட்ட பத்துப் பன்னிரெண்டு ஆண்டுகள் வரை ஔசேப் சேட்டனின் குடும்பத்திற்காக வேண்டி உழைத்துக் கொண்டிருந்தான். இவற்றுக்கிடையே இரண்டு அறுவடைக் காலமும் கடந்து போனது.

இவ்வாறு சமூகத்தில் என்னென்ன மாறுதல்கள் எல்லாமோ நிகழ்ந்து கொண்டிருந்தன.

மனிதனை மனிதன் சுரண்டும் காலம் வரப் போகிறது என்ற பேச்சு ஆங்காங்கே கேட்க ஆரம் பித்திருந்தது. மனிதர்கள் உள்ளது உரியதையெல் லாம் விற்க வேண்டிய சூழ்நிலைக்கு ஆளாகலாம் என்ற பேச்சும் அடிபட்டது. ஆனால், அவையெல் லாம் இப்போது நிகழ ஆரம்பித்துவிட்டன!

ஔசேப் சேட்டனுக்குத் தன் பிரியமானக் காளையை விற்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற் பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல, தனக்கும் தன் குடும்பத்திற்கும் காலம் காலமாகச் ‘சோறு’ போட்டு கொண்டிருந்த ஏரிக்கரையோர நிலத் தையும் ஔசேப் சேட்டன் விற்க வேண்டிய சூழல் வந்தது.

அவருக்குக் கொஞ்சம்கூட அதை விற்பதற்கு விருப்பம் கிடையாது! ஆனால், வேறு வழியில்லை, திருமணம் செய்து கொடுக்க வேண்டிய வயதி லுள்ள ஓர் இளம்பெண்ணின் தந்தையல்லவா ஔசேப் சேட்டன்! அவர் தன் மகளைத் திருமணம் செய்து கொடுப்பதற்காக – கொடுக்க வேண்டிய வரதட்சணைக்காக வயலை 15000 ரூபாய்க்கு விற்றார்.

இது வரதட்சணைக்குப் போதும்! இனித் திருமணச் செலவுக்காக அவர் வேறு காசு தேட வேண்டும். எவ்வளவுதான் அன்பு செலுத்தி வளர்த்து வரக்கூடியதாக இருந்தாலும், இப்போது காளையை விற்பதைத் தவிர ஔசேப் சேட்டனுக்கு வேறு வழியே இல்லை!

பத்து, இருபது வருடங்களாக இரவும் பகலும் வேலை செய்துவரும் ஒரு விவசாயி அவர். அதனால் என்ன பயன்?

‘ஔசேப் சேட்டனின் தலைமுடி நரைத்து விட்டது. கண்பார்வை மங்கிற்று. தோல் சுருக்கம் விழுந்துவிட்டது. தினமும் வாதநோய் வேறு அவ ருக்குத் தொல்லைக் கொடுத்துக் கொண்டி ருந்தது. கத்தியால் குத்தினால்கூட இறங்காத அளவுக்குக் கலப்பைப் பிடித்து அவருக்குக் கைகளில் தழும்பு ஏற்பட்டிருந்தது. இருந்தாலும் அந்தப் பழைய கலப்பையின் உதவியினால்தான் அவர் இன்னமும் தன் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தார். என்ன செய்வது? கண்ணனை விலை பேச வேண்டிய சூழல் வந்துவிட்டது.

காசை வாங்கிக் கொண்டு கண்ணனை விட்டுக் கொடுக்கும்போது, ஔசேப் சேட்டனால் அந்த இடத்தில் நிற்க இயலவில்லை.

தன் உயிருக்கு நிகரான இரட்சகனைக் காண்பதற்காக வேண்டி கண்ணன் தலையை உயர்த்தி அங்கும் இங்கும் பார்த்தான். ஏதோ குழப்பம் ஏற்படப் போகிறது என்றெண்ணிய கண்ணன், தன் இரட்சகனைக் காணாததினால், ஒன்று இரண்டு அலறல்!

ஆனால், அதே வேளையில் ஔசேப் சேட்டன், வீட்டு முற்றத்தில் தெற்கே நிற்கும் பலா மரத்தின் அடியில் நின்று கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தார். அவரால் ஒரு வார்த்தை கூடப் பேச இயலாத நிலை. பிரிந்து செல்லும் வேளையில் இரு இதயங்களுக்குள் ஏற்படும் வலிதான் அன் பின் அடிப்படை என்று வைத்துக் கொண்டால், ஔசேப் சேட்டனையும் கண்ணனையும் போல் ஒருவருக்கு ஒருவர் அன்பு செலுத்தக்கூடிய ஜீவன்கள் இவ்வுலகில் வேறு எவரும் இருக்க முடியாது!

**ஊ**ரிலுள்ள காடு, கரைகளெல்லாம் மழை யின்றிக் காய்ந்து, கருகிக் கொண்டிருந்தன. ஊரி லுள்ள மக்கள் பஞ்சம் பிழைப்பதற்காக வயநாட்டி லுள்ள காடுகளைப் பார்த்துச் செல்ல ஆரம் பித்தார்கள்.

‘இதுவரையில் ஒருவரும் சொல்லிக் கேட் காத ஊரு. கூடப் பொறந்ததுகளோ, சொந்தபந்தங் களோ ஓர் ஆத்திர அவசரத்திற்குத் திடீரென்று வந்துசேர முடியாத இடம்... இதையெல்லாம் தெரிஞ்சுகிட்டு ‘ஔசேப் மாப்புள்ளை, என்ன செய்யப் போறெ...?’ பக்கத்து வீட்டுக் கிட்டு வாத்தியார் கேட்டார்.

‘நான் என்ன செய்யிறது கிட்டு சாரே....? என்னுடைய வயலு, நல்ல சத்தான மண்ணுள்ள வயலுலா? தினந்தோறும் சென்று மண்வாச னையை நுகரலன்னா எனக்குத் தூக்கம் வராதே...’ ஔசேப் கூறினார்.

கவலை நிறைந்த அந்த விவசாயியின் வாழ்க்கை லட்சியம் இல்லாமல் வீசும் காற்றைப் போல் திசை தெரியாமல் போய்க் கொண்டிருந்தது.

இன்று போகலாம், நாளை போகலாம் என ஔசேப் சேட்டன் நாட்களைத் தள்ளிப் போட்டுக் கொண்டே இருந்தார்.

அப்படிப் பிறரைப் போல் அவரால் பார்த்தும் பார்க்காமலும் போக இயலாது. காரணம், அவர் கையிலுள்ள 7 சென்ட் இடத்தை விற்பனை செய்ய வேண்டும்.

அது மட்டுமல்ல, ஔசேப் சேட்டனின் மகள் கேதரீன் குட்டி கர்ப்பமுற்றிருந்தாள். அப்பெண் ணுக்கு வளைகாப்புச் சடங்கு நடத்தி, அதுக்குப் பிறக்கப் போகும் பேரப் பிள்ளைகளையும் பார்த்து

விட்டுச் செல்ல வேண்டும் என்ற ஆசையும் இருந்தது அவருக்கு.

கிருத்தவ மக்களுக்கு அன்று நோன்பு முடியும் நாளாக இருந்தது. அந்த நாளில் எவ்வளவு ஏழையானக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, ஆப்பம் சுடுவதும், கறியும் சோறும் சமைப்பதுமாக எல்லா வீடுகளும் களைகட்டி இருக்கும்! ஆனால், ஔசேப் சேட்டன் வீட்டின் ஒரு மூலையில் பெருமூச்செறிந்தபடி உட்கார்ந்து கொண்டிருந்தார்.

மாட்டுத் தொழுவத்தில் கூரை முகட்டில் கட்டி வைத்திருந்த ஒட்டடைப் பிடித்தக் கலப்பையைக் கண்டதும் அவர் பெருமூச்செறிகிறார்.

'கண்ணனைப் போல் காளையையும் வயலையும் இந்தக் கலப்பையையும் இனி என் வாழ்வில் காண முடியுமா? அப்படிப்பட்ட சந்தோசமான நாட்கள் இனி வருமா?'

சிந்தனைகள் பல தோன்றி ஔசேப் சேட்டனின் மனத்தில் குழப்பத்தை உண்டுபண்ணின. இம்மாதிரி விஷயங்களைப் பற்றியெல்லாம் அவரது மனைவி மரியா ஔசேப் சேட்டனின் அருகில் உட்கார்ந்து பேசியிருக்கிறார். தங்கள் மகளுக்குச் செய்யவிருக்கும் பிரசவச் செலவையும் மற்றச் செலவுகளையும் மறுநாள் அவளைக் கணவன் வீட்டுக்கு அனுப்புவதற்கு ஆகும் செலவைப் பற்றியும் பேசி இருக்கிறாள்.

அந்த வேளையில் தன் பேரப் பிள்ளைக்கு அரையில் கட்ட ஓர் அரைஞாண் கொடியும், ஒரு சட்டையுமாவது எடுத்துக் கொடுக்க வேண்டும். குடும்பத்திலுள்ள கஷ்டத்தின் காரணமாக மகள் கேத்ரீனாவுக்கு இதுவரையில் நல்ல சட்டையும், ரவிக்கையும் கூட வாங்கிக் கொடுக்க இயலவில்லை.

எது எப்படியானாலும் சரி, மூன்று சட்டையும், வேட்டியும் (கேரளத்திலுள்ள கிருத்தவப் பெண்கள் வெள்ளை வேட்டியும், இடுப்பு வரையுள்ள வெள்ளைச் சட்டையும்தான் அணிவது வழக்கம்) அவளுக்குக் கொடுத்தே ஆக வேண்டும். அலமாரி, கறவைப் பசு, இனிப்புப் பண்டங்கள் முதலியவற்றையாவது ஒதுக்கித் தள்ளிவிடலாம்! கொடுக்க வேண்டிய அத்தியாவசியமானப் பொருட்களை வாங்கிக் கொடுத்துவிடாமல் இருக்க முடியுமா?'

இப்படி அவர் சிந்தித்துக் கொண்டிருந்த போது லாட்டரி பரிசு அடித்தது மாதிரி அவருடைய வாழ்வில் ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. சில மாதங்களுக்கு முன்னால், ஔசேப் சேட்டனுக்குத் தெரியாமல் அவர் மனைவி மரியா குலுக்கல் முறையிலான ஒரு சீட்டுச் சேர்ந்திருந்தார். அது இப்பொழுது அவருக்கு விழுந்திருந்தது. ஔசேப் சேட்டனுக்கு இது தெரியாது!

அவர் உட்கார்ந்து கவலைப்பட்டுக் கொண்டிருந்த போதுதான், மரியா வந்து விஷயத்தைச் சொன்னார். 'நீங்க, ஒரு முனிவரைப் போல இப்படி வந்து உட்கார்ந்துகிட்டு இருந்தீங்கன்னா, நடக்க வேண்டிய காரியங்களெல்லாம் நடந்துருமா? நாளைக்கு நம்ப புள்ளையெ அவக் கணவன் வீட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டாமா? நான், ஒரு மாசச் சீட்டுச் சேர்ந்திருந்தேன். அது எனக்கு விழுந்து நாலாயிரம் ரூபாய் கிடைச்சிருக்குது. நீங்க கோட்டயத்துக்குப் போய் புள்ளைக்குத் தேவையானதையெல்லாம் வாங்கிட்டு வாங்கோ!'

அதைக் கேட்டபோது ஔசேப் சேட்டனுக்குக் கொஞ்சம் மன ஆறுதலாக இருந்தது.

'புத்திசாலிப் பொண்ணு!'

அவர் தன் மனைவியை வாயாரப் புகழ்ந்து கொண்டார்.

'இப்பவே போறன்; அந்தக் குடையை எடு.'

அவர் துணியை மாற்றிக் கொண்டு கோட்டயத்திற்குக் கிளம்பினார்.

பின்னால் நின்று அவர் மனைவி குரல் கொடுத்தார். 'வீட்டுக்கரம் இன்னும் அடைக்கலை; கையோடு அதையும் அடைச்சிட்டு வந்திருங்கோ!'

ஔசேப் சேட்டன் மடியில் பணமும், கையில் குடையுமாய் வெளியே இறங்கி நடந்தார்.

நோன்பு முடிந்த வேளையானதினால் கோட்டயத்தில் நல்ல ஜன நெரிசலாக இருந்தது. கிருத்தவ வியாபாரிகளின் கடைகள் அனைத்தும் மூடிக் கிடந்தன. ஔசேப் சேட்டன், திறந்து வைத்திருந்த ஜவுளிக்கடைகளைத் தேடிப் பிடித்து, ஒவ்வொரு கடையாக ஏறி, இறங்கி விலைகளைப் பற்றி விசாரித்துப் பார்த்தார்.

அவர் குறைந்த விலைக்குத் துணி விற்கும் கடைகளைத் தேடி நடந்தார். நடந்து நடந்து கடைசி யில் அவர், முனிசிபாலிடி கட்டடத்தின் வாசல் பக்கமாக வந்து சேர்ந்தார்.

சுவருக்கு வெளியே கொஞ்சம் காளைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. எல்லாம் எலும்பும் தோலுமாகவும், வால் இரண்டும் மூன்றாக ஒடிந்

ததும், வண்டி இழுத்து கழுத்தில் தழும்பு ஏற்பட்டதும், உடல் சிறியதும் கொம்புகள் பெரியதுமாகப் பல மாடுகள் அங்கே நின்று கொண்டிருந்தன. எல்லா மாடுகளின் மீதும் முனிசிபாலிடி முத்திரைக் குத்தப்பட்டிருந்தது.

நடந்தவாறே இவற்றையெல்லாம் கவனித்துக் கொண்டு வந்த ஔசேப் சேட்டன் திடீரென்று நின்றுவிட்டுப் பின்னர் வடக்கைப் பார்த்து நடந்தார். அங்கே அவர் கண்ட காட்சி அவரை நிலைகுலைய வைத்தது.

பார்வை மங்கி எலும்பும் தோலுமாக நின்று கொண்டிருந்த 'அடிமாடு' ஒன்று விழிகளை மூடாமல், அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறது.

அந்த முதியவரின் இதயத்திற்குள் தீப்பற்றி எரிகிறது. கண்கள் இருளடைவதுபோல் தோன்றுகிறது. உடல் நடுங்குகிறது.

'ஆம்... அது நம் கண்ணனேதான்! கண்ணா...!'

அவருடைய இதயத்தின் அடியிலிருந்து குரல் மேலெழுந்து வருகிறது.

ஒரு குதி! அவ்வளவுதான்; அவர் தன் காளையின் அருகில் வந்து நின்று கொண்டிருந்தார். அவரது குரலைக் கேட்டதும் அந்தக் காளை அவரைக் கனிவோடு பார்த்தது.

நமக்கு மீண்டும் வாழ்வு கிடைக்கப் போகிறது என்று அது நினைத்திருக்கக் கூடும். பின் தலையை உயர்த்தி அது நாலாபுறமும் பார்த்தது.

'எடா மகனே... என்னை உனக்குத் தெரிகிறதா? இந்தக் கோலத்தில் உன்னைப் பார்க்கும்படி ஆயிற்றே....!'

அவர், அந்த மாட்டைத் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டு அதன் புருவங்கள், நெற்றி, உடல் முதலியவற்றின் மீது அன்பாக வருடிக் கொடுத்தார். அது அவர் கைபட்டதும் மகிழ்ச்சியில் தன் வாலை உயர்த்திற்று.

சப்தம் வெளியே கேட்காதபடி அது உள்ளுக்குள் அலறியது.

கண்ணனின் உடலில் முத்திரை குத்தப்பட்டிருக்கிறதா என்று பார்த்தார். ஆம், ஒரு கையளவுக்கு முத்திரை பதிக்கப்பட்டிருக்கிறது.

வெகு நேரமாயிற்று.

'எடீ பெண்ணே... விளக்கு வைக்கிறதுக்கு முன்னால நீ, வீட்டைப் பெருக்கு!'

தாய், மகளிடம் சொன்னார்.

'அப்பா வர ஏம்மா இவ்வளவு நேரமாகுது...?' மகள் சோர்ந்து போனாள்.

'ரொம்ப தூரம் போனதில்லையா, வருவாரு! நீ போய் விளக்கு வை.' தாய் மகளைச் சமாதானப்படுத்தினார்.

'சாதாரணமா கோட்டையத்துக்குப் போயிட்டு வர இவ்வளவு நேரமாகாதே?'

கோடித் துணிகளைக் காணும் ஆவலில் தாயும் மகளும் வெளியே எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டார்கள்.

மகள் விளக்கு வைத்தாள்.

ஔசேப் சேட்டன் இன்னும் வந்து சேரவில்லை.

கீழே தாழ்வாரத்தில் அனக்கம் கேட்டது.

'ஏ... அம்மா... அப்பா வர்றாரு, அது அப்பாவேதான்!'

கேத்ரீனாவுக்குச் சந்தோஷம் தாளவில்லை.

இரவோடு இரவாக ஔசேப் சேட்டன் வாங்கிக் கொண்டு வரும் துணிகளை நேரம் விடிவதற்கு முன்னால் கேத்ரீனாவுக்கு அவன் வைத்துக் கொடுக்க வேண்டும்! அந்தப் பெண்ணுக்குக் காலையில் தன் கணவன் வீட்டுக்குப் போக வேண்டும்!

துணிக் கட்டுகளைக் காண்பதற்காக வேண்டி காத்து நின்று கொண்டிருந்தவர்களின் கண்களுக்கு முன்னால் அந்தக் குடும்பத் தலைவன் பழைய காளையை இழுத்துக் கொண்டு வந்தார்.

'அய்யோ, இது நம்ம கண்ணன்!' கேத்ரீனா ஆச்சரியத்தில் சத்தம் போட்டாள்.

'துணிகள் எங்கே?'

மரியா கேட்டார்.

பழைய இடத்திற்கு வந்து சேர்ந்ததும் கண்ணன் 'ம்மா...' என்றொரு அலறல்.

தொடரத் தொடரப் பல கேள்விகள் அங்கே எழுந்தன.

ஔசேப் சேட்டன் நாடியைத் தாங்கிப் பிடித்தவாறு ஊமையைப் போல் உட்கார்ந்து கொண்டிருந்தார். மனைவி பக்கத்தில் நின்று குதிக்கிறார்; மகள் சங்கடம் தாங்க முடியாமல் அழுகிறாள்.

இத்தனை சம்பவங்கள் நடந்த பிறகும்கூட

ஔசேப் சேட்டனின் வாயிலிருந்து ஒரு வார்த்தைக் கூட வெளியே வரவில்லை. அவர் உடம்பு வேர்வையினால் ‘பொத்து பொத்’ தென நனைந்து போயிருந்தது.

‘அப்பா, நீங்க இப்படிச் செய்வீங்கன்னு நான் நெனைச்சிக்கூடப் பார்க்கலை!’

கேத்ரீனா அழுது கொண்டே கூறினாள்.

‘மகளே...’

அவர் இடறியக் குரலில் பேசத் தொடங்கினார், ‘உன்னைப் போல்தான் எனக்கு அவனும்! கசாப்புக் கடைக்காரன்...’ மீதி வார்த்தைகளை அவரால் சொல்ல இயலவில்லை. துண்டை எடுத்து அவர், கண்களைத் துடைத்துக் கொண்டார்.

கவலையினால் அன்றிரவு நகர மறுப்பது போல் இருந்தது. அவர்கள் தூங்குவதற்கு நீண்ட நேரமாயிற்று.

கிழக்கு வெளுத்து விட்டது.

கண்ணனின் காயத்தில் பூசுவதற்காக வேண்டி ஒரு மூலிகை மருந்தைத் தயாராக்கி எடுத்துக் கொண்டு ஔசேப் சேட்டன் தொழுவத்திற்குச் சென்றார்.



அங்கே தன் நான்கு கால்களையும் நீட்டி நிமிர்த்தியவாறு கழுத்தை மேலே தூக்கிப் பிடித்து கண்ணன் கீழே சாய்ந்து கிடக்கிறான்!

‘எடா, கண்ணா...’

ஔசேப் சேட்டன் அன்போடு அழைத்தபடி உள்ளே நுழைகிறார்.

ஆம், கண்ணன் தன் மீது அன்பு செலுத்தியவர்களைப் பிரிந்து ‘மேலே’ போய்ச் சேர்ந்து விட்டான். இனி, அவனால் பதில் குரல் கொடுக்க இயலாது! ஒருபோதும் அவன் இனி எழுந்திருக்கப் போவதில்லை. ஒருவேளை அவன் ராசிகெட்டத் தன்னால் இனி அந்தக் குடும்பத்திற்குள் எழும் பிரச்சினைகளைக் காண வேண்டாம் என்றெண்ணி, தன் உயிரை மாய்த்துக் கொண்டானோ என்னவோ!

அப்போது கண்ணனின் சடலத்திற்கும், துயரத்தில் ஆழ்ந்து போயிருந்த அந்த விவசாயிக்கும் மேலே, கூரை முகட்டில் கட்டி, மாட்டி வைத்திருந்த ஒட்டடைப் பிடித்த கலப்பையின் மீது உட்கார்ந்து கொண்டிருந்த பல்லி ஒன்று விசித்திரமான ஒலியை எழுப்பிக் கொண்டிருந்தது.

•

# இராமலிங்கர் பணி மன்றம், சென்னை



அமரர் அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் நினைவாக





வளரும் சக்தி

வள்ளலார் - காந்தி இலக்கியப் பரிசுகள்



**பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியர்க்கு மாநில அளவிலான கலை இலக்கியப் போட்டிகள் 2018**

## பரிசுகள்

| | மண்டல அளவில் | மாநில அளவில் |
|---|---|---|
| முதல் பரிசு | ₹5,000 | ₹10,000 |
| இரண்டாம் பரிசு | ₹3,000 | ₹ 7,500 |
| மூன்றாம் பரிசு | ₹2,000 | ₹ 5,000 |

# போட்டிகள்

## கல்லூரிகளுக்கு (இளநிலை முதுநிலை பயில்பவர்கள் மட்டும்)

### கட்டுரைப்போட்டி
*கால அளவு 60 நிமிடங்கள்*

*தலைப்பு:*

ஒளி வழிபாட்டில் ஓங்கும் தத்துவம் (அல்லது) அருளியல் நெறியில் அண்ணலும் வள்ளலும்

*[ஏதேனும் ஒரு தலைப்பில் எட்டுப் பக்கங்களுக்குள்]*

### கவிதைப்போட்டி
*கால அளவு 60 நிமிடங்கள்*

*தலைப்பு-அரங்கில் வழங்கப்படும் [24 வரிகள்/2 பக்கங்கள் ]*

### பேச்சுப்போட்டி
*கால அளவு 5 நிமிடங்கள்*

*தலைப்பு:*

உயிர்க் கருணையே சன்மார்க்கம் (அல்லது) வடலூர் விளக்கில் காந்திய வெளிச்சம்

## பள்ளிகளுக்கு (9 முதல் 12ம் வகுப்பு வரை)

### இசைப்போட்டி
*கால அளவு 5 நிமிடங்கள்*

திருவருட்பா – 6 ஆம் திருமுறை – அபயத் திறன் (முதல் 10 பாடல்களில் ஏதேனும் 1 அல்லது 2)

*தனி நபராகவோ/இருவர் கொண்ட குழுவாகவோ பங்கேற்கலாம்*

### மனனப்போட்டி

திருவருட்பா – 6 ஆம் திருமுறை – முறையீடு (10 பாடல்கள்)

### பேச்சுப்போட்டி
*கால அளவு 5 நிமிடங்கள்*

*தலைப்பு:*

வள்ளுவர் வழியும் வள்ளலார் மொழியும் (அல்லது) பாரதி கவிதையில் மிளிர்வது காந்தியமே

**விதிமுறைகளுக்கு இணையதளத்தைப் பார்க்கவும்**

## மண்டல அளவில் போட்டிகள் நடைபெறும் மையங்கள்

| | |
|---|---|
| **தஞ்சாவூர்** 28.07.2018 சனி, மருதுபாண்டியர் கல்லூரி (கலெக்டர் அலுவலகம் அருகில்) 257, திருச்சி மெயின்ரோடு வல்லம் அஞ்சல் தஞ்சாவூர் 613 403 தொ.பே. 04362 – 266791 | **விழுப்புரம்** 29.07.2018 ஞாயிறு, இராமகிருஷ்ணா வித்யாலயா மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி இராமகிருஷ்ணாபுரம், எண். 29, பூந்தோட்டம், விழுப்புரம் - 605 602 தொ.பே. 04146-222033 |
| **மதுரை** 04.08.2018 சனி, தியாகராசர் கல்லூரி 139-140, காமராஜர் சாலை, மதுரை - 625 009 தொ.பே.0452 2311875 | **சென்னை** 05.08.2018 ஞாயிறு, சாவித்திரி அம்மாள் ஓரியண்டல் மேல்நிலைப் பள்ளி (சென்னை சமஸ்கிருத கல்லூரி பின்புறம்) 84, ராயப்பேட்டை ஹை ரோடு, மயிலாப்பூர், சென்னை - 600 004 தொ.பே.044 24981176 |
| **சேலம்** 11.08.2018 சனி, பெரியார் பல்கலைக்கழகம் பெரியார் பல்கலை நகர், சேலம் - 636 011 தொ.பே.0427 234 5766 | **திருநெல்வேலி** 12.08.2018 ஞாயிறு, லிட்டில் பிளவர் மாடல் பள்ளி சேரன்மகாதேவி ரோடு, (கோடீஸ்வரன் நகர் எதிர்புறம்), நெல்லை நகரம் 627 006 தொ.பே. 0462 – 2334771 |
| **கோவை** 18.08.2018 சனி, Dr.N.G.P.கலைஅறிவியல்கல்லூரி காளப்பட்டிரோடு,நேருநகர், கோவை-641048 தொ.பே.0422 2369252 | **திருச்சி** 19.08.2018 ஞாயிறு, கி. ஆ. பெ. விஸ்வநாதம் மேல்நிலைப்பள்ளி (மக்கள் மன்றம் அருகில்) தில்லை நகர், திருச்சி - 18 தொ.பே.0431 2760812 |

**2 நாள் பயிலரங்கம்** மண்டல அளவில் ஒவ்வொரு போட்டியிலும் முதல் 10 இடங்களைப் பெறுபவர்கள் சிறப்புப் பயிலரங்கத்தில் பங்கேற்க வாய்ப்பினைப் பெறுவார்கள். வரும் டிசம்பர் 2018இல் பொள்ளாச்சி டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரியில் இருநாள் பயிலரங்கம் நடைபெறும்.

முழுமையாகப் பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பத்தை மின்னஞ்சல் மூலமாகவோ (அல்லது) கீழ்க்கண்ட முகவரிக்கோ அனுப்பவும்

**விண்ணப்பங்கள்** போட்டி நடைபெறும் தினத்திற்கு 5 நாட்களுக்கு முன்னதாக வந்து சேரவேண்டும்

*இராமலிங்கர் பணி மன்றம்*
*டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி,*
*உடுமலை ரோடு, பொள்ளாச்சி - 642 003*
*அலைபேசி:* 94456 37190 • 99761 44451

மின்னஞ்சல் ramalingar@mcet.in
விண்ணப்பம் மற்றும் தகவல் பெற www.mcet.in

ஊடகத் தோழமை



தினமலர் | தினமணி | ஓம்சக்தி | செய்தி மடல்

# தனிமையில் புலம்பும் வீடு!

பூ.அ. இரவீந்திரன்

வருத்தம் தோய்ந்த முகத்துடன்
ஒருக்களித்துப் படுத்திருக்கிறது
பார்பி பொம்மை

அறையை வண்ணங்களால் நிரப்பிய
பலூன்கள்
வேகமாகச் சுழன்ற மின்விசிறியால்
மூலையில் ஒதுங்கிக் கொண்டன

முகத்தைத் தொங்கப் போட்ட நிலையில்
கண்களை மூடிக்கொண்டு
சோபாவில் படுத்திருக்கிறது
சாம்பல்நிறப் பூனை



அழகு ததும்பும்
சின்னச்சின்ன சமையல் பாத்திரங்கள்
பெரும் பசியுடன்
சோர்ந்துபோய்க் கிடக்கின்றன

மிகவும் பாதிக்கப்பட்டது
கரடிப் பொம்மைதான்

பொய்ச்சண்டை கோபம் மற்றும்
அவிழ்ந்து மலரும் மகிழ்ச்சி
இவற்றால்
கலகலப்பாய் இருந்த வீடு
இன்று
தனிமையில் புலம்புகிறது

எல்லோரும் சேர்ந்து
தமிழ்நதியைப்
பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிட்டார்கள்!



*85–ம் பக்கத் தொடர்ச்சி*

சாயிகளிடம் இருந்தது.

தண்ணீர்ப் பற்றாக்குறை எங்களுக்கு ஒரு படிப்பினையைக் கொடுத்தது. நெற்பயிரைப் பொறுத்தவரை நட்டு சில நாட்கள் கழித்து வயல் நன்குக் காய்ந்து பிறகு தண்ணீர்விட்டால் விளைச்சல் நன்றாக இருக்கிறது. சுமார் 25% கூடுதலாக மகசூல் கிடைக்கிறது. வறட்சியின் பொழுது சச்சரவுகள் வருகின்றன. அதை நாம் புரிந்து கொண்டு விளக்கிச் சொன்னால் பிரச்னை இல்லை. விவசாயிகளும் புரிந்து கொள்கிறார்கள். இதுமாதிரியான சோதனைகள் வரும்பொழுது அதற்கு என்ன தீர்வு என்று நான் சிந்தித்துக் கொண்டே இருந்தேன்.

தூத்துக்குடி மாவட்டத்தில் உதவிப் பொறியாளராகப் (தற்போது உதவி செயற்பொறியாளர்) பணியாற்றியபோது அங்குத் தண்ணீர் பங்கீட்டில் ஏராளமானப் பிரச்சனைகள் இருந்தது என்று ஏற்கனவே கூறியிருந்தேன். தண்ணீர்ப் பிரச்சினைகளைக் கையாண்டபோது, எனக்குக் கிடைத்த அனுபவத்தைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன். ஒருமுறை அங்குள்ள கடம்பா கண்மாய்க் கரையை உடைத்து கீழ்மடைப் பகுதிகளுக்குத் தண்ணீர் கொடுக்க வேண்டியிருந்தது.

**கடம்பா நிகழ்வு**

தாமிரபரணியிலிருந்து வரும் தெற்குப் பிரதானக் கால்வாயில் கடம்பா கண்மாய் மிகப் பெரியது ஆகும். தெற்குப் பிரதானக் கால்வாய் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து பிரிந்து பல கண்மாய்களுக்குத் தண்ணீர் நிரப்பும். அதில் கடம்பா கண்மாயும் ஒன்றாகும். ஒருமுறை கடம்பா கண்மாய்க் குட்பட்ட அனைத்து நிலங்களிலும் நெற்பயிர் முழுமையான வளர்ச்சியடைந்து அறுவடையும் முடிந்தது.

அதேசமயம் கீழ்ப் பகுதியில் சுமார் 2000 ஏக்கர் நெற்பயிர் நிலங்களுக்கு ஒரிரு முறை தண்ணீர் கொடுக்க வேண்டியிருந்தது. அந்த நிலங்களுக்குத் தண்ணீர் கொடுத்தால்தான் பயிரைக் காப்பாற்ற முடியும் என்கிற சூழ்நிலையிருந்தது. அதற்கு ஒரே வழி கடம்பா கண்மாயில் எஞ்சியிருக்கும் நீரைக் கீழ்ப்பகுதி நிலங்களுக்குக் கொண்டு செல்வதாகும். அப்படிச் செய்ய வேண்டுமானால், குளத்தின் கரையை மறுகால் அருகில் தோண்டித்தான் தண்ணீரைக் கீழே கொண்டு போக முடியும்.

ஆனால், கடம்பா கண்மாய் பாசானதாரர்கள் கண்மாய்த் தண்ணீரைக் கொடுக்கத் தயாராக இல்லை. என்ன செய்வது? கீழ்ப் பகுதிகளுக்குத் தண்ணீர் கொடுத்தே ஆகவேண்டும். அதற்குக் கண்மாய்க் கரையை உடைத்துதான் கீழ்ப் பகுதிகளுக்குத் தண்ணீரைக் கொண்டு சென்று பயிர்களைக் காப்பாற்ற முடியும். எனது மூத்த அதிகாரியான செயற்பொறியாளர் அவர்களுடன் ஆலோசனை செய்தேன். அவரும் அதற்குச் சம்மதம் தெரிவித்தார். ஆனால் கடம்பா கண்மாய்ப் பாசனதாரர்கள் இதற்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.

எனவே இது குறித்து திருநெல்வேலி மாவட்ட ஆட்சித் தலைவரிடம் ஆலோசனை செய்தோம். அவரும் அதை ஒப்புக்கொண்டு, இந்த நடவடிக்கையைச் செயல்படுத்துங்கள் என்று கூறினார். அதற்கு நான் "ஐயா, இதற்குப் பெரும் கிளர்ச்சி ஏற்படும். கடம்பா விவசாயிகள் சுமார் 52 கிராமங்களில் இருக்கிறார்கள். நமது நடவடிக்கைத் தொடர்ந்தால் மிகப் பெரும் எதிர்ப்புக் கிளம்பும். நமது திட்டத்தைச் செயல்படுத்த முடியாது. ஆகவே அரசாங்கத்திடம் முறையான அனுமதி பெற்றுக் கடம்பா நடவடிக்கையைச் செயல்படுத்தலாம்" என்று கூறினேன்.

ஆட்சியரும் ஒப்புக் கொண்டு "கடம்பா கண்மாயை உடைத்துக் கடைமடைப் பகுதிகளுக்கு நீர் கொண்டு செல்ல அரசாங்கத்திடம் அனுமதி பெறுகிறேன்" எனக் கூறினார். பெரும் ஆச்சரியமாக ஒரு வாரத்திலேயே எங்களுக்கு அனுமதி கிடைத்தது. மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்கள் "தற்போது செயல்படுத்துவது உங்கள் கையில்" என்றார்.

அதே நாளில் உதவி ஆட்சியர் திரு.வெங்கட கிருஷ்ணா, ஐ.ஏ.எஸ்., அவர்களைச் சந்தித்தேன். அவரும் எனக்கு நண்பர்தான். நாங்கள் ஆலோசனை செய்து கடம்பா கண்மாய்ப் பாசனதாரர்களைக் கண்மாயை உடைப்பதற்கு ஒப்புக் கொள்ளுமாறு கோரிக்கை வைத்தோம். ஆனால் விவசாயிகள் எதிர்ப்புத் தெரிவித்தார்கள். எனவே நாங்கள் கடம்பா கண்மாயின் விவசாய சங்கத் தலைவர் அவர்களைத் திருநெல்வேலியில் சந்தித்தோம். அப்பொழுது இரவு 8 மணி. விவசாய சங்கத் தலைவர் ஓர் ஓய்வுபெற்ற கோட்டாட்சியர்.

அவர் இத்திட்டத்திற்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்தார். நான் நிலைமையை அவரிடம் விளக்கிக் கூறினேன். கடைமடைப் பகுதிகளுக்கு நீர் அவசியம் வேண்டும் என்பதை எடுத்துக் கூறினேன். அவர் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்து, இது ஒரு முன் உதாரணமாக ஆகிவிடும் என்று மறுத்துவிட்டார்.


மாண்புமிகு மத்திய அமைச்சர் திரு. வெங்கய்யா நாயுடு அவர்கள் செயல்வடிவ மாதிரிக் கட்டுமானப் பணிகளைப் பார்வையிடுகிறார்.

அதற்கு நான் "இது சாதாரணமாக நடப்பது இல்லை. இது ஓர் அரிய நிகழ்வாகும்". எனவே, அரசு அதிகாரியாக எங்கள் பணியைச் செய்ய விடுமாறு கேட்டுக் கொண்டேன். அதற்கு அவர் "நான் ஒத்துக்கொள்ள மாட்டேன். நான் ஒத்துக் கொண்டாலும் எனது மக்கள் கண்மாய்க் கரையை உடைப்பதற்கு ஒத்துக்கொள்ள மாட்டார்கள்" என்றார். அதற்கு நான், "இது ஓர் அரசு ஆணை. ஆகவே எங்களது கடமையைச் செய்ய விடுங்கள்" என்று கூறினேன்.

மேலும் நான் கூறினேன் "உங்கள் மக்களை எந்த வன்முறையிலும் ஈடுபட வேண்டாம் என எச்சரிக்கை செய்யுங்கள். நாங்கள் கண்டிப்பாகக் கண்மாய் கரையை உடைத்துத் தண்ணீரைக் கீழே கொண்டு செல்வோம்". நான் மற்றும் துணை ஆட்சியர் இருவரும் ஸ்ரீவைகுண்டம் சென்றோம். நாங்கள் ஆலோசனை செய்து எந்த ஓர் உயிருக்கும், பொருளுக்கும் ஆபத்து வரக்கூடாது என்று தீர்மானித்தோம். எனவே 52 கிராமங்களிலும் இரவோடு இரவாக 144 தடை உத்தரவு பிறப்பித்தோம்.

மேலும் ஒவ்வொரு கிராமத்திலும் ஆயுதப் படை வாகனம் நிறுத்தப்பட்டது. யாரும் கிராமத்தைவிட்டு வெளியே வரக்கூடாது என்று உத்தரவு போட்டோம். மேலும் கடம்பா கண்மாய் கரை திறக்கும் இடத்தில் மூன்று காவல்துறை வாகனங்களை நிறுத்தினோம்.

கண்மாய்கரையை உடைப்பது எளிதான காரியம் இல்லை. சுமார் 500 வேலையாட்கள் மூலம் அந்தப் பணியை விரைந்து முடிக்க வேண்டும். எனவே அன்றிரவே விவசாய சங்கத் தலைவர் திரு. இராஜபலவேசம் அவர்களைச் சந்தித்து, "300 ஆட்கள் இந்தப் பணிக்குக் காலை 6 மணிக்கு வேண்டும். அவர்கள் தட்டு, மண்வெட்டி, கடப்பாரை முதலியவற்றை எடுத்துக் கொண்டு வரவேண்டும்" என்று கூறினேன். அவர் ஏற்பாடு செய்வதாக உறுதி அளித்தார்.

மற்றொரு விவசாய சங்கத்தலைவர் திரு. அய்யாதுரை அவர்களை சந்தித்தேன். அவரிடம் சுமார் 300 வேலையாட்களைக் காலை 6 மணிக்கு அழைத்து வரும்படி கூறினேன். அவர் தேவையான கருவிகளுடன் அழைத்து வருவதாகக் கூறினார். நானும், துணை ஆட்சியரும் அதிகாலை 6 மணிக்கெல்லாம் கண்மாய்க் கரையைத் தோண்டும் இடத்திற்குச் செல்ல வேண்டுமென்று முடிவெடுத்தோம்.

இதற்கிடையில் நான் எனது குடும்ப உறுப்பினர்களின் பாதுகாப்புக் குறித்துக் கவலை கொண்டேன். அவர்கள் தாமிர பரணி ஆற்றின் தெற்குக் கரையிலுள்ள பங்களாவில் குடியிருந்தார்கள். ஸ்ரீவைகுண்டம் நகரம் முழுவதும் ஆற்றின் வடக்குக் கரையில் இருந்தது. பங்களாவில் லஸ்கர் மற்றும் அலுவலக உதவியாளர்கள் உடனிருந்தாலும் போராட்டக்காரர்கள் முன் இவர்கள் ஒன்றும் செய்ய முடியாது. எனவே எனது குடும்ப உறுப்பினர்களை நகரில் குடியிருக்கும் எனது நண்பர் வீட்டிற்கு அனுப்பிப் பாதுகாப்பாக இருக்கும்படி கூறினேன்.

அதிகாலை 6 மணிக்குக் கடம்பா கண்மாய்க்கு எனது அலுவலக வாகனத்தில் சென்றடைந்தேன். துணை ஆட்சியரும் என்னுடன் அங்கு சேர்ந்து கொண்டார். திரு. இராஜபலவேசம் அவர்கள், கூறியதுபோல 300 வேலையாட்களை அழைத்து வந்தார். அதேபோல, அய்யாத்துரை நாடார் அவர்களும் ஆட்களை அழைத்து வந்தார்கள்.

கண்மாய்கரையை உடைக்கும் பணி காலை

6 மணிக்கு முழுவீச்சில் தொடங்கியது. ஆய்வு மாளிகையில் நாங்கள் இருக்கும்பொழுது கிராமத் தைச் சேர்ந்த 2 விவசாய சங்க உறுப்பினர்கள் எங்களைக் காண வந்தார்கள். 144 தடை உத் தரவை மீறி எப்படியோ அவர்கள் வந்து விட்டார்கள். காவல்துறை அவர்களை அனு மதிக்கவில்லை. காவல்துறை ஆய்வாளர் அவர்கள் என்னிடம் வந்து "இரண்டு பேர் மிகவும் பரபரப்பாக இருக்கிறார்கள். உங்களைச் சந்திக்க அனுமதி கேட்கிறார்கள்" என்றார். அதற்கு நான் "ஒன்றும் கவலைப்பட வேண்டாம். அவர்களை அனுமதியுங்கள். நாங்கள் அவர்களைச் சந்திக் கிறோம்" எனக் கூறினேன்.

அவர்கள் வந்தார்கள். நான் அவர்களை அமரச் சொன்னேன். கோபமாக என்னிடம் அவர் கள், "நீங்கள் இன்று சாதித்துவிட்டீர்கள். இதை நாங்கள் நிச்சயம் ஏற்றுக்கொள்ள மாட்டோம். இப்போது எதுவும் செய்ய முடியாது. ஆனால் பின்நாளில் பழிவாங்குவோம்" எனக் கூறினார்கள். நான் கூறினேன் "இதோ பாருங்கள், நாங்கள் சரியானதைத்தான் செய்திருக்கிறோம். உங் களுக்கு இப்பொழுது தண்ணீர் தேவையில்லை, ஆனால் தங்கள் விவசாய சகோதரர்களுக்குத் தண்ணீர் மிகவும் அவசியமாகத் தேவைப் படுகிறது. ஆகவே இதில் என்ன தவறு இருக் கிறது. தண்ணீர் உங்களுக்கு மட்டும் சொந்தம் அல்ல" என்றேன். மேலும் அவர்களுடன் பேசிப் பார்த்தோம். அவர்கள் திருப்தி அடையவில்லை. அவர்கள் சென்றுவிட்டார்கள்.

நானும் உதவி ஆட்சியரும் அங்குத் தங்கி விட்டோம். இரவு முழுவதும் தோண்டும் பணி நடந்தது. மறுநாள் மாலையில் கண்மாய் திறக்கப்பட்டது. கடைமடை பகுதிகளுக்குத் தண்ணீர் சென்றது. அங்கு வேலை செய்தவர்கள் மத்தியில் பெரும் மகிழ்ச்சியைக் காண முடிந்தது. வேலை செய்தவர்களில் பெரும்பாலானோர் விவ சாயிகளே. எனக்கு இது பெரும் மன நிறை வினைக் கொடுத்தது.


திரு. ஏ.சி. காமராஜ் பொதுப்பணித் துறைப் பொறியாளராகப் பணியாற்றியபோது...

இப்பணியில் ஈடுபட்டோருக்குத் தேவையான உணவு மற்றும் சவுகரியங்கள் அனைத்தையும் விவசாய சங்கத் தலைவர்கள் திரு. இராஜபல வேசம் மற்றும் திரு.அய்யாதுரை நாடார் அவர்கள் பார்த்துக் கொண்டார்கள். அவர்கள் செலவைப் பற்றிக் கவலைப்படவில்லை.

ஒவ்வொரு கண்மாய்க்கும் ஒரு சங்கம் இருந்தது. ஒவ்வொரு சங்கமும் ரூ.1 இலட்சம் நிதி வைத்திருந்தார்கள். அந்தக் காலகட்டத்தில் இது ஒரு பெருந்தொகையாகும். சங்க உறுப்பினர்கள் தண்ணீருக்காகப் பொறியாளர்களைப் பார்க்க வரும்பொழுது குறைந்தபட்சம் இரண்டு கார்களில் வருவார்கள். அந்த அளவிற்கு அவர்களிடம் வசதி இருந்தது.

கடம்பா கண்மாய் சங்க விவசாயிகள் எனக்கும், செயற்பொறியாளர் அவர்களுக்கும் எதிராக நீதிமன்றத்தை நாடினார்கள். நாங்களும் அதற்குத் தயாராகவே இருந்தோம். ஆனால் சில நாட்கள் கழித்து அவர்கள் என்னிடம் வந்து எப்படியிருந்தாலும் தண்ணீருக்கு உங்களிடம்தான் திரும்ப வர வேண்டும். எனவே நீதிமன்ற நடவடிக் கையைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறோம் என்று கூறினார்கள். இது வரவேற்கத்தக்க சம்பவமாகும்.

நான் ஏற்கனவே கூறியது போல, ஒரு பொருள் அபரிமிதமாக இருக்கும் பொழுது சச் சரவுகள் எழாது. தண்ணீர் இருப்பளவைக் கூட்ட முடியுமா? ஆம் முடியும். நம் நாட்டில் ஏராளமான தண்ணீர் இருக்கிறது. அதை நாம் முழுவதுமாகப் பயன்படுத்துவதில்லை. ஆங்கிலேயப் பொறியாளர் சர்.ஆர்தர் காட்டன் கூறியது போல நம் நாட்டில் எல்லாத் தேவைகளுக்குமான தண்ணீர் அளவை விடப் பத்து மடங்கு நம் நாட்டில் இருக்கிறது.

நதிகள் இணைப்பது புது சிந்தனையல்ல. சர். ராமசாமி ஐயர் கங்கையையும், காவிரியையும் இணைக்க முயற்சி எடுத்தார். மிகவும் பிரசித்தி பெற்ற பொறியியல் வல்லுநரான ‘பாரத ரத்னா’ டாக்டர். விஸ்வேஸ்வரய்யா கங்கை உபரிநீரைப் பயன்படுத்த ஒரு திட்டம் கொடுத்தார்.

அதேபோல டாக்டர்.கே.எல்.ராவ் கங்கை – காவிரியை இணைக்க ஒரு விரிவான திட்டத் தைக் கொடுத்தார். கேப்டன் டஸ்டர் நதிகளை இணைக்கும் "மாலைக் கால்வாய் " திட்டத்தைக் கொடுத்தார்.

தற்பொழுது "தேசிய நீர் மேம்பாட்டு முகாமை" என்ற மத்திய அரசின் கீழ் இயங்கும் நிறுவனம் நதிகள் இணைப்புத் திட்டத்தைக் கொடுத்திருக் கிறது. வடக்கே இமயமலை நதிகளை இணைக் கவும், தெற்கே தீபகற்ப நதிகளை இணைக்கவும் இருவேறு திட்டங்களைக் கொடுத்துள்ளது. மேலும் கடந்த 20 ஆண்டுகளாக விரிவான ஆய்வு கள் மேற்கொண்டிருக்கிறார்கள். இதற்கு மேலும் பல ஆண்டுகள் தேவைப்படலாம்.

இந்த சூழ்நிலையில், நதிநீர் இணைப்புத் திட்டத்தைச் செயல்படுத்தினாலும் பிரச்சனைகள் இருந்துகொண்டே இருக்கும். எந்த மாநிலமும் தன்னிடமுள்ள தணண்ணீரை மற்றொரு மாநிலத்திற்கு வழங்காது என்பதால், மேற்கண்ட திட்டங்கள் அனைத்தும் சாத்தியமற்றது என்ற முடிவுக்கு வந்தேன். அதனால் மாநிலங்கள் ஏற்றுக் கொள்ளக் கூடிய பிரச்சனைகள் இல்லாதத் திட்டம் வேண்டுமென எண்ணினேன். எனவே எனது பொதுப்பணித்துறை வேலையை ராஜி னாமா செய்து முழுநேரமாக ஒரு புதிய திட்டத்தை உருவாக்குவதில் என்னை ஈடுபடுத்திக் கொண்டேன்.

அதன்படி கடும் ஆராய்ச்சிகளுக்குப் பின்னர் கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலைத் (நவீன நீர் வழிச்சாலை) திட்டத்தை உருவாக்கினேன். இது புதுமையானத் திட்டம். மற்ற எல்லாத் திட்டங் களை விடவும் வேறுபட்ட மற்றும் சிறந்த திட்ட மாகும்.

இதன் புதுமை என்னவென்றால், கடலுக்குச் செல்லும் வெள்ள நீரை மட்டுமே சேமித்துத் தேவையான இடங்களுக்குப் பகிர்ந்தளிப்பதாகும். தற்போதுள்ள எந்தத் திட்டத்தையும் அது பாதிக் காது. பொதுவாக ஒரு கால்வாயில் தண்ணீர் கீழ்நோக்கித்தான் போகும். அதை அனைவரும் அறிவர். ஆனால் சமதளக் கால்வாயில் (Contour Canal) தண்ணீர் இரு வழியிலும் போகும். அதா வது ‘அ’ என்கிற ஓர் ஆற்றிலிருந்து தண்ணீர் ‘ஆ’ என்கிற மற்றொரு ஆற்றுக்குத் தண்ணீர் செல்லும்.


திரு. ஏ.சி. காமராஜ் பொதுப்பணித் துறைப் பொறியாளராகப் பணியாற்றியபோது...

பின்னர் மீண்டும் அதே கால்வாயில் ‘ஆ’ ஆற்றிலிருந்து ‘அ’ ஆற்றுக்கும் தண்ணீர் செல் லும். அதாவது மின் இணைப்புப் போன்று இது நீர்ப் பிணைப்பு. அதாவது மின்சாரம் போன்று தண் ணீர் எங்கு வேண்டுமானாலும் போகும் வரும். விளக்கமாகக் கூற வேண்டுமானால், தண்ணீர் வடக்கே இருந்து தெற்கேயும் தெற்கேயிருந்து வடக்கேயும் அதேபோல் மேற்கிலிருந்து கிழக்கே யும் கிழக்கிலிருந்து மேற்கேயும் போகும். இதுவே இத்திட்டத்தினுடைய பெரும் பயனும் புதுமையும் ஆகும்.

**விருதுநகர் காமராஜ் பொறியியல் கல்லூரி யில் அமைக்கபட்ட செயல்வடிவ மாதிரி :**

நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் குறித்து மாணவ சமுதாயத்திடம் விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் விருதுநகர் காமராஜ் பொறியியல் கல்லூரி நிர்வாகத்தினர் பேராசிரியை திருமதி லட்சுமி அவர்கள் தலைமை யில் ஒரு குழுவினை ஏற்படுத்தி, நவீன நீர்வழிச் சாலைத் திட்டத்தின் செயல்வடிவ மாதிரியைக் கல்லூரிக்குள் உருவாக்கினர். அதனை இன்றும் பல்வேறு ஊர்களிலிருந்து மாணவர்களும் விவசாயிகளும் பொதுமக்களும் வந்து பார்த்துத் திட்டத்தைப் புரிந்து கொள்கின்றனர்.

இந்தச் செயல்வடிவ மாதிரிக் கட்டுமானப் பணியின்போது, அங்கு வந்திருந்த மாண்புமிகு மத்திய அமைச்சர் திரு. வெங்கய்யா நாயுடு அவர் கள் நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் ஒன்று மட்டும் நிறைவேற்றப்பட்டால், ஒட்டுமொத்த இந்தியாவே லட்சுமி (செல்வமிக்க) நாடாக மாறிவிடும் எனப் புகழ்ந்தார்.




# கொழும்புத் தமிழ்ச் சங்கம் கருத்தரங்கம்

விழாவில் 'இனிய நந்தவனம்' சந்திரசேகரின் 'நான் கண்ட அந்தமான்' நூல் வெளியீடு. பிரதியைப் பெற்றுக் கொள்ளும் 'ஓம் சக்தி' இணையாசிரியர் கவிஞர் பெ. சிதம்பரநாதன் அவர்கள்.

கொழும்புத் தமிழ் எழுத்தாளர் ஒன்றியம், 'இனிய நந்தவனம்' மாத சஞ்சிகை இணைந்து நடத்திய சமகாலத் தமிழ் இலக்கியம் நோக்கும், போக்கும் கருத்தரங்கம் கொழும்புத் தமிழ்ச் சங்கத்திதில் 24.6.2018 அன்று சிறப்பாக நடைபெற்றது.

கொழும்புத் தமிழ்ச் சங்கத் தலைவர் தம்பு சிவசுப்பிரமணியன் தலைமையில் நடைபெற்ற இக் கருத்தரங்கத்திற்கு, இலக்கியப் புரவலர் ஹாசிம் உமர் முன்னிலை வகித்தார். 'இனிய நந்தவனம்' ஆசிரியர் நந்தவனம் சந்திரசேகரன் தொடக்க வுரையாற்றி நிகழ்வைத் தொடங்கி வைத்தார்.

அண்மைக் காலத்தில் இலங்கையிலும் மலேசியாவிலும்தான் தமிழ் இலக்கியம் மிகச் சரி யாகப் பதியப்படுவதாகவும் தமிழ் எழுத்தாளர்கள் சரியாக அங்கீகரிக்கப்படுவதாகவும் நந்தவனம் சந்திரசேகர் குறிப்பிட்டார்.

தமிழகப் பத்திரிகைகளின் போக்கை நோக் கும்போது, வேதனையைத்தான் பகிர்ந்துகொள்ள முடிகிறது. காரணம் தமிழகப் பத்திரிகைகள் பெரும்பாலான வணிகத்தை மட்டுமே நோக்க மாகக் கொண்டுள்ளன. சமூகத்திற்கு முரண் பாடான செய்திகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றன என்பதாகவும் குறிப்பிட்டார்.

இலங்கை ஞானம் சஞ்சிகை பிரதம ஆசிரியர் வைத்திய கலாநிதி தி.ஞானசேகரன் தலைமையில் நடைபெற்ற கருத்தரங்கில் எழுத்தாளர் மேமன் கவி, தமிழ்நாடு 'ஓம் சக்தி' மாத இதழ் இணை யாசிரியர் பெ. சிதம்பரநாதன், 'தினக்குரல்' பிரதம ஆசிரியர் பாரதி இராஜநாயகம் ஆகியோர் கருத் துரையாற்ற, தமிழக முன்னாள் அமைச்சர் என்.நல்லுசாமி நிறைவுரையாற்றிச் சிறப்பித்தார்.

கருத்தரங்கின் சிறப்பு நிகழ்வாக, நந்தவனம் சந்திரசேகரன் எழுதிய "நான் கண்ட அந்தமான்" என்ற நூல் வெளியிடப்பட்டது. தமிழக முன்னாள் அமைச்சர் என்.நல்லுசாமி வெளியிட இலக்கியப் புரவலர் ஹாசிம் உமர் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டார்.

'வீரகேசரி சங்கமம்' ஆசிரியர் ஜீவா சதா சிவம் நிகழ்வைத் தொகுத்து வழங்கினார். சென்னை ஸ்ரீஹரி அபிநய கிருஷ்ணா பரதநாட்டிய இசைப்பள்ளி மாணவிகளின் இசை நிகழ்ச்சியும், பரதநாட்டிய நிகழ்வும் அனைவருக்கும் இசை விருந்தாக அமைந்தன.

தமிழகத்திலிருந்து தொழிலதிபர் சாதிக் பாட்சா, மருத்துவர் இராமேஸ்வரி, சமூக ஆர்வலர் துரைராஜ் மற்றும் இலங்கைத் தமிழ் ஆர்வலர்கள், பேராசிரியர்கள், ஊடகவியலாளர்கள் பலரும் கலந்து கொண்டு விழாவைச் சிறப்பித்தனர்.

**– 'இனிய நந்தவனம்' சந்திரசேகர்**

## LED, கலர் டி.வி, ரெஃப்ரிஜிரேட்டர், ஏர்கண்டிஷ்னர், வாஷிங் மெஷின், மற்றும் அனைத்து தரமான வீட்டு உபயோக பொருட்களை குறைந்த விலையில் வாங்க சிறந்த இடம்.

Easy Finance Options
BAJAJ Finance

Exchange offer

Gift Coupons Available

*Free gift with every purchase

*Free delivery with in city Limits

Open on Sundays






*For purchase above RS.8000/- condition apply

| | | | | | |
|---|---|---|---|---|---|
| LG | SAMSUNG | SONY | PHILIPS | VIDEOCON | ONIDA |
| Godrej | Whirlpool | SIEMENS | IFB | | Prestige |
| ELGI ULTRA | Preethi | V-GUARD | BOSCH | Micromax nothing like anything | |
| VOLTAS LIMITED | Butterfly® | TATA Sky | CG Crompton Greaves | USHA | HAVELLS |
| BPL EMERGENCY LIGHT | Preethi INDUCTION COOK TOP | EUREKA FORBES Your friend for life | | CASCADE | VENUS WATER HEATER |

D by sr printes 9843110277



# நா. மகாலிங்கம் & கம்பெனி

68, Dr, Nanjappa Road, Near Central Bus Stand
Coimbatore - 641 018.
Ph: 2239834 / 2239841 / 2239803 / 2239811

Registered with Registrar of Newspapers for India No. 42582/83

Date of Publication
28-7-2018

Regd.No.CB/016/2018-20

OM SAKTHI - AUGUST - 2018

Dr. MAHALINGAM MCET COLLEGE OF ENGINEERING AND TECHNOLOGY Enlightening Technical Minds Estd. 1998

An Autonomous Institution

# Dr. MAHALINGAM
## COLLEGE OF ENGINEERING AND TECHNOLOGY

Affiliated to Anna University, Chennai; Approved by AICTE ; Accredited by NAAC with Grade 'A'
Udumalai Road, Pollachi - 642 003. Tel: 04259-236030/40/50 Fax: 04259-236070 www.mcet.in

20 MCET TWO DECADE OF DEDICATED SERVICE 1998-2018

COUNSELLING CODE **2706**


ACCREDITED BY NAAC WITH 'A' GRADE (3.61 Out of 4)



RANK BAND OF 151-200 in Engineering India Ranking 2018



TIER 1 ACCREDITED COURSES*



**85%** Students offered Placements

**654*** Final year students undergoing Internships



MCETConnect gives everyone beyond the classroom a learning-experience. Learning materials such as videos, presentations and eBooks can be shared through tablets. Self-assessment shall be done through Quiz, MCQs etc. Remote Session feature enables Subject Matter Experts from different locations to interact with the students.





### Arutchelvar Vidya Sakthi (AVS) Scholarship

₹ **70 Lakhs** will be awarded to **400** Meritorious Students every year

- I Year ₹ 10,000 each
- II Year ₹ 15,000 each
- III Year ₹ 20,000 each
- IV Year ₹ 25,000 each

## PROGRAMMES

### B.E. / B.Tech
(*Tier 1 - Accredited by NBA)

- Mechanical Engg.*
- Automobile Engg.*
- Civil Engg.*
- Electrical & Electronics Engg.*
- Electronics & Communication Engg.*
- Electronics & Instrumentation Engg.*
- Computer Science & Engg. *
- Information Technology *
- Mechatronics Engg.
- Production Engg.

### M.E. / MCA

- CAD / CAM
- Applied Electronics
- Computer Science & Engg.
- Communication Systems
- Structural Engg.
- Master of Computer Application

### Ph.D

- Mechanical Engg.
- Electrical & Electronics Engg.
- Electronics & Communication Engg.
- Computer Science & Engg.
- Civil Engg.

## Centres of Excellence (CoE)

- Rexroth Bosch Group – MCET-Bosch Rexroth Centre of Competence
- C-DAT – MCET-Centre for Design Analysis and Testing (C-DAT)
- TÜVRheinland® Precisely Right. – MCET-TUV Rheinland Centre for Automotive Technology
- Harita Techserv – MCET-Harita Techserv Centre
- SIEMENS – MCET-SIEMENS Centre for Digital Manufacturing
- cadence® – MCET - Cadence ASIC Centre of Excellence
- Altair – MCET-Altair Centre of Excellence
- swelect – SWELECT-MCET Centre for Solar PV Training and Research
- KEYSIGHT TECHNOLOGIES – MCET – KEYSIGHT Centre for RF Communication Systems
- TÜVRheinland® Precisely Right. KEMPPI The Joy of Welding – MCET-Rheinland Centre for Advanced Training (Welding & NDT)
- MITSUBISHI ELECTRIC Changes for the Better – MCET - MITSUBISHI ELECTRIC Centre for Factory Automation
- MCET- Centre for Research on Green Energy and Environment
- BOSCH Invented for life – MCET- BOSCH JOINT CERTIFICATION CENTRE
- JANATICS Pneumatic – MCET – JANATICS PNEUMATIC Centre for Pneumatics & Automation

## Uniqueness


An Autonomous Institution


Updated Industry ready Syllabus


Experienced Faculty with Industry Exposure


Research is an integral part of Curriculum


Industry Oriented Value added Programmes


Training on designing and manufacturing by Industry experts


Centres of Excellence in collaborations with industries


11000+ Alumni Network

**For Admissions Contact: Mob.: 98422 21292, 99429 55540 Email : admissions@mcet.in Web : www.mcet.in**

*A Campus with Global Vision*

NIA EDUCATIONAL INSTITUTIONS | Enlightening Minds